# சிவானந்தரின் சிறுகதைகள்



Acc. No. 282558

ஸ்ரீ சுவாமி சிவானந்தா

# சிவானந்தரின் சிறுகதைகள்

அருளியது :

**ஸ்ரீ சுவாமி சிவானந்தா**

தமிழாக்கம் :

திரு. C. ஜனகராஜன்

**சிவானந்தா நூற்றாண்டு விழா வெளியீடு**




**தெய்வீக வாழ்க்கைச் சங்கம்**

சிவானந்தா ஆஸ்ரமம்

இராசிபுரம் :: சேலம் ஜில்லா.

விலை ] 1986 [ ரூ.

SIVANANDA CENTENARY PUBLICATION

*All Rights Reserved by*

THE DIVINE LIFE TRUST SOCIETY

Sivananda Nagar, (U. P.) India.

* ○ *

Translation of:

"PARABLES OF SIVANANDA"

in Tamil

* ⊙ *

*Printed out of the magnanimous donation of:*

Humble Servant of the

HOLY MASTER

H. H. SRI SWAMI SIVANANDAJI MAHARAJ

Printed at The Literary Press, Salem - 636 001

# ஆசியுரை

நம் வாழ்க்கையில் ஒளியாகவும் வழிகாட்டியாகவும் விளங்கும் சத்குரு ஸ்ரீ சிவானந்தா அவர்களுக்கு வணக்கம்.

பல ஆண்டுகளாக எண்ணற்ற நூல்களை வெளியிட்டு குருமகராஜ் சுவாமி சிவானந்தா அவர்களின் புனிதமான ஞானயக்ஞப்பணியை இராசிபுரம் தெய்வீக வாழ்க்கைச் சங்கம் முறையாகவும், ஒழுங்காகவும், திட்டமிட்டும் நடத்தி வருகிறது. அதனால் தமிழ் நாட்டிலும் வெளிநாடுகளிலும் தமிழர்கள் வாழும் பகுதிகளில் இருக்கும் ஆயிரக்கணக்கான ஆன்மீக சாதகர்கள், அடியவர்களின் இல்லங்களில் சுவாமி சிவானந்தா அவர்களால் எழுதப்பட்ட வாழ்வில் மறுமலர்ச்சி உண்டாக்கும் நூல்களின் தமிழ் மொழிபெயர்ப்புக்கள் இன்று இருக்கின்றன.

இவ்வாண்டுக்கான ஞானயக்ஞத் தொடரில் "சிவானந்தரின் சிறுகதைகள்" என்ற நூலை திரு C. கனகராஜன் அவர்கள் மிக அற்புதமாக தமிழில் மொழி பெயர்த்துள்ளார்கள்.

இந்நூலை மிகச் சிறந்த முறையில் சேலம் லிட்டரரி பிரஸ்ஸார் அச்சடித்துக் கொடுத்துள்ளனர்.

இப்பணிக்குத் தேவையான பொருளை வாரி வழங்கியவர்கள், இப்புனிதமான பணியைச் செய்த நல்ல ஆன்மாக்கள், இந்த ஆன்மீக போதனைகளைப் படிப்பவர்கள் ஆகிய அனைவருக்கும் எல்லாம் வல்ல இறைவன் தெய்வீக அருளைப் பொழிய வேண்டுமெனப் பிரார்த்தனை செய்கிறேன்.

Swami Chidananda
ॐ

# பொருளடக்கம்

## 3—வது அத்தியாயம்
## குருவின் பெருமை



## 4—வது அத்தியாயம்
## சாதகனின் கருவி

## 5—வது அத்தியாயம்
## தொண்டு மார்க்கம்



## 6—வது அத்தியாயம்
## பக்தி மார்க்கம்



## 7—வது அத்தியாயம்
## மனதை வெற்றி கொள்ளுதல்

## 8—வது அத்தியாயம்
## ஞான மார்க்கம்



## 9—வது அத்தியாயம்
## ஜீவன் முக்தரின் இயல்பு



## பகுதி இரண்டு : மற்ற சிறு கதைகள்

## அத்தியாயம் ஒன்று

# தத்துவம்

### 1. பாலில் கலந்திருக்கும் வெண்ணெய்

ஒரு நகரத்தில் வாழ்ந்துவந்த ஒரு சிறுமி முதல் முறையாக கிராமத்தில் உள்ள தனது வீட்டிற்குச் சென்றாள். இரவில், அனைவரும் உறங்குவதற்கு முன்னதாக தாய் நல்ல பசும்பால் இருந்த பானையைத் திறந்தாள். அதில் சிறிதளவு மோரை ஊற்றினாள். இதைப் பார்த்துக்கொண்டிருந்த சிறுமி, ''அம்மா! அது மோர். அதை ஏன் பாலில் கலந்தாய்? பால் கெட்டுப்போய்விடுமே!''

மகளின் கேள்விக்கு அன்னை பதிலளித்தாள். ''மகளே! பாலிலிருந்து வெண்ணெயை எடுப்பதற்கு பாலை இப்படித்தான் பக்குவப்படுத்த வேண்டும்.'' ''ஆனால் பாலில் வெண்ணெய் எங்கே இருக்கிறது?'' என்று மகள் கேட்டாள். ''அன்பு மகளே, பாலில் ஒவ்வொரு துளியிலும் வெண்ணெய் இருக்கிறது. ஆனால் இப்போது நீ அதைப் பார்க்க முடியாது. அதை காலையில் உனக்குக் காட்டுகிறேன்'' என்று தாய் சொன்னாள். இரவில் திரவமாக இருந்த பொருள் காலையில் திடப்பொருளாக இருப்பதை மகள் கண்டாள். தாயார் பானையில் ஒரு மத்தைப்போட்டு தயிரைத் தீவிரமாகக் கடையத் துவங்கினாள். தயிரின்மேலே வெண்ணெய் திரண்டு வந்தது. பிறகு தாயார் அதைத் திரட்டி எடுத்து மகளின் கையில் கொடுத்தாள். மகள் ஆச்சரியத்துடன் அதைப் பார்த்தாள். தாய்

மகளுக்கு விளக்கமாகச் சொன்னாள் : "பாலுடன் கலக்கப்படும் மோர், பாலை உறையச் செய்கிறது. பால் தயிராக்கப்படுகிறது. பிறகு நீ அதைக் கடைய வேண்டும். பால் முழுவதிலும் நிறைந்து ஆனால் மறைந்து இருக்கும் வெண்ணெய் இந்த முறையின் மூலம் எடுக்கப்படுகிறது. முதலில் நீ அதைப் பார்க்க முடியவில்லை. ஏனென்றால் அது மறைந்திருந்தது. இப்போது அது எங்கிருந்து வந்தது? பாலிலிருந்துதான் வந்தது. அது பாலில் எப்போதும் இருக்கிறது என்பதை இப்போது நீ அறிந்துகொள். தயிரைக் கடையும் வரை காத்திருந்து வெண்ணெய் தான் இருப்பதை வெளிப் படுத்திக் கொள்ளுகிறது. நீ பெருமகிழ்ச்சி அடை கிறாய்". மகளும் தாய் செய்ததுபோலவே தயிரைக் கடைந்து வெண்ணெய் எடுத்தாள்.

இதுபோல உலகியல் வாழ்வில் மூழ்கியிருக்கும் ஒரு மனிதன் ஒரு மகாத்மாவை அணுகி, "சாது மகராஜ்! நீங்கள் ஏன் உலகைத் துறந்துவிட்டு உங்கள் வாழ்வில் வைராக்யம் மற்றும் தியாகம் என்னும் புதிய பொருளைச் சேர்த்திருக்கிறீர்கள்?" "சகோதரா! இறைவனை அனுபவித்து உணரவே நான் இவ்வாறு செய்கிறேன்" என்று சாது பதிலளித்தார். "கடவுள் எங்கு இருக்கிறார்?" "அவர் எங்கும் இருக்கிறார்." உலகியல் வாழ்வில் உழலும் மனிதன் கடவுளைக் காண்பதில்லை. ஆதலால் கடவுள் இருப்பதாக அவன் நம்பவில்லை. திடபுத்தியில்லாத மனத்தை திடமானதாகவும், உறுதியானதாகவும் ஆக்குவது எப்படி என சாது அந்த மனிதனுக்கு விளக்கிக் கூறினார். ஒருநிலைப் பட்டமனம், தியானம் என்ற மத்தின்மூலம் அந்தக் கரணம் என்ற திடப்பொருளைக் கடையவேண்டும். அப்போது இறை அனுபவம் கிடைக்கும். இறைவன் எங்கும் நிறைந்திருக்கிறார், படைக்கப்

பட்டுள்ள ஒவ்வொரு அணுவிலும் அவர் நிலைத்திருக்கிறார். சாதனை என்னும் இந்த முறையின் மூலம் அல்லாது வேறு எந்த வழியிலும் இறைவனைக் காணமுடியாது; உணரமுடியாது.

பாலில் வெண்ணெய் இருக்கிறது என்றும் கடைவதன்மூலம் அதனைப் பெறலாம் என்றும் மகளுக்கு உணர்த்த அவளது தாய் தேவைப்படுகிறாள். அதுபோல இறைவன் இருக்கிறார் என்றும் அவர் எங்கும் நிலைத்திருக்கிறார் என்றும் சாதனையின் மூலம் அவரை அடையலாம் என்றும் ஒரு மனிதனுக்கு உணர்த்த ஒரு குரு தேவைப்படுகிறார். சாதகன், குருநாதரின் உபதேசத்தின்படி நடந்தால் அவனும் இறைவனை அனுபவித்து உணரலாம்.

## 2. வீட்டுக் கூரையின் மீது காகம்

ஒரு மனிதன் ஒரு கிராமத்துக்கு வந்தான். நான்கு தெருக்கள் சந்திக்கும் இடத்தில் நின்று கொண்டிருந்த ஒருவரைப் பார்த்து அந்த மனிதன், ''நண்பரே, ஐயர் அவர்களின் வீடு எது?'' என்று கேட்டான். ''அதோ அந்த வீட்டுக் கூரையின்மீது காகம் ஒன்று உட்கார்ந்திருப்பதைப் பார்த்தீர்களா? அந்த வீடு தான் ஐயர் அவர்களின் வீடு'' என்று கிராமவாசி பதிலளித்தார். அந்த புதிய மனிதனும் ஐயரவர்களின் வீடு நோக்கிச் சென்றான். அந்த மனிதன் மீண்டும் ஒரு வாரம் கழித்து வந்தான். அப்போது அந்தத் தெருவின் எந்த வீட்டுக் கூரையின் மீதும் காகம் அமர்ந்திருக்கவில்லை. இது கண்டு அவன் திகைத்துப்போனான். அருகில் நின்ற ஒருவரைப்பார்த்து ''ஐயரவர்களின் வீடு எது'' என்று கேட்டான் ''கல்லால் கட்டப்பட்டுள்ள மூன்று மாடி கட்டிடம் அதோ தெரிகிறது பாருங்கள், அதுதான் ஐயரவர்களின் வீடு'' என்று

பதில் வந்தது. அதன் பிறகு மனிதனுக்கு அந்த வீடுபற்றிச் சந்தேகமே எழவில்லை.

சாஸ்த்ரம் இறைவனைக் குறிப்பிடும்போது பிரபஞ்சத்தின் மூலப் பரம்பொருளாக பிரம்மத்தைக் குறிப்பிடும்போது "**யதோ வா இமானி பூதானி ஜயந்தே**" என்றெல்லாம் குறிப்பிடுகின்றது. ஆனால் இது போதாது. ஏனெனில் படைப்பே இல்லாத காலங்களும் இருந்தன. ஆகவே பிரம்மத்தைப்பற்றிய திட்டவட்டமான விளக்கமாக இதனை ஏற்க முடியாது. ஆகவே அவை "**சத்யம், ஞானம், அனந்தம், ப்ரம்மா**" என்பது போன்ற திட்டவட்டமான குறிப்புக்களைத் தருகின்றன. இந்தக் குறிப்புக்களைப் பின்பற்றுகிற எவரும் இறைவன் அல்லது பிரம்மம் என்னும் லட்சியத்தை அடையாமல் இருக்க முடியாது.

## 3. அரசன் கண்ட கனவு

ஒரு அரசன் தனது அரண்மனையில் உறங்கச் சென்றான். அரண்மனைக்கு எல்லாப் பக்கங்களிலும் பலத்த காவல் இருந்தது. ஒரு ஈ எறும்புகூட அரண்மனைக்குள் நுழைந்து அரசனைத் துன்புறுத்த முடியாது. படுக்கை அறையில் சகல வசதியும் இருந்தது. ஒரு குறையும் இல்லை. அரசன் ஆனந்தமாக ஆழ்ந்த உறக்கத்தை அனுபவிக்கும் அளவில் அங்கு வசதிகள் இருந்தன.

அரசன் உறங்கத் துவங்கியதும் ஒரு கனவு கண்டான்: ஒரு குள்ளநரி எப்படியோ அரண்மனைக்குள் நுழைந்து விட்டது. அரசன்மீது பாய்ந்தது. அவனது இடது காலின் முன்பகுதியைக் கடித்து விட்டது. இதற்கிடையில், அவனது எதிரிகள் அவனது ராஜ்யத்துக்குள் புகுந்து அவனது உடமைகள் அனைத்தையும் கைப்பற்றி விட்டதாகக்

கேள்விப் படுகிருன். அரசன் அச்சமுற்று தப்பிஓட முயற்சிக்கிருன். ஆனுல் காலின் முன்பகுதி வலிக்கிறது. அவன் மருத்துவ உதவிக்காக ஒரு டாக்டரிடம் செல்கிருன். ஆனுல் டாக்டர் சிகிச்சை அளிக்க மறுத்து விடுகிருர். அரசன் ராஜ்யத்தை இழந்து விட்டதால் டாக்டருக்குக் கொடுப்பதற்கு அரசனிடம் பணம் இருக்காது என்று எண்ணி டாக்டர் அவ்வாறு மறுத்து விட்டார். அவன் ஆண்டிக் கோலத்தில் காட்டுக்குள் ஓடினுன், அங்கு ஒரு மகாத்மாவைக் கண்டான். அவர் அவனது காயத்துக்கு மருந்து போட்டார் — அரசன் விழித்து எழுந்த போது அந்த மகாத்மாவைப் பற்றிய எண்ணமும் நன்றி உணர்வும் அரசனின் இதயத்தில் நிறைந்திருந்தது,

கனவு கலைந்தது. ஈ எறும்புகூட நுழைய முடியாத அரண்மனையில் தங்கக் கட்டிலில் அரசன் படுத்திருந்தான். அவன் குள்ளநரியைக் காணவில்லை; தன் காலில் காயத்தையும் காணவில்லை; காட்டுக்கும் அரசன் ஓடவில்லை. ஆனுல் மகாத்மாவின் கருணை அவன் மனத்தில் நிறைந்திருந்தது. தான் கண்டது கனவுதான் என அரசன் உணர்ந்த போதிலும் மகாத்மா காயத்தைக் குணப்படுத்திச் செய்த தொண்டு அவன் மனத்தில் நிலைத்து விட்டது. அதிலிருந்து அவன் உற்சாகம் பெற்ருன்.

அதுபோல ஜீவன், பிரபஞ்சத்தின் சக்கரவர்த்தி. அதில் குறை ஏதுமில்லை. அதில் உன்னதமான பேரானந்தம் இருக்கிறது. அதுவே பேரானந்தத் தன்மையுடையது. ஆனுல் அதன்மீது அறியாமை என்னும் திரை விழுகிறபோது அது கனவு காணுகிறது. அந்தக் கனவில் அகந்தை என்னும் குள்ளநரி அதைக் கடிக்கிறது. புலன்கள் என்னும் எதிரிகள் அதன்மீது ஆதிக்கம் செலுத்து

கின்றன. அது இதுவரை அனுபவித்து வந்த மகிழ்ச்சி இல்லாமல் போய்விட்டது. அது துன்பத்தையும், வேதனையையும் அனுபவிக்கிறது. துன்பத்திலிருந்து விடுபட்டு இன்பத்தை அடையும் வழியை நாடி அது இங்கும் அங்கும் அலைகிறது. உலகில் உள்ள ஒவ்வொருவனும் சுயநலக்காரன்தான். உடனடியாக லாபம் எதுவும் கிட்டாது என்றால் எவரும் பிறருக்கு குடிப்பதற்குத் தண்ணீர்கூடக் கொடுப்பதில்லை. உலகின் போக்கில் வெறுப்புற்ற ஜீவன் காடு நோக்கி ஓடுகிறது; சத்குருவின் தாமரைத் திருவடிகளை அடைகிறது. குருநாதர் அதன் புண்ணை குணப்படுத்துகிறார். அதன் உயர்ந்த ஆத்மீக உணர்வைத் தட்டி எழுப்புகிறார். எழுச்சி பெற்ற ஆத்மா நிகழ்ந்தது அனைத்தையும் அறிகிறது. நிகழ்ந்தது நீண்ட கனவைத் தவிர வேறு எதுவும் இல்லை என அது தெரிந்துகொள்ளுகிறது. பிறப்பு-இறப்பு என்னும் கொடிய நோயிலிருந்து ஜீவனை குணப்படுத்திய சத்குருவின் நினைவும் நன்றியுணர்வும் மட்டும் நிலைத்திருக்கிறது. குருவின் உபதேசமும், கருணையும் மட்டும் நிலைத்திருக்கிறது. கனவின் மற்றவை அனைத்தும் மறைந்துவிடுகின்றன. எழுச்சி பெற்ற ஆத்மா தான் சக்கரவர்த்தி என மீண்டும் உணருகிறது. தன்னை எதுவும் பாதிப்பதில்லை என்றும், அறியாமையோ, அகந்தையோ இல்லையென்றும் அந்தமில்லாக் காலங்காலமாக அது பேரானந்தமயமான, அமைதியான, அமரத்துவம் பெற்ற அதே ஆத்மாவாக விளங்கி வருகிறது.

## 4. கண்ணாடியில் தெரியும் உருவத்துக்கு அலங்காரம் செய்ய விரும்பிய பெண்

ஒரு பெண் கண்ணாடிக்குமுன் நின்று தனது உருவத்தைக் கண்ணாடியில் பார்த்தாள். அவளது

உடல் அழகற்று இருப்பதைக் கண்டாள். கண்ணாடியில் தெரிந்த அவளது உருவம் அவளுக்கு வெறுப்பூட்டியது. அவள் உள்ளே ஓடிச்சென்று நிறைய நகைகளை எடுத்துக்கொண்டு வந்தாள். கண்ணாடியில் தெரிந்த உருவத்துக்கு அவற்றை அணிவிக்க விரும்பினாள். ஆனால் முடியவில்லை. அந்த உருவத்துக்கு அருகில் நகைகளைக் கொண்டு சென்றாள். ஆனால் உருவத்துக்கும் நகைக்கும் சம்பந்தமில்லாமல் நகைகள் தனித்தே நின்றன. கடைசியில் அந்த நகைகளைத் தானே அணிந்து கொண்டாள். அப்போது கண்ணாடியில் தெரியும் உருவத்தின் கழுத்திலும் நகை இருந்தது. அந்த உருவம் அழகாகத் தோன்றியது. அந்தப் பெண் இதை வியப்புடன் பார்த்தாள்.

கண்ணாடி உருவம்போல ஜீவன் உள்ளது; அந்தப் பெண்ணைப்போல ஆத்மா அல்லது இறைவன் இருக்கிறான். அறியாமையில் உழலும் மனிதன் தன்னிடம் வளமில்லை, பணமில்லை, மகிழ்ச்சியில்லை என்று எண்ணுகிறான். உலகியல் பொருட்களை நாடி அவன் ஓடுகிறான். செல்வத்தை யும், ஆடம்பரப் பொருட்களையும் தனக்காகச் சேகரித்துக் கொள்ளுகிறான். இது அவனைத் திருப்திப் படுத்தவில்லை. அவனது ஆத்மாவை உயர்த்த வில்லை! உலகத்தின் செல்வத்தால் தன்னை அழகுபடுத்திக்கொள்ள மனிதன் எந்த அளவுக்கு அதிகமாக முயற்சிக்கிறானோ, அந்த அளவுக்கு அதிக தூரம் அந்தச் செல்வம் அவனைவிட்டு விலகிச் செல்கிறது. பிறகுதான் அவன் தனது சிறிய ஆத்மா, எங்கும் பரந்திருக்கும் பரமாத்மாவின் பிம்பம் என்பதை உணருகிறான். ஏழைகளுக்கு தர்மம் செய்தல், தன்னல மறுப்பு, தன்னலத் தியாகம் ஆகியவற்றின் மூலம் அவன் தனது செல்வம் அனைத்தையும் ஆத்மாவுக்கு அர்ப்பணம்

செய்து விடுகிறான். அவன் ஏழைகளுக்கும், நோயாளிகளுக்கும், அல்லல் படுபவர்களுக்கும் தொண்டு செய்து அவர்களின் அகமும் முகமும் மலரச் செய்கிறான். இந்தத் தொண்டை அனைவரிடத்திலும் உறைந்திருக்கும் பரமாத்மாவுக்கு செய்யும் தொண்டாக நினைத்து அவன் செய்கிறான். ஆத்மாவை தியானித்து அதற்குத் தன்னை சமர்ப்பணம் செய்கிறான். கண்ணாடியில் தெரியும் உருவம்போன்ற ஜீவனிடத்தில் அவன் கவனம் செல்லுவதில்லை. பரம்பொருளை அலங்கரித்துப் பார்ப்பதிலேயே அவன் தன்னை ஈடுபடுத்திக் கொள்ளுகிறான். உடனே அவன் தன்னை (ஜீவன்) புனிதம், அழகு, மகிழ்ச்சி இவற்றின் கேந்திரமாகக் காணுகிறான்.

மனிதா! சுயநலத்தை நாடாதே; ஆத்மாவை நாடு. நீ இந்த உடல் அல்ல; மனம் அல்ல, புத்தி அல்ல; 'நான்' என்பதும் அல்ல; நீ அமரத்துவம் பெற்ற, எங்கும் நிறைந்து நிலைத்திருக்கும் சச்சிதானந்த ஆத்மா. இதனை உணர்ந்து நீ விடுதலை பெறு.

## 5. முற்றத்தில் இருந்த பலாமரம்

ஒரு மனிதனின் வீட்டு முற்றத்தில் ஒரு பலா மரம் இருந்தது. அதில் நிறையப் பழங்கள் பழுத்துத் தொங்கின. மரத்தின் வேரிலிருந்து உச்சி வரை பழங்கள் பழுத்துத் தொங்கின, அந்த வீட்டுக்காரன் பேய் பிடித்தவன்போல பழத்தைத் நோக்கி பலமுறை ஓடினான். அவன் பலாப் பழத்தைத் தொட்டான். மேற்புறத்திலிருந்த முள் குத்தியது. வெறுப்புற்று அதனைவிட்டு அகன்றான். வீட்டிலிருந்து வெகு தொலைவிலிருந்த பனைமரத்தை அவன் பார்த்திருக்கிறான். கடும் வெயிலில் பல மைல்

கடந்து சென்று அந்தப் பனைமரத்துக்குக் கீழே நின்றான். அவனது ஏக்கம் உச்சகட்டத்தை அடைந்தது. அந்த மரத்தின் உச்சியில் தொங்கிய சிறிய அளவிலான நுங்குகள் சில அவன் கவனத்தை கவர்ந்தன. அவன் முன்னே ஓடுகிறான், ஒரு புதரில் விழுகிறான். உடல் முழுவதும் முள்குத்தி காயம் ஏற்படுகிறது. ஆனால் அவன் விடுவதாக இல்லை. மரத்தின் மீது ஏற முயற்சிக்கிறான். மரத்தின்மீது கத்திபோல இருக்கும் மட்டைகள் அவனைக்குத்தின. அதுபற்றியும் அவன் கவலைப்படவில்லை. மீண்டும் மரத்தில் ஏறினான். விஷத்தன்மை கொண்ட எறும்புகள் மரம் முழுவதும் இருந்தன, அவை அவனது உடம்பு முழுவதும் கடித்தன. ஆனாலும் அவன் முயற்சியைக் கைவிடவில்லை. எப்படியோ மரத்தின் உச்சியை அடைந்து விட்டான். சிறிய பழங்களைப் பெறுவதற்கு அப்படிப் பைத்தியக்காரத் தனமாக ஆசைப்பட்டான். பழங்களைச் சுற்றி நூற்றுக்கணக்கான தேனீக்கள் இருந்தன. பழங்களின்மீது அவன் கை வைத்தபோது அவனை தேனீக்கள் கொட்டின. அதையும் பொருட் படுத்தாமல் அவன் பழத்தைப் பறிக்க முயன்றான். பறித்த பழங்களில் பாதிக்குமேலே தின்ன முடியாதபடி கீழே போட்டுவிட்டான். மீதமிருந்த பழங்களுடன் கீழே இறங்கினான். இறங்குவதற்கு முன்பாக மேலும் சில பழங்கள் கீழே விழுந்து விட்டன. மீதம் கையிலிருந்த பழங்களை மட்டும் அவன் ருசித்துத் தின்றான். அப்படி அவன் தின்ற பழங்களிலும் பெரும்பாலானவை கொட்டைகளாக இருந்தன. பிறகு அவன் தோலைக்கூட தூக்கி எறிய வேண்டி இருந்தது. அதில் சதையே இல்லை. வெறுப்பில் அவன் பழங்களைத் தூக்கி எறிந்தான். உடனே அவனுக்கு அறிவில் தெளிவு ஏற்பட்டது. நிகழ்ந்ததற்கு வருந்தினான். முள் குத்திய வேதனை, எறும்பு கடித்த தொல்லை, தேனீக்கள் கொட்டிய

துன்பம், கூர்மையாக இருந்த மட்டைகள் ஏற்படுத்திய காயம் இவை அனைத்தும் அவனை ஒரே நேரத்தில் துன்புறுத்தின. அவன் வீட்டை விட்டுப் புறப்பட்டு பல நாட்கள் ஆகிவிட்டன. கிழிந்த ஆடைகளுடனும், ரத்தம் கசியும் உடலுடனும் அவன் வீடு நோக்கி ஓடினான். அங்கே அவனது தந்தை ருசியான பலாப் பழத்தை வைத்துக் கொண்டு அவனுக்காகக் காத்திருந்தார். தளர்ந்த நடையுடன் வந்த அவன் தந்தையின் காலடியில் வீழ்ந்தான். கேள்வி எதுவும் கேட்காமல் அவர் அவனுக்குப் புதிய ஆடைகளைக் கொடுத்தார்; அவனது உடலிலிருந்த முட்களை எடுத்தார்; காயங்களுக்கு மருந்து வைத்துக் கட்டினார்; தேன் போன்ற பலாப் பழங்களை மகனுக்குக் கொடுத்துக் கொண்டே இருந்தார். அந்த மனிதன் இப்போது பரிபூரண மகிழ்ச்சி அடைந்தான். அவன் அமைதியாகத் தனது தந்தையின் மடியில் தலைவைத்து உறங்கினான்.

அதுபோல, மனிதன் தனது இதயத்தின் அடித் தளத்தில் இருக்கும் நிலையான பேரானந்த ஊற்றைப் புறக்கணிக்கிறான். சாதனையில் ஏற்படும் ஆரம்ப அல்லல்கள் கண்டு அவன் அஞ்சுகிறான். புறத்தே காணப்படும் அல்லல் களைந்து பேரின்பத்தை அனுபவிக்க மனிதன் முயற்சிப்பதில்லை, அவனுக்குப் பசி. அவன் வீட்டை விட்டு ஓடுகிறான். சிறந்த பழத்தைத் தரும் மரத்தை விட்டு ஓடுகிறான். 'சம்ஸாரம்' என்னும் சுடுமணலில் இங்கும் அங்கும் ஓடுகிறான். இங்கு அவமதிப்பு என்னும் புதரில் அவன் விழுகிறான், தோல்வியைத் தழுவுகிறான். ஒரு பெண்ணிடம் காதல் கொள்ளுகிறான். அவன் அவளை நெருங்குவதற்கு முன் கவலையற்ற வாழ்க்கை, சுதந்திரமான வாழ்க்கை ஆகியவற்றைத் தியாகம் செய்ய வேண்டியிருக்கிறது.

மாயை அவனைக் கவ்விக் கொள்ளுகிறது. இதில் இன்பம் கிடைக்கும் என எண்ணுகிறான். காமத்தின் வலையில் சிக்கிக் கொள்ளுகிறான்.

இல்லற வாழ்க்கை என்னும் மரத்தில் அவன் ஏற முயற்சிக்கிறான். குழந்தைகளுக்கு உணவளிப்பது, மனைவிக்கு சேலைகள், நகைகள் வாங்குவதற்கு பணம் தேடுவது ஆகிய கவலைகள் அவனைக் கடிக்கின்றன. ஆயினும் அவன் தவறான ஒன்றை நாடியே செல்லுகிறான். புலன் இன்பம் என்னும் சிறு பழத்தின்மீது அவனுக்கு ஆசை பிறக்கிறது. அதை அவன் அனுபவிக்கும்போது பல கொடிய நோய்கள் அவனைப் பிடித்துக் கொள்ளுகின்றன. அவன் வெறுப்படைகிறான், மனம் புண்ணுகிறது. உடல் நோயால் அவதிப்படுகிறது. தன்னிடத்தில் இருப்பதாகத் தான் கருதும் சிறித்தளவு மகிழ்ச்சியை அனுபவிக்கக்கூட இந்த உலகம் தன்னை அனுமதிக்காது என்பதை அவன் உணர்ந்து கொள்ளுகிறான். இதிலிருந்து மீள அவன் வழி தேடுகிறான்.

மனிதன் குடும்ப வாழ்க்கை என்னும் மரத்தில் ஏறும்போதும், இறங்கும்போதும் கடன்காரர்கள் மற்றும் உறவினர்களின் கோரிக்கைகள் என்னும் கூர்மையான மட்டைகள் அவனது ஆடைகளைக் கிழித்து விடுகின்றன; உடல் முழுவதையும் காயப் படுத்தி விடுகின்றன. இப்போது அவனது ஆடைகள் கிழிந்து விட்டன; உடலில் நூறு இடங்களில் காயம் ஏற்பட்டிருக்கிறது. அவன் சக்தி இழந்து நிற்கிறான். களைப்புடன் அவன் ஓரிடத்தில் அமர்ந்து, தனக்குத் தொல்லை தருவதற்குக் காரணமாக இருந்த பழங்களைப் பார்க்கிறான். அவற்றில் பல கொட்டைகளாக இருக்கின்றன (அவனது மனைவியின் இதயம் கல்லாக இருக்கிறது. அது போலித்தனமாக அன்பு செலுத்துகிறது.) மீதமும் பயன்படாத தோல்,

இவற்றையும் மனிதன் வீசி எறிந்துவிடுகிறுன். இப்போது மீதமிருப்பதெல்லாம் காயங்கள், சிராய்ப்புகள், கடித்த, கொட்டிய வேதனைகள், கிழிந்த ஆடைகள், களைத்துப்போன உடம்பு இவ்வளவுதான். முற்றிலும் வெறுப்புற்று, போலித்தனமான பழத்தை வீசி எறிந்துவிட்டு மனிதன் வீடு நோக்கி ஓடுகிறுன்.

வீட்டில் குருநாதர் அவனுக்காகக் காத்துக் கொண்டிருக்கிருர். ஞானம் என்னும் பழத்தை அவனுக்குத் தருவதற்குத் தயாராக வைத்திருக் கிருர். அவர் அவனது கண்ணீரைத் துடைக்கிருர். காயத்தை ஆற்றுகிருர். துறவு, பக்தி என்னும் உடைகளைத் தருகிருர். இளைஞன் குருநாதரின் திருவடிகளில் வீழ்ந்து வணங்குகிறுன். குருநாதரின் மடியில் அவன் அமைதியாக ஓய்வெடுக்கிறுன். குருநாதரின் இதயத்திலிருந்து மட்டுமே உருவாகக் கூடிய உன்னதமான அன்பு, கருணை ஆகிய வற்றுடன், குருநாதர் ஞானம், ஆத்மஞானம் என்னும் தேனை சீடனுக்கு ஊட்டுகிருர். ஆத்ம ஞானம் பெற்ற மனிதன், உலக விஷயங்கள் பற்றிக் கவலைப்படாமல் உறக்கமற்ற உறக்கம் என்னும் சமாதி நிலையினை அடைந்து ஆனந்தம் அடைகிறுன்.

## 6. மனிதனும் நாயும்

ஒரு மனிதன் தான் அன்பாக வளர்த்த நாயுடன் உலாவிவரச் சென்றுன். அந்த நாயை வளர்ப்பது குறித்து அவன் கர்வமுற்றிருந்தான். அந்த நாய், அவன் நடந்து செல்லும்போது அவனுக்கு முன்னுலேயே செல்லும். இந்த மனிதன் ஒரு குடை வைத்திருந்தான். தான் அன்பாக வளர்க்கும் நாய் தனக்காக எதையும் செய்யும் என்பதை தன்னைச் சுற்றி இருப்பவர்களுக்குக்

காட்டவேண்டும் என்பதற்காக அந்த நாயின் வாயில் குடையைக் கொடுத்தான். அந்த நாயும் தன்பற்களால் கடித்து அந்தக் குடையை எடுத்துச் சென்றது. அந்த மனிதனுக்கு முன்பாக அது பெருமையுடன் நடந்து சென்றது. திடீரென்று மழை பெய்தது, அந்த மனிதன் குடையைப் பயன் படுத்த விரும்பினான். ஆனால் அந்த நாய் அவனுக்கு முன்னால் நூறுகஜ தூரத்தில் சென்று கொண்டிருந் தது. அவன் நாயை நோக்கி ஓடினான். எஜமான் வழக்கத்துக்கு மாறாக ஏன் தன்பின்னால் ஓடி வருகிறார் என்பதை அறியாத நாய் பயந்து வீடு நோக்கி மின்னல்வேகத்தில் ஓடியது. வீடு சேர்ந்து நாயிடமிருந்து குடையை வாங்குவதற்கு முன்பாக அவன் முழுமையாக நனைந்துவிட்டான்.

தற்பெருமையும், அறியாமையும் கொண்ட ஜீவன், தனது ஆன்மீக விழிப்புணர்வை மனத்திடம் ஒப்படைக்கிறது. சிறிது காலத்துக்கு மனம் ஜீவனுக்கு முன்னே நடந்து சென்று ஜீவனுக்கு வழி காட்டுவதுபோலத் தோன்றுகிறது. பிறகு உலகியல் வாழ்வின் துன்பங்களும், புலன்வழிப் பொருட்கள் தூண்டுகிற ஆசைகளும் ஜீவனை பெரு மளவுக்கு வேதனைப்படுத்துகின்றன. ஆன்மீக விழிப்புணர்வு என்னும் குடையை எடுத்துக் கொண்டு மனம் என்னும் நாய் ஜீவனைவிட்டுத் தொலைதூரத்தில் செல்லுகிறது.

ஆன்மீக விழிப்புணர்வு என்னும் குடையை மனத்திடம் ஒப்படைக்காமல் இருந்திருந்தால், ஜீவன், துன்பங்கள், கவர்ச்சி என்னும் மழையிலிருந்து தன்னைக் காத்துக்கொண்டிருக்கும். இப்போது துன்பங்கள் மற்றும் கவர்ச்சியிலிருந்து விடுபட ஜீவன் விரைந்து ஓடுகிறது. ஆனால் பலன் கிட்டவில்லை.

மனிதர்களே! குறையுடைய மனத்திடம் ஆன்மீகச் செல்வம், நல் வாழ்வு என்னும் சொத்தை ஒப்படைக்கும் தவறைச் செய்யாதீர்கள். சோதனையான நேரத்தில் அது உங்களை காப்பாற்றுவதில்லை. இறைவனிடத்தில் மட்டுமே நம்பிக்கைகொள்ளக் கற்றுக்கொள்ளுங்கள். அவரால் மட்டுமே உங்களை ஆதரிக்க முடியும் என்று நம்புங்கள்.

## 7. ஜமீன்தாரும் அவரது ஏஜெண்டும்

ஒரு பெரிய ஜமீன்தார் தனது எஸ்டேட்டுகளைக் கவனித்துக் கொள்வதற்காக ஒரு ஏஜெண்டை நியமித்தார். எஸ்டேட்டுகளை நிர்வகிப்பதற்காக ஏஜெண்டுக்கு நிறைய அதிகாரங்கள் வழங்கப் பட்டிருந்தது. எஸ்டேட்டுகளில் பணிபுரிவோர் ஏஜெண்டுக்குப் பணிந்து நடக்க வேண்டும் என்று சொல்லப்பட்டது. அவர்களைக் கட்டுப்படுத்து வதற்கும், வேலையில் அமர்த்துவதற்கும், வேலை யிலிருந்து நீக்குவதற்கும் ஏஜெண்டுக்கு அதிகாரம் உண்டு என்று அவர்கள் நம்புமாறு செய்யப்பட்டது. ஜமீன்தார் சற்றுத் தொலைவிலிருந்து ஏஜெண்டையும் அவரது நடவடிக்கைகளையும் கவனித்துக் கொண்டிருந்தார். ஆனால் அவர் அப்படிக் கவனித்துக் கொண்டிருந்தது ஒருவருக்கும் தெரியாது. படிப்படியாக ஏஜெண்ட் ஜமீன்தாரின் அதிகாரம் முழுவதையும் தன் கையில் எடுத்துக் கொண்டார். ஒரு நாள் சாது ஒருவர் ஜமீன் தாரைக் காண வந்தார். ஏஜெண்ட் சாதுவின் முகத்தில் அறைந்தாற்போல, "ஜமீன்தார் எங்கே இருக்கிறார்? அப்படி யாரும் இங்கு இல்லை. இங்கு எல்லாமே நான்தான். உங்களுக்குத் தேவைப் படுவதை என்னிடம் கேளுங்கள்" என்றார். அற்புத சக்தியுடைய அந்த சாது உரத்த குரலில், "ஓ ஜமீன் தார்! தயவு செய்து இங்கு வந்து இந்த மனித

னுக்கு புத்தி புகட்டுங்கள்'' என்று கூறினர். இந்தக் கட்டளைக்குக் காத்துக்கொண்டிருந்ததுபோல ஜமீன்தார் உடனே அங்கு வந்தார். ஏஜெண்ட் வெட்கித் தலை குனிந்தார். ஜமீன்தார் மற்றும் சாதுவின் கால்களில் விழுந்து சாஷ்டாங்கமாக வணக்கம் செய்தார். ஜமீன்தார், ஏஜெண்டை தற்காலிகமாக வேலை நீக்கம் செய்தார். அவர் தனது தவறை முழுமையாக உணர்ந்து, ஜமீன் தாருக்கு உள்ள அதிகாரத்தை ஒருபோதும் மறுப்ப தில்லை என்றும், தன்னிடம் வரும் அனைவரிடத்தி லும் ஜமீன்தாரைப்பற்றி புகழ்ந்து பாடுவதாகவும் வாக்குறுதி அளித்த பின்னரே அவரை ஜமீன்தார் மீண்டும் வேலைக்கு அமர்த்திக் கொண்டார்.

இறைவன், ஜமீன்தார் போன்றவன். மனம், ஏஜெண்ட் போன்றது. இறைவனிடமிருந்து மனம் பிறப்பெடுக்கிறது. இறைவன் அருளும் ஒளியில் அது சுடர்விட்டுப் பிரகாசிக்கிறது. உண்மையில் தனித்திருக்கும் ஆற்றல் அதற்கு இல்லை. ஆனல் அதற்கு அளவிலா ஆற்றல் இருப்பதுபோலத் தோன்றுகிறது. ஏனெனில் உலகில் லீலைகள் புரிய தனது ஏஜெண்டாக ஆத்மா இந்த மனத்தை நியமித்திருக்கிறது. புலன்களைக் கட்டுப்படுத்தவும், புலன்களுக்கு சக்தி தரவும், புலன்கள் சக்தி இழக்கு மாறு செய்யவும் தனக்கு ஆற்றல் இருப்பதாக மனம் எண்ணுகிறது. நாளடைவில் தீயமனம் தனக்குமேல் ஒரு சக்தி இருக்கிறது என்பதை ஒப்புக் கொள்ள மறுக்கிறது. பிறகுதான் இறையனுபவம் பெற்ற துறவி ஒருவர் வந்து, ஆத்மாவைப்பற்றி மனதுக்கு நினைவு படுத்துகிறர். ஆனல் தீயமனம் ஆத்மா ஒன்று இருப்பதாகவே ஒப்புக்கொள்ள மறுக்கிறது. ''ஆத்மா அல்லது இறைவன் எங்கே இருக்கிறன்? எல்லாம் நான்தான்'' என்கிறது. ஆனல் குரு அல்லது இறை ஞானம் பெற்ற துறவி

எளிதில் தோல்வியை ஒப்புக்கொள்ளுவதாக இல்லை. மனிதனின் காதில் கேட்குமாறு கடவுளின் பெயரைச் சொல்லி அவனுக்கு தீக்ஷையளிக்கிறார். உடனே மனிதன் பரம்பொருளை உணர்ந்து கொள்ளுகிறான்.

இறைவன் எங்கும் எப்போதும் நிறைந்திருக்கிறான் என்பதை மனிதன் இப்போது ஒப்புக் கொள்ளுகிறான். இறைவனிடம் அவன் சரணுகதி அடைகிறான். இறைவன், உடனே மனத்தை விரட்டுகிறார். மனம் மறைந்ததும் சாதகன் இறைவனின் அழகிய காட்சியைக் காணுகிறான். பிறகு அவன் சமாதி நிலையிலிருந்து விடுபடும்போது முற்றிலும் புதியவனுக, பண்புப் பதிவு பெற்றவனுக மீளுகிறான். இறைவனை இனி ஒருபோதும் மறக்காதிருக்கவும், என்றும் அவன் புகழ் பாடவும் அவன் உறுதி மேற்கொள்ளுகிறான்.

## 8. காணுமற்போன கைக்கெடிகாரம்

ஒரு இருட்டறையில் ஒரு மனிதன் ஏதோ ஒரு பொருளைத் தீவிரமாகத் தேடிக்கொண்டிருந்தான். அவன் அழுது புலம்பினுன். அந்த அறையிலிருக்கும் பொருட்களை அங்குமிங்கும் அள்ளி வீசினுன். சில பொருட்களை உடைத்தெறிந்தான்.

ஆம்! அவன் தேடிய பொருள் அவனுக்குக் கிடைக்கவில்லை.

அங்கு அந்த நேரத்தில் அவனுடைய நண்பர் வந்தார். ஏன் இப்படி அழுது புலம்புகிறுய், என வினவினுர். "நண்பா! எனது கைக்கெடிகாரம் காணுமற்போய்விட்டது! அது தொலைந்துவிட்டது" என்றுன் அந்த மனிதன்.

''அது இங்கிருந்து எங்கே போய்விடும்? என்ன இப்படி முட்டாள்தனமாக இருட்டில் தேடிக் கொண்டிருக்கிறாய்? இதோ நான் விளக்கு கொண்டு வந்திருக்கிறேன். சற்று அமைதியாக இரு, ஆழ்ந்து யோசனை செய். அது எங்கே இருக்கும் என்று நினைவுபடுத்திப்பார். சீக்கிரமே நீ அதைக் கண்டு பிடித்து எடுத்து விடுவாய்'' என்று நண்பன் சொன்னான்.

அந்த மனிதனும் அவ்வாறே செய்தான். கைக் கெடிகாரமும் கிடைத்தது. அப்போது அந்த நண்பன், ''கைக்கெடிகாரம் தொலைந்து போகவில்லை. நீ இப்போது தேடி எடுக்கவும் இல்லை. அது இருந்த இடத்தில் அப்படியே இருக்கிறது. அறையில் இருட்டு இருந்தபடியாலும் கைக்கெடி காரம் இல்லாத இடத்திலெல்லாம் நீ அதைத் தேடியதாலும் அது உனக்குக் கிடைக்கவில்லை. அது எங்கு இருக்கிறது என்று உனக்குத் தெரியவில்லை. அறியாமை இப்போது நீங்கிவிட்டது. அதைத் தேடிப்பிடித்ததாக நீ எண்ணுகிறாய். அது எப் போதும் உன்னுடையதாக இருக்கிறது. அது ஒரு போதும் காணமற்போகவில்லை'' என்று விளக்கிக் கூறினான்.

அதுபோல, இதயத்தின் அடித்தளத்தில் ஆத்மா நிலைத்திருக்கிறது. பேரானந்தம் மற்றும் அமைதியின் உறைவிடமாக அது இருக்கிறது. மனிதன் அறியாமை என்னும் இருளில் மூழ்கியிருப்ப தால் அவன் அதைக் காணமுடியவில்லை; பேரானந்தம் மற்றும் அமைதியினை அனுபவிக்க முடியவில்லை. பேரானந்தத்தையும், அமைதி யையும் அடைய விரும்பும் அவன் உலகியற் பொருட்களுக்கு மத்தியில் அலைகிறான்.

தன்னையும் குழப்பிக்கொண்டு உலகையும் குழப்பு கிறான். பிறருக்கும் தனக்கும் துன்பத்தைத் தரு கிறான். அழுகிறான்; புலம்புகிறான். ஆனால் அவன் நாடிய பொருளை அடைய முடியவில்லை. இறுதியாக குரு தனது கைகளில் ஞானதீபம் ஏந்தி வருகிறார். ''ஞான தீபத்தின்மூலம் உனது அஞ்ஞான இருளை அகற்று. அமைதிகொள். மனத்தின் போக்குகளைக் கட்டுப்படுத்து. அனுபவங்களை ஆராய்ந்து பார். விளைவுகளை எண்ணிப்பார். நீ ஆத்மாவைக் கண்டு அறிவாய். நீ அதை முன்பு இழக்கவுமில்லை; இப்போது அதை நீ தேடிப் பெறவுமில்லை. அது எப்போதும் உன் னிடமே இருக்கிறது. நீ அதைப்பற்றிய ஞானம் இல்லாமல் இருந்து வருகிறாய். அவ்வளவுதான். இப்போது உனது தூய இதயத்திலும், அமைதியான மனத்திலும் ஆத்மா சுடர்விட்டுப் பிரகாசிக்கின்றது. அதனை நீ மீண்டும் பெற்றுவிட்டதாக எண்ணுகிறாய். உண்மையில் நீ அதனை ஒருபோதும் இழக்க வில்லை.

## 9. தரை விரிப்பு

ஒரு மனிதன் அவசர அவசரமாக அடுத்த வீட்டுக்குள் நுழைந்தான். கதவருகில் தரையில் தரை விரிப்பு கிடந்தது. அதில் 'வருக! வருக!' என்ற வாசகம் இருந்தது. தற்பெருமையுடனும் அலட்சியத்துடனும் அந்த மனிதன் அதன்மீது மிதித்துக்கொண்டு உள்ளே சென்றான். ஆனால் தவறிக் கீழே விழுந்து விட்டான். அவன் விழுந்த வேகத்தில் தரை விரிப்பு இடம்மாறி விழுந்தது. அதன் கீழ்ப்பக்கம் இப்போது மேல்பக்கமாக மாறி விழுந்தது. தரை விரிப்பையும் அதில் 'வருக வருக' என்று எழுதியிருந்ததையும் பார்த்து வசைபாடிக்

கொண்டே அந்த மனிதன் எழுந்தான். உடனே அவன் பார்வை தரை விரிப்பின்மீதே பட்டது. ''அபாயம்! விழிப்புடன் இரு'' என்ற வாசகம் தரை விரிப்பின் பின்பக்கத்தில் இருந்தது. அதன் மீது அஜாக்ரதையாக மிதிப்பவர்களுக்கும் 'வருக வருக' என்ற வாசகத்தில் மயங்குபவர்களுக்கும் இவ்வாறு பின்புற வாசகம் உள்ளது என அவன் புரிந்துகொண்டான்.

அரைகுறை அறிவு உடைய ஒருவன் சமய நூல்களைப் படிக்கும்போது **''மயா ததம் இதம் ஸர்வம்'', ''ஈஸாவாஸ்யம் இதம் ஸர்வம்'', ''ஸர்வம் கல்விதம் பிரம்ம''** என்ற வாசகங்களைப் படித்துவிட்டு விழிப்புணர்வு, வைராக்யம், சாதனை எதுவும் தேவையில்லை என்றும் காரணம், இறைவன் எங்கும் நிறைந்திருக்கிறான் என்றும் எண்ணுகிறார்கள். இந்த மனிதன் தவறி விழுகிறான். இவன் பயங்கரமான வீழ்ச்சியை அடைகிறான். இப்போது இந்த மனிதன் எப்படி வீழ்ச்சி அடைந்தான்? **''மயா ததம் இதம் ஸர்வம்''** என்று சமய நூலில் கூறப்பட்டிருப்பது பொய்யா? இல்லை. இதனை அவன் மீண்டும் படிக்கிறான் **''அனித்யம் அஸுகம் லோகம் இமம் ப்ராப்ய பஜஸ்வ மாம்''** (நிலையற்ற துன்பம் நிறைந்த இந்த உலகிற் பிறந்த தனால் என்னை வழிபடு) என்று இறைவன் பிறிதொரு இடத்தில் கூறியிருப்பதை அவன் படிக்கிறான். மனிதன் அஜாக்ரதையாகவும், வைராக்யமின்றியும் இருந்தால் ஒவ்வொரு படியிலும் அவன் வீழ்ச்சி அடைவான் என்றும், கடவுள் உலகெங்கும் பரந்து நின்றாலும் ஒவ்வொரு மனிதனும் விழிப்புடன் நடக்க வேண்டும்; ஜாக்ரதையாக இருக்க வேண்டும்; வைராக்கியத்துடன் வாழவேண்டும் என்றும் இப்போது அந்த மனிதன் உணருகிறான்.

## 10. ஒட்டகத்தின் திருப்தி

ஒரு வியாபாரி பாலை வனத்தைக் கடந்து செல்ல வேண்டியிருந்தது. அவன் தனது பொருட்களைச் சுமந்து செல்ல வாடகைக்கு ஒரு ஒட்டகத்தை நியமித்துக்கொண்டான். ஒட்டகத்தின் முதுகில் தனது மூட்டைகளை ஏற்றிவைத்தான். அதன் மேல் ஒரு காலி டின்னையும் வைத்தான். இந்த மூட்டைகளைத் தூக்க முடியாமல் ஒட்டகம் திணறியது, நடக்கத் தயங்கியது. இப்போது அந்த வியாபாரி அந்த காலி டின்னைக் கீழே தள்ளிவிட்டான். தனது முதுகிலிருந்த சுமையில் பெரும்பகுதி குறைக்கப் பட்டு விட்டதாகக் கருதிய ஒட்டகம் நடக்கத் தொடங்கியது. பாலைவனத்தில் சுடுகின்ற மணலில் எந்தவித அதிருப்தியும் இல்லாமல் அது மூட்டைகளைச் சுமந்து சென்றது.

இந்த உலகம் சம்ஸாரம் என்னும் பாலைவனம். இங்கு மாயை தனது வேலையைச் செய்து வருகிறது. முடிவில்லா வேதனை மற்றும் துன்பம் என்னும் சுடுமணல் நிறைந்த பாலைவனத்தில் அது ஜீவனை வீசி எறிகிறது. ஜீவன் அளவிலாக் கவலைகள் பதை பதைப்புகள், எண்ணற்ற வேதனைகள், நோய்கள், மற்றும் துன்பங்கள் என்னும் மூட்டைகளைச் சுமக்கும் நிலைக்கு ஆளாக்கப்படுகிறது. அவ்வப் போது மாயை, ஜீவனின் முதுகிலிருந்து ஒரு சில்லரைத் துன்பத்தை அகற்றிவிடுகிறது. இவ்வாறு ஜீவனுக்கு அற்ப சந்தோஷம் தரப்படுகிறது. ஜீவன் உலகின் எல்லா இன்னல்களிலிருந்தும் தான் விடு விக்கப்பட்டதாக முட்டாள்தனமாக எண்ணிக் கொண்டு சம்ஸாரம் என்னும் பாலைவனத்துக்குள் பாய்ந்து ஓடுகிறது. ஆத்மா இவ்வாறு ஏமாற்றப் படுகிறது. முதுகில் வைக்கப்பட்ட மூட்டைகள் அப்படியேதான் இருக்கின்றன. அது மாயையின் தந்திரத்தால் ஏமாற்றப்பட்டிருக்கிறது.

## 11. பிரயாணியும் அவரது மூட்டைகளும்

ஒரு கிராமவாசி ரயிலில் பிரயாணம் செய்தார். இதற்கு முன்னதாக அவர் ரயிலில் பயணம் செய்ததில்லை. அவரது மனைவியிடமிருந்து அவருக்கு தந்தி வந்திருந்தது. மனைவிக்கு உடல்நிலை சரியில்லை. கணவனைப் பார்த்துப் பேச விரும்பி தந்தி கொடுக்கப்பட்டிருக்கிறது.

கிராமவாசி ஓட்ட ஓட்டமாக ரயில்நிலையம் வந்தார். பயணச் சீட்டு வாங்கினார். ரயிலில் ஏறினார். ரயில் புறப்பட்டது துரதிர்ஷ்டவசமாக ரயில்நிலையத்துக்கு அப்பால் இருந்த ரயில் பாதை பழுதுபட்டிருந்தது. அது சரிபார்க்கப்பட்டு வந்தது. ஆதலால் அந்த இடத்தில் ரயில் மெதுவாகச் சென்றது. ரயில் வேகமாகப் போவதை கிராமவாசி முன்பு கண்டிருக்கிறார். ரயில் இப்போது இவ்வளவு மெதுவாக ஊர்ந்து செல்வதன் காரணம் அவருக்குப் புரியவில்லை. கிராமத்தில் உள்ள தனது மனைவியைக் காண வேண்டும் என்ற ஆவலில் அவர் பொறுமை இழந்துவிட்டார். அவர் ஆழ்ந்து யோசித்து ஒன்றைக் கண்டுபிடித்தார்; ''நான் ஒரு முட்டாள்! ரயிலுக்கு நானே ஒரு சுமை. நான் எனது பெட்டி, படுக்கை, மூட்டை முடிச்சுகளையும் ரயிலுக்கு அதிகச் சுமையாக வைத்திருக்கிறேனே. இந்த அதிகச் சுமையின் காரணமாகத்தான் ரயில் மெதுவாகப் போகிறது''. உடனே அவர் தனது பெட்டி படுக்கைகளைத் தூக்கித் தன் தலை மீது வைத்துக்கொண்டார். சக பிரயாணிகள் இதுகண்டு வியப்புற்றனர்.

அதுபோல இந்த உலகில் வாழ்க்கை என்னும் ரயிலில் மனிதன் பயணம் செய்கிறான். அவன் இது வரை காணாத சக்தி ஒன்று அவனிடம் இருக்கிறது.

ஆனால் அவன் மனைவி (மகிழ்ச்சி) ஆபத்தில் இருக்கிறாள். அவளை அவன் விரைந்து சென்று காணத் துடிக்கிறான். உலகில் எதுவும் எப்போதும் மனிதன் நினைப்பதுபோல் நடப்பதில்லை. மனிதன் பொறுமை இழக்கிறான். குடும்பப் பொறுப்பு, குழந்தைகளை கவனிக்கும் பொறுப்பு, வியாபாரத்தை கவனிக்கும் பொறுப்பு இவற்றை மேற்கொண்டால் அவன் விரைவாக தனது லட்சியத்தை — மகிழ்ச்சியை -- அடைந்துவிடலாம் என்று எண்ணுகிறான். பொருட்களை அவன் சுமந்து சென்றாலும் ரயிலில் வைத்திருந்தாலும் அவனையும் பொருட்களையும் ரயில்தான் சுமந்து செல்கிறது என்பதை அவன் மறந்துவிடுகிறான்; அல்லது அது பற்றிய அறிவே அவனுக்கு இல்லை. அனைவரையும் காப்பாற்றுவது ஆண்டவன்தான். ஆனால் முட்டாள் மனிதன் தனது மனைவி மற்றும் குழந்தைகளின் நலனுக்கும், வீடு, வியாபாரம், சொத்துக்கள் இவற்றுக்கும் தானே காரணமாக இருப்பதாக எண்ணுகிறான்.

## 12. நினைவு மறந்த மனிதன்

ஒருவன் கிரிக்கெட் விளையாடிக் கொண்டிருந்தான். திடீரென்று பந்து தலையின் பின்பக்கத்தின் மேல் விழுந்தது; அவனுக்குத் தலை சுற்றியது. பார்வை மங்கியது. சுருண்டு கீழே வீழ்ந்தான். அவனை மருத்துவமனைக்குக் கொண்டு சென்றனர். பல்வேறு அறுவை சிகிச்சைகள் செய்யப்பட்டன; ஏராளமாக ஊசிகள் மூலம் மருந்து செலுத்தப் பட்டது. அதன் பிறகு அவனுக்கு நினைவு திரும்பியது. உண்பதற்கு ஏதேனும் கொடுங்கள் என்று அருகில் இருந்தவர்களிடம் அவன் சொன்னான். அவன் தன்னைச்சுற்றியுள்ள பொருட்களைக் கண்டு பயந்தான்; அலறினான். தனக்கு அருகில்

இருந்தவர்களைப் பார்த்து ''யார் நீ?'' ''என்ன இதெல்லாம்?'' என்று அவன் கேட்டான். அவனுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது என்று சுற்றியிருந்த நர்சுகள் புரிந்து கொண்டனர். அவன் தனது உறவினர் அனைவரையும் மறந்துவிட்டான். தான் யாருடைய மகன் என்று அவனுக்குச் சொல்லத் தெரியவில்லை.

நர்சுகளில் வயதில் சற்று மூத்தவரும் அவன் நினைவு திரும்பப் பெரிதும் காரணமாக இருந்தவருமான ஒரு பெண், அவனது தாயாரைப்போல அவனை கவனித்துக்கொண்டாள். அவள் அவனைத் தனது மகனாக சுவீகாரம் செய்துகொண்டாள். அவளே தனது தாய் என அவன் நம்பினான். அவன் புதிய நண்பர்களைத் தேடிக்கொண்டான். இப்படியாக ஓராண்டு கடப்பதற்கு முன்பாக அவன் மீண்டும் கிரிக்கெட் மைதானத்திற்குக் கொண்டுவரப்பட்டான். அவன் முன்பு விளையாடியதுபோலவே இப்பொழுதும் விளையாடினான். ஆனால் முன்பு அவனுடன் விளையாடிய நண்பர்களில் எவரும் அவன் நினைவில் இல்லை. இந்த இளைஞனிடத்தில் இப்படிப்பட்ட மாறுதல் ஏற்பட்டிருப்பதைக் கண்டவர்கள் வியப்புற்றனர்.

இதுபோலவே மனிதன் இந்த பூமியில் வாழ்க்கை எனும் விளையாட்டில் ஈடுபடுகிறான். மரணம் அவனைப் பிடித்துக்கொள்ளுகிறது. அவனைச் சுற்றியுள்ள சூழ்நிலை இருள்மயமாகிறது. அவன் நினைவை இழந்து விடுகிறான். மற்றொரு உலகில் இருந்து வந்தவர்கள் அவன் உயிரை எடுத்துக் கொண்டு போய்விடுகின்றனர்; பூமியில் அவன் செய்த பாவங்களுக்காக அவனை வெட்டுகின்றனர்; சித்திரவதை செய்கின்றனர். மீண்டும் பூமியில் மற்றொரு தாய் அவனைப் பெற்றெடுக்கும்போது

அவன் மீண்டும் விழிப்புணர்வு பெறுகிருன். தன்னைச் சுற்றிலும் உள்ள புதிய பொருட்களைக் கண்டவுடனேயே அவன் அழுகிருன். பிறகு தாயின் மார்பகத்தில் வாயை வைத்துத் தாய்ப்பாலை உறிஞ்சிக் குடிக்கிருன். இந்த உலகைப்பற்றிய உணர்வு அவனுக்கு படிப்படியாக ஏற்படுகிறபோது அவன், ''யார் இது? என்ன இது?'' என்று கேள்வி கேட்கிருன். அவன், உண்மையில் தனக்கு அன்னையும் தந்தையுமாக இருக்கும் இறைவனை மறந்துவிட்டான். இப்போது அவனைப் பெற்றெடுத்த தாய் ''நான் உனது தாய்'' என்று சொல்கிருள். அவனும் இதை ஒப்புக்கொள்ளுகிருன். பிறகு புதிய நண்பர்களையும், உறவினர்களையும் அவன் பெறுகிருன். முற்பிறவிப் பழக்க வழக்கங்களின் காரணமாக வாழ்க்கை என்னும் விளையாட்டில் அவன் மீண்டும் ஈடுபடுத்தப் படுகிருன். அறிஞன் இந்த மாற்றத்தை அறிந்து வியப்படைகிருன். முற்பிறவியின் நினைவு அவனுக்கு இல்லை. எனினும் அப்பிறவியின் பழக்க வழக்கங்களும் குணங்களும் மாறவில்லை. அவை அவனை வழிநடத்திச் செல்லுகின்றன.

## 13. பேராசைகொண்ட யாத்திரீகன்

தீர்த்தயாத்திரை செய்ய விரும்பிய ஒருவன் தன் நண்பன் ஒருவனிடமிருந்து ரூ. 100 கடனைகப் பெற்ருன். அவன் பல புண்ணியஸ்தலங்களுக்குச் சென்று தரிசித்துவிட்டு சொந்த ஊருக்குத் திரும்பினுன். தனக்குக் கடன் கொடுத்த நண்பனைக் கண்டான். நண்பன் தான் கடனைகக் கொடுத்த நூறு ரூபாயைத் திருப்பித் தருமாறு கேட்டான். கடன் வாங்கிய யாத்திரீகன் ''நூறு ரூபாயும் வேண்டுமா!'' என்று கேட்டான். என்ன விந்தையான கேள்வி!

மனிதனின் நடத்தை இதுபோல விசித்திர மானது. ஜீவன், சம்ஸாரசாகரம் என்னும் பரந்த வெளியில் நுழைந்தது. உலோகங்கள், தாவரங் கள், விலங்குகள், மனிதன் இப்படிப் பல இடங் களில் அது சுற்றித்திரிந்தது. இறைவனிடம் பெற்ற விழிப்புணர்வுமூலம் அது இ வ் வ ா று சுற்றித் திரிந்தது. மனிதப் பிறவியில் ஜீவன் தன் சொந்த இடத்துக்கு அதாவது இறைவனுக்கு மிக அருகில் வந்தது. இப்போது பயணம் ஏறக்குறைய பூர்த்தி யாகிவிட்டது. இறைவன் தான் கொடுத்ததை இப்போது திரும்பக் கேட்கிறார்; அதாவது, தனது ஆத்மா முழுமையாக கடவுளுக்குச் சொந்தமானது என மனிதன் உணரவேண்டும். மனிதன் தனது இதயத்தை முழுமையாக இறைவனுக்கு அர்ப்பணம் செய்யவேண்டும். ஆனால் பேராசை, காமம், பந்தம் இவற்றில் சிக்கிக்கொண்ட மனிதன் இவ்வாறு செய்யத் தயங்குகிறான். என்ன ஆச்சரியம்! மாயைக்குத் தான் எவ்வளவு சக்தி இருக்கிறது!

---

2-வது அத்தியாயம்

# மனிதப் பிறவியின் குறிக்கோள்

## 14. வேருக்கு தண்ணீர் ஊற்றிய சிறுவன்

ஒரு தந்தை தனது இரு புதல்வர்களின் புத்தி சாலித்தனத்தை சோதித்துப் பார்க்க விரும்பினார். ஆளுக்கு ஒரு மாமரத்தைக் கொடுத்து வளர்க்கச் சொன்னார். இனிப்பான பழங்களை அதிகமாகத் தருகிற மரத்தை வளர்க்கும் சிறுவனுக்கு பரிசு தருவதாகவும் கூறினார்.

முட்டாள் சிறுவன், தனது மரத்தின் இலைகள் உதிர்வதைக் கண்டான். கிளையின் நுனியில் பூக்கள் பூப்பதையும் அவன் கண்டான். ஒவ்வொரு இலையின்மீதும் தண்ணீர் ஊற்றினான். இலைகள் மேலும் அதிகமாக உதிர்ந்தன. மரமும் பட்டுப் போயிற்று.

அறிவுள்ள சிறுவன், இதற்குமாறாக, மரத்தின் வேருக்குத் தண்ணீர் ஊற்றினான். மரம் பசுமையாக, செழித்து வளர்ந்தது. இனிப்பான பழங்களை, நிறையத் தந்தது.

அதுபோல, மனிதனின் அறிவு வளர்ச்சியைப் பரிசோதிக்க கடவுள் மனிதப் பிறவியைக் கொடுக்கிறார். முட்டாள் மனிதன், நிலையான அமைதியும் அமரத்துவமும் பெற விரும்புகிறான்; அதற்காக புலன்களின் விருப்பத்தை நிறைவேற்றவும், உலகியல் ஞானம் பெறவும் முயற்சிக்கிறான் அது தான் சரியான வழி என அவன் நினைக்கிறான். பகுத்தறிவில்லாத அவன் பரிதாபமாக இறக்கிறான். இதற்குமாறாக, அறிவுடையவன், அனைத்துப் படைப்புகளுக்கும் மூலமாக இருக்கும் இறைவனை தியானம் செய்கிறான் இதன்மூலம் உலகில் அனைத்துச் செல்வமும், ஞானமும் அவனுக்குக் கிடைக்கிறது. கடவுள் அவனுடைய அறிவாற்றலை அறிந்து மகிழ்கிறார்; அவனுக்கு அமரத்துவத்தையும் நிலையான பேரானந்தத்தையும் அளிக்கிறார்.

## 15. பண்டிதரும் சால்வையும்

ஒரு மன்னர் முட்டாள் பண்டிதர் ஒருவருக்கு விலைஉயர்ந்த காஷ்மீர் சால்வையை அன்பளிப்பாகத் தந்தார். பண்டிதருக்கு சால்வையின் மதிப்பு

தெரியவில்லை. சால்வையைப் பெற்றுக்கொண்டவுடன் அவர் மூக்கையும் கால்களையும் சால்வையால் துடைத்தார். பண்டிதரின் முட்டாள்தனத்தை அறிந்து கொண்ட மன்னர் எரிச்சல் அடைந்து சால்வையை அவரிடமிருந்து திரும்பப்பெற ஆணையிட்டார். அவரது வேலையாள் பண்டிதரிடமிருந்து சால்வையைப் பறித்துக் கொண்டான்.

அதுபோல, இறைவனின் வரப்பிரசாதமாக நமக்கு மனிதப் பிறவி கிடைத்திருக்கிறது. ஆனால் முட்டாள் மனிதன் பெண், பொன், புகழ்ச்சி இவற்றுக்கு ஆசைப்பட்டு மனிதப்பிறவியை வீணாக்குகிறான். மரணம் விரைந்து வந்து மனிதனால் தவறாகப் பயன்படுத்தப்பட்ட இந்த அன்பளிப்பைப் பறித்துக்கொள்ளுகிறது.

மனிதா! கிடைத்தற்கரிய இந்த மனிதப் பிறவியை ஜபம் செய்தல், அறநூல்களைப் படித்தல், தன்னலமற்ற தொண்டு செய்தல், தியானம் செய்தல் ஆகியவற்றுக்காகப் பயன்படுத்து.

ஆத்மாவை உணர்ந்துகொள். ஆனந்தமாக இரு.

## 16. தொட்டிலில் கிடந்த பூனை

ஒரு மனிதன் தனக்கு அருகிலிருந்த அறையில் ஒரு குழந்தை மெல்லிய குரலில் அழுவதைக் கேட்டான். தனது மகன் தூக்கம் கலைந்து அழுவதாக அவன் எண்ணினான். உடனே அவன் அந்த அறைக்குச் சென்று பார்த்தான். தொட்டில் அசைந்து கொண்டிருந்தது. அவன் தாலாட்டுப் பாடியவாறு தொட்டிலை ஆட்டிவிட்டான். பத்து நிமிடங்கள் இப்படியாகக்

கழிந்தது. பிறகு அந்த மனிதனை ஆச்சரியத்தில் ஆழ்த்தும் வகையில் ஒரு பூனைக்குட்டி தொட்டிலி லிருந்து குதித்து ஓடியது. தொட்டிலில் இருந்த பால்புட்டி ரப்பரை கடித்து அதிலிருந்த பாலை பூனைக்குட்டி குடித்திருப்பதை அவன் கண்டான். (தாயார் குழந்தையை வெளியில் எடுத்துச் சென்றிருந்தாள்).

முட்டாள் மனிதனின் காதுகளுக்கு அவனது மனைவி மக்களின் பேச்சு இதமாக இருக்கிறது. அவன் அதில் ஆனந்தம் அடைந்து அவர்களுக்குத் தொண்டு செய்வதில் ஈடுபடுகிறான். இப்படியாக சில நாட்கள் செல்லுகின்றன. பிறகு தன் மனைவி யும் குழந்தைகளும் தன்னிடம் இனிமையாகப் பேசு வதற்குக் காரணம் தன்மீது கொண்டிருக்கும் அன்பி னால் அல்ல என்றும் அவர்களது சுயநலமே காரணம் என்றும் அவன் உணர்ந்துகொள்ளுகிறான். தான் நிர்வாகம் செய்யும் குடும்பம் என்னும் தொட்டிலில் தன்னிடம் உண்மையிலேயே அன்பு செலுத்துகிற குழந்தையை அவன் காணவில்லை. அவன் காண்பது சுயநலத்தில் நாட்டம் கொண்ட பூனையைப்போன்ற உறவினர்களைத்தான். அவர்கள் அவனது வாழ்க்கை எனும் பாலை உறிஞ்சிக் குடித்துவிட்டு அவன் எத்தகைய முட்டாள் என எண்ணி ஏளனமாக நகைக்கின்றனர்!

சகோதரா! தொட்டிலைப்பார். பூனை தொட்டிலி லிருந்து வெளியே குதித்து ஓடும். ஏமாறாதே. உன் பணியில் கவனமாக இரு. ஆத்ம ஞானம் பெறும் சாதனையில் தீவிரமாக ஈடுபடு.

## 17. விலைமகளும் அவளது காதலனும்

ஒரு மனிதன் ஒரு விலைமகளிடம் தீவிர காமம் கொண்டிருந்தான். அவன் மீது பக்தி செலுத்தும்

அவனுடைய மனைவி தயாரித்திருக்கும் சுவைமிகு உணவை உண்பதற்கு ஒரு மணி நேரம் கூடச் செலவிட மாட்டான். அவன் தன் மனைவியின் முகத்தைக்கூடப் பார்ப்பதில்லை. காலப்போக்கில் தனக்கு ஒரு மனைவி இருக்கிறாள் என்பதையே அவன் மறந்துவந்தான். உணவு உட்கொள்ளும் நேரத்தில் தான் அவளைப்பற்றிய நினைவு வரும். அவனுக்கு ஒரு நல்ல நண்பர் இருந்தார். அவர் அவனை ஒரு நாள் தனியே அழைத்துச் சென்று அறிவுரை கூறினார். ''நண்பா! உன்னிடம் நான் எந்த அளவுக்கு அன்பு கொண்டிருக்கிறேன் என்று உனக்குத் தெரியும். எனவே நான் சொல்வதைக் கேள். இனிமேல் அந்த விலைமகளை நாடிச் செல்லாதே'' என்று கூறினார். ''ஏன், அவள் என்னிடம் அன்பு செலுத்துகிறாள்; அழகாக இருக்கிறாள். அவள் என் உயிர். அவள் இல்லாமல் நான் இன்பம் அனுபவிக்க முடியாது. அவளிடம் இன்பம் அனுபவிக்க இயலாவிடில் எனக்கு வாழ்வே இல்லை'' என்றான் அவன். நண்பர் மேலும் சொன்னார்: ''விலைமகளை நாடிச் செல்லாதே என்று நான் சொல்லுவதற்குக் காரணம் இருக்கிறது. நான் சொல்லுகிறபடி விலைமகள் உடலை கவனித்துப்பார். அவளை குரூரமான நோய் தொற்றிக்கொண்டிருப்பதை அறிவாய். அவளிடம் நீ உறவு கொண்டால் உன்னையும் இந்தக் கொடிய நோய் தொற்றிக்கொள்ளும். ஆகவே அவளை மறந்துவிடு''.

அந்த மனிதன் உடனே விலைமகள் இல்லத்துக்கு ஓடினான். நண்பர் சொல்லியபடி விலைமகளை சோதித்துப் பார்த்தான். நண்பர் சொல்லியது சரி என உணர்ந்தான். அந்த வினாடியே அவனுக்கு விலைமகள்மீது வெறுப்பு ஏற்பட்டது. அங்கிருந்து ஓடினான். விலைமகள் இருக்கும் தெருப்பக்கம்கூட

இனி வருவதில்லை என்ற உறுதியுடன் அவன் ஓடினான். அவனுடைய இல்லத்தில் அவன் மனைவி அவனுக்காகக் காத்திருந்தாள். அவனது வாழ்நாள் முழுவதும் அவள் குறையிலா இன்பம் தந்தாள். நாளடைவில் பழக்கதோஷம் காரணமாக அவன் விலைமகள் வாழும் தெருப்பக்கம் போனாலும் விலை மகள் கதவை மூடித் தாளிட்டுக் கொள்வாள். அவன் தன்னைக் கண்டால் தன்மீது கோபப்பட்டு பழித்துப்பேசி தனது கொடிய நோயை தனது மற்ற வாடிக்கையாளர்களும் அறியும்படிச் செய்து விடுவான் என அவள் அஞ்சினாள். அந்த மனிதன் தனது மனைவியுடன் இனிதே வாழ்ந்து உண்மை யான மகிழ்ச்சியினை அனுபவித்தான்.

மனிதனின் மனமாற்றமும் இப்படியே நிகழு கிறது. அவனுடைய இதயத்தில் அளவிலா ஆனந்தம் இருக்கிறது. ஆனால் அவன் இந்த ஆத்மா வைக் காண்பதில் அக்கறை செலுத்துவதில்லை. அப்படி ஒன்று இருப்பதாகவே அவனுக்குத் தெரியாது. எப்போதும் அவன் மாயையில் மூழ்கி இருக்கிறான். புலன்வழி இன்பத்தை அனுபவிப்ப திலேயே எப்போதும் ஈடுபடுகிறான். சிறிது நேரம்—உறக்கத்தின்போது—உள்ளுறையும் ஆத்மாவை நோக்கி அவன் வருகிறான். அங்கு அமைதியும் ஆனந்தமும் அடைகிறான். அப்போதும்கூட அவன் ஆத்மாவைக் காண்பதில்லை. அது அங்கு இருப்ப தாகவே அவன் உணருவதில்லை. அவன் கண்கள் அறியாமையில் மூடிக்கிடக்கின்றன. இப்போது ஆத்மஞானம் பெற்ற ஞானி ஒருவர் அவனது நண்பராகவும், அவனது நலம் நாடுபவராகவும் வருகிறார். அவர் அவனுக்கு அறிவுரை கூறுகிறார்: ''மனிதா, இந்த மாயையை விட்டுவிடு. புலன்வழி இன்பத்தை விரும்பாதே. உனது இதயத்தில் மிக உயர்ந்த பேரின்பம் இருக்கிறது. இதை உணர்ந்து

கொள். அங்கு செல். அளவிலாப் பேரானந்தத்தை அனுபவி.'' ஆனால் மனிதன், ''இது என்ன முட்டாள்தனம்! புலன்கள் தரும் இன்பந்தவிர வேறு ஏதேனும் இன்பம் இருக்க முடியுமா? புலன்களின் மூலம் நான் அதிகபட்ச ஆனந்தத்தை அனுபவிக்கிறேன். புலன்வழிப் பொருட்களைத் தவிர வேறு எதுவும் இன்பம் தருவதாக நான் நம்ப வில்லை. புலன்வழிப் பொருட்களின்றி என்னால் வாழ முடியாது. அவற்றை விட்டுவிட என்னால் எப்படி முடியும்?'' என்கிறான். அந்த முட்டாள் மனிதனைப் பார்த்து ஞானி மேலும் கூறுகிறார்: ''நண்பா, இந்த புலன்வழி பொருட்களில் நாட்டம் கொள்ளாதே என்று நான் கூறுவதற்குக் காரணம் இருக்கிறது. அவை குறையுடையவை. அவை அழியக்கூடியவை. முடிவிலாத் துன்பத்தைத் தரக் கூடியவை. நோயை நினைத்துப் பார். முதுமைப் பருவத்தை எண்ணிப்பார். மரணத்தை எண்ணிப் பார். புலன்களின் தன்மை இத்தகையது. உனது வாழ்க்கையை புலன் இன்பத்தை அனுபவிப்பதற் காகச் செலவிட்டால், உனக்கு நோய் வருகிறது, மூப்பு வருகிறது, மரணம் நெருங்குகிறது. புலன் வழி நாட்டத்தை விடுத்து அமரத்துவத்தையும் நிலையான பேரானந்தத்தையும் அனுபவி''.

ஞானியின் கருத்தைக் கேட்ட அந்த மனிதன், அமைதியான ஒரு இடத்தில் அமர்ந்து ஞானி சொன்ன கருத்துக்களைப்பற்றி சிந்தித்தான், அவன் உண்மையை உணர்ந்தான். புலன் இன்பத்தைப் பற்றிய எண்ணத்தையே அவன் தனது மனத்தி லிருந்து அகற்றினான். அதன் பிறகு தனது சொந்த இடத்துக்கு, ஆத்மா இருக்கும் இடத்துக்கு ஓடுகிறான். அங்கு குன்றாத அமைதியையும் நிலையான பேரானந்தத்தையும் அனுபவிக்கிறான், சிலசமயங் களில், முற்பிறவியின் வினைப்பயன் காரணமாக

அவன் பழையபுலன்களை நாடி ஓடலாம். ஆனல் மாயை அவனை விட்டு ஓடுகிருள். அவனே மயக்கினல் அவன் அவளது உண்மைத் தன்மையை உலகுக்கு உணர்த்தி விடுவான் என்றும் மற்றவர்கள் தன் வலையில் விழாதபடி செய்து விடுவான் என்றும் அவள் அஞ்சினள்.

அந்த மனிதன் ஆயுள் முழுவதும் பேரானந் தத்தை அனுபவித்து, முக்தி அடைந்தான்.

## 18. ஜலதரங்கக் கலைஞரும் அவரது கோப்பையும்

ஒரு ஏழையான ஜலதரங்கக் கலைஞர் தனது பழைய வீட்டில் அமர்ந்து ஜலதரங்கம் வாசித்துக் கொண்டிருந்தார். அப்பொழுது மழை பெய்தது. வீட்டுக் கூரை ஒழுகி தண்ணீர் கலைஞரின் தலையில் விழுந்தது. ஆனல் அவர் கலங்கவில்லை. அவர் ஜல தரங்கம் வாசிக்க பயன்படுத்திய கோப்பைகளில் ஒன்றை எடுத்துத் தலையில் வைத்துக்கொண்டார். அந்தக் கோப்பையில் மழைத்தண்ணீர் விழுந்தது. மழை நிற்கும் வரை கோப்பையை தலையில் வைத்துக்கொண்டு கலைஞர் ஜலதரங்கம் வாசித்தார். பிறகு கோப்பையை தலையிலிருந்து எடுத்துவிட்டு மீண்டும் இசை வெள்ளத்தில் மூழ்கினர்.

வறுமையில் வாடும் அந்த ஜலதரங்கக் கலைஞரை போதிய அளவுக்கு ஆன்மீகப் பழக்க வழக்கங்கள் இல்லாத ஒரு இளைஞனுக்கு ஒப்பிடலாம். அவன் வாழ்கிற உடம்பு என்னும் வீட்டுக்கு இயற்கையின் வேகத்தைத் தாங்கும் சக்தி இல்லை. அவனது சக்தி, பல வழிகளில் வெளியேறுகிறது. பிரம்மச் சாரி என்ற முறையில் அவன் வேதம், உபநிடதம் போன்ற அறநூல்களை குருகுலத்தில் படிக்கிருன்.

ஆன்மீக கருத்துக்களை அறிந்து அவன் மகிழ்ச்சி அடைகிறான். ஆனால் அவன் கட்டிளங்காளையாக வளர்ந்துவிட்டபிறகு புலன்களைத் திருப்திப் படுத்தும் வாய்ப்புக்கள் இயற்கையாக மழையெனப் பொழிகின்றன. ஆனால் நன்னெறியிலிருந்து அவன் பிறழவில்லை. அவனைப் போன்ற இளைஞன் இல்லறத்தில் ஈடுபடலாம் என அவன் படித்த அற நூல்களிற் சில கூறுகின்றன. இதன்படி அவன் திருமணம் செய்து கொள்ளுகிறான். குடும்பம் என்பது அவனுக்கு சுமையாக அமைந்தாலும் அது அவனை பேராபத்திலிருந்து காப்பாற்றுகிறது. அவன் இல்லறத்தில் இருந்துகொண்டே சாதனை என்னும் இசையினை அனுபவிக்கிறான். புலன் இன்பத்தை அனுபவித்தல் என்னும் மழை நின்றவுடன் அவன் உலகைத் துறந்து, ஆன்ம சாதனையில் தொடர்ந்து ஈடுபடுகிறான். குடும்ப பாரத்தைச் சுமக்க வேண்டுமே என்ற கவலை இப்போது அவனுக்கு இல்லை. அவன் உண்மையில் புத்திசாலி.

## 19. கோஷகாரப் பறவை

கோஷகாரப் பறவை மரத்திற்குள் வாழ்கிறது. அது மரத்தில் ஒரு துளைபோட்டு அந்தத் துளைக்குள் அது மரத்தின் பட்டைவரை வலை பின்னுகிறது. மற்ற பறவை முதலியன அந்த வலைக்குள் வந்து விடக்கூடாது என்பதற்காக அந்தப் பறவை வலையின் அனைத்துப் பகுதியையும் வலுவாக அமைத்துக் கொள்ளுகிறது.. அந்த வலையில் ஊசி குத்தக்கூட இடமில்லாதபடி அதனை மூடிவிடுகிறது. வலையில் ஒரு துளை இருந்தால் அது சுவாசிக்க வசதியாக இருக்கும். ஆனால் பாதுகாப்புக்காக அமைக்கப்பட்ட வலையால் துளையை முழுமையாக மூடிவிட்டபடியால் அந்தப் பறவை இறந்து விடுகிறது.

இதுபோல, இல்லறத்தான், துன்பத்தி லிருந்தும் வேதனையிலிருந்தும் தன்னைக் காத்துக் கொள்ளக்கருதி வீடு, குடும்பம் என்னும் வலையைப் பின்னுகிறான். புலன் இன்பத்தை அனுபவிப்பது தவிர வேறு எந்த எண்ணமும் அவன் மனத்தில் இல்லை. குடும்பம் எனும் வலையில் 'வைராக்கியம்' என்ற ஒரு துவாரமாவது வைத்திருந்தால் அவன் சுவாசித்திருப்பான்; காலப்போக்கில் ஆத்மஞானம் பெறவும் வழி இருக்கும். ஆனால் இதற்கான வழியையும் அடைத்து விட்டபடியால் வலுவான வலைக்குள் அகப்பட்டு அவன் இறந்து போகிறான்.

மனிதா! நீ இல்லறம் எனும் வலைக்குள் இருக்க விரும்பினாலும் வைராக்கியம் எனும் துளை வலையில் இருக்குமாறு பார்த்துக்கொள். தக்க சமயத்தில் நீ அந்த வலையிலிருந்து தப்பி, இறையனுபவம் என்னும் பரந்த உலகில் வாழமுடியும்.

## 20. கொசுவுக்கு பயந்த மனிதன்

இமயமலைக் காட்டுக்கு அருகில் இருந்த ஒரு கிராமத்தில் வாழ்ந்த மனிதனுக்கு வீட்டில் நிம்மதியாக உறங்க முடியவில்லை. எண்ணற்ற கொசுக்கள் ஒவ்வொரு நாளும் இரவில் அவன் இரத்தத்தை உணவாகக் கொண்டன. இதனால் வெறுப்புற்ற அந்த மனிதன், வீட்டிலிருந்து கிளம்பி உறங்குவதற்காக காட்டுக்குச் சென்றான். அவன் துப்பாக்கி எடுத்துக் கொள்ளவில்லை. காட்டைப் பற்றிய கற்பனையே அவனுக்கு இல்லை. குளிர்ந்த காற்று கொசுக்களை விரட்டியது. அவன் மகிழ்ச்சி அடைந்தான். ஆனால் ஓரிரு நாட்கள் கழித்து, ஒரு புலி அவனைத் தாக்கிக் கொன்றது.

அதுபோல, ஒரு இளைஞன் குடும்பக்கவலைகள் காரணமாக குடும்பத்திலிருந்து வெளியேறி ஆஸ்ரமத்தில் சேருகிறான். ஆனால் ஆஸ்ரமவாழ்வுக்கு தேவையான நான்கு வகைப் பண்புகள் குறிப்பாக வைராக்கியம் அவனிடத்தில் இல்லை. துவக்கத்தில் அவன் விரும்பியதை அடைந்ததாகக் கருதி மகிழ்ச்சி அடைகிறான். ஏனெனில் ஆஸ்ரமத்தில் கவலைகள் ஏதும் இல்லை. ஆனால் விரைவில் மாயை அவனைப் பிடித்துக் கொள்ளுகிறாள். அவன் பெண், பொன், புகழ் இவற்றுக்கு ஆசைப்பட்டு தன்னை இழக்கிறான்.

## 21. இரு வியாபாரிகள்

இரு வியாபாரிகள் தொலைவில் இருந்த ஊருக்கு வியாபாரம் செய்வதற்காகப் புறப்பட்டனர். அவர்கள் இருவரும் செல்வந்தர்கள். புதிய இடத்தில் வியாபாரத்தை ஆரம்பித்தால் நல்ல லாபம் கிடைக்கும் என இருவரும் கேள்விப் பட்டனர்.

வியாபாரிகளில் ஒருவன் பெயர் ராம், அவன் பின்வருமாறு நினைத்தான்: ''நான் என்னிடம் உள்ள செல்வத்தை முழுமையாக இந்த வியாபாரத் திற்காகப் பயன்படுத்த வேண்டும். வியாபாரம் துவக்கத்தில் சுமாராக நடந்தாலும், துவக்கத்தில் நஷ்டம்ஏற்பட்டாலும் நான் போடுகிற அஸ்திவாரம் பலமாக இருக்கும். நாளடைவில் நான் நல்ல லாபம் சம்பாதிப்பேன்''. அவன் எண்ணியபடி தனது செல்வம் முழுவதையும் வியாபாரத்திற்குப் பயன் படுத்தினான். வியாபாரத்தை சரியானபடி நடத்தினான். ஆரம்பத்தில் வழக்கமாக ஏற்படும் நஷ்டம் ஏற்படத்தான் செய்தது. ஆயினும் அவன் தாக்குப்பிடித்தான். காலப்போக்கில் வியா பாரத்தில் நற்பெயர் எடுத்தான். நாளடைவில்

வியாபாரத்திலிருந்து அவன் எதிர்பாராத அளவில் அதிக லாபம் கிடைத்தது.

மற்ருெரு வியாபாரியின் பெயர் கோவிந்தன். அவன் பின்வருமாறு எண்ணிஞன் ''நான் என்னிடம் இருக்கும் பணம் முழுவதையும் வியாபாரத்தில் போட்டு வியாபாரத்தை நடத்தும்போது நஷ்டம் ஏற்பட்டால் வியாபாரத்தில் போட்ட பணத்தையும் இழந்துவிடுவேன், எதிர்கால செலவுக்கும் கையில் பணம் இருக்காது. ஆகவே ஆரம்பத்தில் நான் என்னிடம் உள்ள பணத்தில் ஒருபகுதியை மட்டுமே வியாபாரத்தில் போடவேண்டும். வியாபாரத்தில் லாபம் கிடைத்தால் அதில் மென்மேலும் பணத்தை முதலீடு செய்வேன். பிறகு புதிய லாபம் எனது வாழ்க்கைச் செலவுக்குப் போதுமானதாக இருக்கும் இதற்காக பழைய செல்வத்தை நான் நாடியிருக்க அவசியம் இருக்காது''.

துவக்கத்தில் அவன் தனது செல்வத்தில் ஒரு சிறு பகுதியையே முதலீடு செய்தான். ஆரம்பத்தில் ஏற்பட்ட நஷ்டம் அந்தப் பணத்தை கபளீகரம் செய்துவிட்டது. பிறகு அவன் மேலும் சிறிதளவு தொகையை முதலீடு செய்தான். அதுவும் ஆரம்ப நஷ்டத்தை ஈடுகட்டத்தான் சரியாக இருந்தது. அதிலிருந்து லாபம் ஏதும் பெற முடியவில்லே. ஆண்டுகள் உருண்டு ஓடின. அவனுடைய செல்வத்தை முழுமையாக இழந்து விட்டான். அவன் வாழ்க்கைச் செலவுக்கு ஒரு சிறிதளவுகூட பணம் இல்லாமற்போயிற்று.

இந்த இருவகை வியாபாரிகளும் இருவகைப் பட்ட ஆன்மீக சாதகர்களேப் போன்றவர்கள்.

வியாபாரம் செய்வதற்காக அவர்கள் நெடுந்தொலேவு சென்றதுபோல ஆன்மீக சாதகர்

களும் தனிமையை நாடிச்சென்று ஆன்ம சாதனை புரிய விரும்புகின்றனர்.

தனது சொத்தை ஒரே நேரத்தில் முழுமையாக வியாபாரத்தில் ஈடுபடுத்திய வியாபாரியைப் போல, ஒரு ஆன்மீக சாதகன் தனது உடமைகள் அனைத்தையும் ஒரே நேரத்தில் உடனடியாகத் துறந்துவிடுகிறான். அந்த வியாபாரியைப் போல, ஆன்மீக சாதகனுக்கும் துவக்கத்தில் சில தோல்விகள் ஏற்படுகின்றன. ஆயினும் அதுபற்றிக் கவலைப் படாமல் தொடர்ந்து முயன்று ஆத்மீகப்பாதையில் நன்கு நிலைபெற்றுவிடுகிறான். பிறகு அவனுக்கு வீழ்ச்சியோ இறுதியில் இழப்போ இல்லை. அவன் வேகமாக முன்னேறுகிறான். ஆன்மீக வாழ்வின் பேரானந்தத்தை, மனிதன் தனது வாழ்வில் அடைய விரும்பும் மிகப்பெரிய நன்மையை அடைகிறான்.

தனது சுகவாழ்வில் ஓரளவு மட்டும் துறந்து ஆன்ம சாதனை புரியத்துவங்கும் ஆன்மீக சாதகன், கோவிந்தன் என்னும் வியாபாரியைப் போன்றவன். அவன் தனது சொத்து சுகங்களில் ஒரு பகுதியை தேவைப்படும்போது பயன்படுத்திக் கொள்ளுவதற்காக அவன் பத்திரப்படுத்தி வைத்திருக்கிறான். சாதகன் பின்வருமாறு ஐயப்படுகிறான். ''நான் எனது செல்வம் அனைத்தையும் துறந்து ஆன்மீக சாதனையில் ஈடுபட்டு அதில் தோல்வியுற்றால், பிறகு உலகில் நான் பிச்சைக்காரனைப் போல வாழ வேண்டிய நிர்பந்தம் ஏற்படும். ஆகவே, ஓரளவு சொத்தை சேமிப்பில் வைத்திருக்க வேண்டும். பேரானந்தப் பெருவாழ்வை அடைந்ததும் இந்தச் செல்வத்தையும் நான் துறந்துவிடுவேன். பேரானந்தப் பெருவாழ்வை நான் அடைய முடியாவிட்டால், இந்த உலகின் செல்வத்தை நான் பயன்படுத்திக் கொள்வேன்''.

இரண்டாவது வியாபாரி போன்ற இந்த சாதகன், காலமகளின் கொடுங்கரத்தால் தாக்கப் படும்போது தனது சொத்தை முழுமையாக இழந்து விடுகிறான். கோவிந்தன் வியாபாரத்தில் முழு நஷ்டம் அடைந்ததுபோல இந்த சாதகனும் ஆன்மீக வாழ்வின் பலன்களை ஒருசிறிதும் அனுபவிப் பதில்லை.

ஓ! மனிதா! இறைவனின் திருவாக்கை நினைவில்கொள்: ''ஆன்மீக முயற்சியில் ஆரம்பகால இழப்பு இல்லை. எதிர்ச்செயல்கள் கூட இல்லை. இந்த உண்மை (சட்டத்தை) யினை நீ சிறிதளவு உணர்ந்து கொண்டாலும் அது உன்னை பெருமளவுக்கு ஆபத்திலிருந்து காக்கும்''.

தயக்கமின்றி உனது அனைத்து உடைமைகளையும் துறந்துவிடு. அப்போது ஆன்மீக வாழ்வின் பலன் களை நீ அனுபவிப்பாய்.

## 22. இரு பறவைகளும் கருடனும்

ஒரு அழகிய கருடன் வானத்தில் பறந்து கொண்டிருந்தது. தரையில் அமர்ந்து கொண் டிருந்த இரு பறவைகள் ஆகாயத்தில் மிக உயரமான தொலைவில் கம்பீரமாக பறந்து கொண்டிருந்த கருடனைக் கண்டன. இளம் பறவை ஏக்கமடைந்தது ''நாம் பறந்து என்ன பயன்? பறக்க வேண்டு மென்றால் கருடனைப்போல் பறக்க வேண்டும். அப்படிப் பறப்பதற்கு நம்மால் முடியவில்லை என்றால் நாம் நமது சிறகுகளை எரித்துக் கொள்ளுவது சாலச் சிறந்தது. இனிமேல் நான் பறக்கப் போவதில்லை''. என்று இந்த இளம் பறவை மற்றொரு பறவையைப் பார்த்துக் கூறியது. முதிய பறவை அதற்கு பதிலளித்தது. ''சகோதரா! நீ பேசியது சரியல்ல.

நமக்கும் சிறகுகள் இருக்கின்றன. நம்மால் பறக்க முடியும். நாம் மனத்தளர்ச்சியடையக் கூடாது. நம்மால் முடிந்ததைச் செய்ய வேண்டும். அதில் ஒரு அழகு இருக்கிறது'' இவ்வாறு சொல்லிக் கொண்டு அந்த முதிய பறவை பறந்து சென்றது. இளைய பறவை தனது விரக்தியிலிருந்து விடுபட வில்லை. அப்போது அங்கே ஒரு வேடன் வந்தான். அவன் அதை எளிதாகப் பிடித்துக் கொண்டான்.

ஒரு ஞானி தெய்வீக வாழ்வில் உயர்ந்து நிற்கிறார். தெய்வீகப் பேரானந்தம் என்னும் பெரு நெறியில் அவர் மிக உயரிய இடத்தில் பறந்து கொண்டிருக்கிறார். இப்படிச் செய்ய எல்லோ ராலும் இயலாது. ஆனால் கடவுள் ஒவ்வொரு வருக்கும் சில நல்ல குணங்களையும், சில திறமை களையும் கொடுத்திருக்கிறார். அவற்றை உன்னால் முடிந்த அளவுக்கு பயன்படுத்தவேண்டும். உனது அறிவுத்திறமை இதன் மூலம் மட்டுமே வெளிப் படும். இவ்வாறு நீ செய்யாவிடில் தாமஸம் என்னும் வலையில் நீ சிக்கிக் கொள்வாய். சம்சாரக் கடலில் நீ மூழ்கிப்போவாய்.

---

## 3-வது அத்தியாயம்

# குருவின் பெருமை

## 23. குருடனுக்கு வழிகாட்டிய குருடன்

ஒரு தர்மச் சத்திரத்தில் ஐம்பது குருடர்கள் அமர்ந்து இருந்தனர். அவர்கள் பிறவிக்குருடர்கள். அவர்கள் அனைவரும் வெகு தொலைவிலிருந்த ஒரு புனிதத் தலத்திற்கு யாத்திரை செய்ய விரும்பினர்.

புதிதாக நான்கு குருடர்கள் அந்தக் குழுவில் சேர்ந்து கொண்டனர். தாங்களும் அதே புண்ணிய ஸ்தலத்துக்கு செல்வதாக அவர்கள் கூறினர். ஐம்பது குருடர்களின் தலைவன், புதிதாக வந்து சேர்ந்தவர்களிடம் பின்வருமாறு கூறினான்: "நண்பர்களே நாங்கள் அனைவரும் குருடர்கள். புண்ணிய ஸ்தலத்துக்குச் செல்லும் வழி எங்களுக்குத் தெரியாது. எங்களுக்கு வழிகாட்ட உங்களால் முடியுமா ? உங்களுக்கு கண் பார்வை இருக்கிறதா ?"

அந்த நான்கு குருடர்களும் பின்வருமாறு பதிலளித்தார்கள். "ஆம் நண்பர்களே அந்த புனித தலத்தைப்பற்றி நாங்கள் நிறைய கேள்விப்பட்டிருக்கிறோம். அதற்கு செல்லும் வழியைப் பற்றியும் நிறைய கேள்விப்பட்டிருக்கிறோம். அந்த வழித் தடம் எங்கள் மனக்கண்ணில் பசுமையாக இருக்கிறது. அந்தப் பாதையை எங்களால் கண்ணால் காண முடியாது. ஆனால் அந்த வழியில் நடந்து அந்த தலத்தை எங்களால் அடையமுடியும். உங்களையும் அங்கு அழைத்துச்செல்ல முடியும். எங்களை பின்தொடர்ந்து வாருங்கள்".

அவர்கள் ஒருவருக்கொருவர் கயிற்றால் தம்மை கட்டிக் கொண்டனர். நால்வரில் திறமைசாலி அவர்களனைவரையும் வழி நடத்திச் சென்றான். செல்லவேண்டிய பாதை அவன் மனத்தில் தெளிவாக இருந்தது உண்மைதான். ஆனால் அதனால் பலன் இல்லை. அவன் வழிதவறிப்போனான். விரைவிலேயே ஆழமான பள்ளம் ஒன்றில் அவன் விழுந்தான். அவனுடன் கட்டப்பட்டிருந்த-அவன் எங்கே அழைத்துச் செல்லுகிறான் என்று விவரம் தெரியாத மற்ற குருடர்கள் அனைவரும் அவனுடன் அந்தப் பள்ளத்தில் ஒவ்வொருவராக விழுந்தனர். அனைவரும் மடிந்தனர்.

பாமர மக்களின் இன்றைய நிலையும் இதுபோலத் தான் இருக்கிறது. வற்றாத பேரானந்தமும் புனிதத் தன்மையும், தெய்வீகமும் நிறைந்த இடம் ஒன்று இருப்பதாக அவர்கள் கேள்விப்படுகின்றனர். ஆனால் அந்த இடத்தை அடைவதற்கான வழி அவர்களுக்குத் தெரியாது. தம்மை யாராவது அந்த இடத்துக்கு அழைத்துச் செல்லமாட்டார் களா? என்று காத்திருக்கின்றனர். இந்த நேரத்தில் ஒரு சில குருடர்கள் அந்த இடத்துக்கு வந்து சேர்கின்றனர். இறைவனுடைய சாம் ராஜ்யத்தைப்பற்றி ஏராளமாக கேள்விப்பட்டிருக் கின்றனர். அவர்கள் மாமேதைகள். அவர்கள் தமக்கு வழியும் தெரியும், பிறருக்கு வழிகாட்டவும் முடியும் என்று நினைக்கின்றனர். அவர்கள் விஞ்ஞானிகளும், விஞ்ஞான நோக்கில் தத்துவ விளக்கமும் செய்பவர்களும் ஆவர். அவர்கள் இறைவனுடைய சாம்ராஜ்யம் அல்லது நிலையான பேரானந்த பெருவாழ்வுக்கு பாமரமக்களை வழி நடத்திச் செல்வதாக வாக்களிக்கின்றனர். பேதை களான மக்கள் அவர்களைப் பின் தொடர்ந்து செல் கின்றனர். இந்தத் தலைவர்கள் மாமேதைகள். ஆனால் சுய கட்டுப்பாடோ, அனுபவமோ இல்லாத வர்கள். ஆசைகளும், வாசனைகளும் அவர்களை வழி நடத்திச் செல்கின்றன. அவர்கள் புலன்வழி இன்பத்தில், உலகியல் வாழ்வில் ஈடுபட்டு அழிந்து விடுகின்றனர். அவர்களைப் பின்பற்றிச் செல் வோரும் அதே அழிவினை அனுபவிக்கின்றனர்.

மனிதர்களே! கவனமாகக் கேளுங்கள்! குருட்டுத்தனமாக வழிநடத்திச் செல்பவர்கள் பின்னால் செல்லாதீர்கள். ஆத்ம ஞானமும், பேரா னந்த பெருவாழ்வும் அடைந்திருக்கிற ஞானியரை பின் தொடர்ந்து செல்லுங்கள்.

## 24. ஒரு வஞ்சகனும் நான்கு முட்டாள்களும்

ஒருவன் ஒரு பூங்காவுக்குச் சென்றான். அங்கிருந்த சிமெண்ட் பெஞ்சுகள் அனைத்திலும் ஆட்கள் அமர்ந்திருந்தனர். அவன் களைப்புற்று இருந்தான். சிறிது நேரம் ஓய்வெடுக்க எண்ணினான். அமர்ந்திருந்தவர்களில் எவரும் இடத்தை விட்டு எழுந்திருப்பதாக இல்லை. அவனுக்கு ஒரு யோசனை தோன்றியது. அவன் பூங்காவின் ஒரு மூலைக்குச் சென்றான். எதையோ உற்றுப் பார்த்தான். அதிசயத்தில் ஆழ்ந்து போனதுபோல பாவனை செய்தான். அவன் எதைக் கண்டு அதிசயப் படுகிறான் என்று அறிந்துகொள்ளும் ஆவலை அவனுக்கு அருகிலுள்ள பெஞ்சில் அமர்ந்திருந்த நான்கு பேர்களிடம் அவன் தோற்றுவித்தான். அந்த நால்வரும் ஆவல் மிகுதியால் அவன் அருகில் வந்தனர். அவர்கள் வந்ததும் அவன் திரும்பி அவர்கள் அமர்ந்திருந்த பெஞ்சுக்கு வந்தான். அதன்மீது படுத்து நிம்மதியாக உறங்க ஆரம்பித்தான். அவன் எதைப் பார்த்தான் என்று அவர்கள் பார்ப்பதற்குள் அவன் ஆழ்ந்த உறக்கத்தில் மூழ்கினான். அந்த நான்கு முட்டாள்களும் வெகு நேரம் விவாதித்துக்கொண்டிருந்தனர். அவன் எதைப் பார்த்தான் என்பதில் சரியான முடிவுக்கு வர அவர்களால் இயலவில்லை.

உலகில் பலரின்நிலை இதுவாகத்தானிருக்கிறது. அடிக்கடி ஒரு விஞ்ஞானி, அல்லது ஒரு அரசியல் வாதி தோன்றுகிறார். அவர் வசதியாக வாழ விரும்புகிறார். பெயர், புகழ், பதவி, அந்தஸ்து இவற்றுடன் வாழ அவர் விரும்புகிறார். அவர் புத்திசாலி. பாமர மனிதன் முட்டாள் என்றும், அவனை எளிதாக ஏமாற்றி விடலாம் என்றும் அவர்

தெரிந்து கொள்கிறார். இந்த விஞ்ஞானி அல்லது அரசியல்வாதி ஏதோ மிக அரிய ஒன்றைக் கண்டு பிடித்து விட்டதாக நடிக்கிறார். மக்கள் அவரைச் சுற்றி வட்டமிடுகின்றனர். அவரது கண்டு பிடிப்பைப் பற்றி அக்கறையோடு விவாதிக் கின்றனர். அவரது கண்டுபிடிப்பின் தன்மையைப் பற்றிய அவர்களது விவாதம் எல்லையின்றி நீடிக்கிறது. ஆனால் அவர் வங்கியில் நிறைய பணத்தைச் சேமித்து வைத்துக்கொண்டும், பெயர், புகழ் தேடிக்கொண்டும் சுகமாக வசதியாக வாழ்ந்து வருகிறார்.

முட்டாளே கபடநாடகம் ஆடுவோரை நம்பி ஏமாறாதீர். உண்மை ஞானியை நாடிச் செல். அவர் உனது வாழ்வில் ஒளி ஊட்டுவார். உனது லட்சிய பயணத்தில் வழிகாட்டுவார். நிலையான பேரானந்தமும், வற்றாத அமைதியும் நீ அடைவதற்கு அவர் உறுதுணையாக இருப்பார்.

## 25. கோடீஸ்வரரின் தூதன்

ஒரு கோடீஸ்வரர் அடுத்த ஊரிலிருந்த மற் றொரு செல்வந்தருக்கு செய்தி ஒன்றை அவசரமாக அனுப்ப விரும்பினார். தனது குமாஸ்தாக்களில் திறமைசாலியான ஒருவரை அழைத்து செய்தியை அவரிடம் கொடுத்து "தயவு செய்து இதை அவசர மாக எனது நண்பரிடம் கொடுத்துவிட்டு வாருங்கள்" என்று கூறினார். அந்த குமாஸ்தாவும் செய்தியை அடுத்த ஊர் பணக்காரரிடம் சேர்ப் பித்தார். கர்வம் கொண்ட பணக்காரர் செய்தி கொண்டுவந்தவரைப்பார்த்து, "நீங்கள் உணவு உட்கொண்டிருப்பீர்கள் என நினைக்கிறேன். இல்லை யென்றால், இந்தப் பழத்தைத் தின்றுவிட்டுப் போய் வாருங்கள்" என்று அலட்சியமாகக் கூறினார்.

செய்தி கொண்டு சென்ற குமாஸ்தா மிகவும் வேதனைப்பட்டார். அங்கிருந்து வெளியேறினார். வழியில் ஒரு ஏழை அவரைக் கண்டான். அன்புடனும், கனிவுடனும் ஒரு டம்ளர் தண்ணீர் கொடுத்தான். அந்த குமாஸ்தா பெரிதும் திருப்தி யுற்றார். தண்ணீர் குடித்துக் களைப்பாறினார். அவர் தனது முதலாளியிடம் நிகழ்ந்தது அனைத்தையும் விபரமாகக் கூறினார். கோடீஸ்வரர் தனது தூதருக்கு இழைக்கப்பட்ட அவமானம் தனக்கே இழைக்கப்பட்ட அவமானம் எனக் கருதினார். அடுத்த ஊர் செல்வந்தருடன் அவர் தனது நட்பை முறித்துக் கொண்டார். ஏழை மனிதனைப் பாராட்டிப் பரிசு வழங்கினார்.

அதுபோல இறைவன் ஞானியர்கள், துறவி யர்கள் ஆகியோரின் வடிவில் தனது தூதர்களை அனுப்பிவைக்கிறார். அவர்கள் நம்பிக்கை, மகிழ்ச்சி, அமரத்துவம் என்ற செய்திகளுடன் நிலவுலகிற்கு வருகின்றனர். செல்வம், பதவி, அந்தஸ்து ஆகிய வற்றுடன் வாழ்கிற ஒரு மனிதன் அகங்காரத்துடன் இருக்கிறான். அவன் ஒரு ஞானிக்கு ஆஸ்ரமம் கட்டிக் கொடுக்கிறான். அல்லது அவரது லட்சியப் பணிக்கு லட்சக்கணக்கான ரூபாய் நன்கொடை தருகிறான். ஆனால் இவை அனைத்தும் தற்பெருமையுடனும், கர்வத்துடனும், பெயர் புகழில் நாட்டம் கொண்டும் செய்யப்பட்டவை. மாறாக ஒரு ஏழை மனிதன் ஞானிக்கு ஒரு பூ, ஒரு பழம் அல்லது தண்ணீரைக் கொடுக்கிறான். அத்துடன் தனது இதயத்தையும் கொடுக்கிறான். ஞானி அவனது பண்பைக்கண்டு மகிழ்ச்சி அடைகிறார். பணக்காரன் மற்றும் ஏழையின் பண்புகளை ஞானி யின்மூலம் இறைவன் ஒப்புநோக்கி அறிந்து கொள்ளுகிறார். தற்பெருமை கொண்ட பணக் காரனை அவர் தண்டிக்கிறார். பக்தி சிரத்தை

உடைய ஏழைக்கு அருளும், பொருளும் வழங்கி ஆசீர்வதிக்கிறார். தேவைப்படுவது நல்ல மனோ பாவம்தான். அளவு முக்கியமல்ல; தரம்தான் முக்கியம்.

## 26. போலி பக்தன்

ஒரு சமயம் ஒரு கோழை வாழ்ந்து வந்தான். தான் பகவான் நரசிம்மமூர்த்தியின் பரமபக்தன் என்பதாக பொதுமக்கள் மத்தியில் தன்னை விளம்பரப்படுத்திக் கொள்ள அவன் விரும்பினான். அவனிடம் துணிவும் இல்லை; அறிவும் இல்லை. பக்தியும் இல்லை. சிரத்தையும் இல்லை. அவன் பச்சைகுத்துகிற ஒருவரிடம் சென்றான். பகவான் நரசிம்மமூர்த்தியின் திருவுருவத்தை தனது முதுகில் எழுதுமாறு சொன்னான். அப்படிச் செய்தால் மக்கள் தன்னை பரமபக்தன் என்பதாகக் கருதுவர் என அவன் எண்ணினான்.

பச்சை குத்துபவர் மெதுவாக தனதுபணியைத் துவக்கினார். ஒரு சில நிமிடங்களில் ஊசிமுனைக் குத்தல்களால் அவனுக்கு வலி ஏற்பட்டது. அவனால் தாங்கிக்கொள்ள முடியவில்லை. உண்மையான நரசிம்மமூர்த்தி தனது முதுகில் வந்து அமரப்போவதாக எண்ணி அவன் நடுங்கினான். ''இறைவனின் எந்தப் பகுதியை இப்போது வரைகிறீர்கள்?'' என்று அவன் கேட்டான். கால்களை முதலில் வரையத் துவங்கியிருப்பதாக பச்சை குத்துபவர் சொன்னார், உடனே அந்தக் கோழை ''ஐயா, கடவுளின் கால்கள் எனக்கு வலியைத் தருகின்றன. எனக்கு அவருடைய கால்கள் வேண்டாம். கடவுளின் வேறு ஏதேனும் ஒரு உறுப்பை வரையுங்கள்'' என்றான். பிறகு பச்சைகுத்துபவன் இறைவனின் கைகளை வரையத்துவங்கினான். அப்போதும் அந்தக் கோழை

முன்பு சொன்னது போலவே பதிலளித்தான். பிறகு பச்சை குத்துபவன் இறைவனின் தலையை வரையத் துவங்கினான். இதுபற்றி அந்தக் கோழை யிடம் சொன்னதும் அந்தக் கோழை நடுங்கினான். நரசிம்மமூர்த்தியின் தலையை அவன் கற்பனைசெய்து பார்த்தபோது அவனுக்கு பயம் தோன்றியது. அவன் தெருவில் அலறிக்கொண்டு ஓடினான். "பகவான் நரசிம்மமூர்த்தி எனக்கு அருள்புரிந்திருக் கிறார். அவர் எனது முதுகில் அமர்ந்திருக்கிறார். மனிதர்களே, என்னைப் பாருங்கள். நான் எவ்வளவு சிறந்த பக்தன் என்பதைக் காணுங்கள்" என்று சொல்லிக்கொண்டே ஓடினான். அந்தக் கோழையின் முதுகில் சில கோடுகள் அலங்கோலமாக அங்கும் இங்கும் வரையப்பட்டிருப்பதைக் கண்ட மக்கள் அவனைக் கேலி செய்தனர். அவன் செய்கிற தவறை யும் அவனது அறியாமையையும் கண்டு அவர்கள் பரிதாபப்பட்டனர்.

உலகில் போலி ஞானிகளும் போலி வேதாந்தி களும் போலி யோகிகளும் நிறைய இருக்கின்றனர். இவர்கள் கோழைகள். ஆனால் இவர்கள் தம்மைப் பெரிய யோகிகளாகவும் பக்தர்களாகவும் அறிவித்துக்கொள்ள விரும்புகின்றனர். தம்மை குருவிடம் ஒப்படைத்து, அவர் கற்றுத்தருபவற் றைப் பொறுமையாகக் கற்கும் மனப்பக்குவம் அவர்களுக்கு இல்லை. ஆன்மீகப் பாதையில் தோன்றும் தடைகளைக் கடந்து செல்ல அவர்களால் இயலவில்லை. குருநாதரின் திருவாக்கிலிருந்து வெளிவரும் ஓரிரு வார்த்தைகளை அவர்கள் பிடித்துக் கொண்டு அவற்றை மக்களிடத்தில் பிரசாரம் செய்கின்றனர். அவர்கள் இறை அனுபவம் பெற்றுவிட்டவர்களைப்போன்று நடிக்கின்றனர். நரசிம்மமூர்த்தி தனது முதுகில் அமர்ந்துவிட்டதாக எண்ணிய கோழையைப்போல அவர்கள் செயல் படுகின்றனர்,

மனிதா! ஒரு குருவிடம் முழுமனதுடன் உன்னை ஒப்படைத்துவிடு. அவர் இறைவனின் திருவுருவத்தை உன்மனதில் அழியா ஓவியமாக வரைந்துவிடுவார். நீ புறஉலகுக்கு அதைக் காட்டா விட்டாலும் உன்னிடத்தில் உள்ள அந்த அழியா ஓவியத்தை மக்கள் உணர்ந்துகொள்வர். இடையூறு களை நீ எதிர்நோக்க வேண்டியிருக்கும். அவைகளைக் கடந்துசெல்ல வேண்டியிருக்கும். இதனை நினைவில் கொள்.

துணிவுடன் இரு. தைரியமாக இரு. பொறுமை யாக இரு. ஊக்கத்துடன் இரு.

## 27. குருவும், சீடனும்

ஒரு சமயம் பிரம்மநிஷ்டையில் சிறந்து விளங்கிய குரு வாழ்ந்து வந்தார். அவர் தன் உள்ளுணர்வு கலந்த ஞானத்தாலும், தன் அனுபவத் தாலும், தன்னால் இயன்ற அனைத்து வழிகளிலும், அருளுரை நிகழ்த்துதல், புத்தகம் எழுதுதல், அறிவுரை கூறுதல் ஆகியவற்றின்மூலமும் மனிதகுலம் முழுவதற்கும் ஒளிமயமான வழிகாட்டுவதில் முழுமையாக ஈடுபட்டிருந்தார். அவர் தனது சீடர் களில் ஒருவரை குறிப்புக்கள் எடுத்து புத்தகங்களைத் தொகுப்பதற்காக நியமித்திருந்தார். காலப் போக்கில் அந்த சீடர் கிராமபோன் ரெகார்டு போல ஆகிவிட்டார். குருநாதரின் சொற்களையும் உணர்ச்சிகளையும் எப்போதும் வெளிப்படுத்தி வந்தார். இவ்வாறு செய்யும்போது அவரிடத்தில் தற்பெருமையும் கர்வமும் ஏற்பட்டது. "குருவுக்கு என்ன தெரியும்? பல விஷயங்கள் எனக்கு மனப் பாடமாகத் தெரியும். எல்லா அறநூல் களிலிருந்தும் என்னால் மேற்கோள் காட்ட முடியும்.

நான் அனைத்தும் அறிந்த பூரண ஞானி'' என்று அவர் சொல்லித் திரிந்தார். சுருங்கச் சொன்னால் அவர் ஒரு துரோகியாக மாறிவிட்டார்.

ஒரு சமயம், குருவின் சீடர்களில் ஒருவரின் குடும்பத்தில் ஒருவர் இறந்துவிட்டார். துரோகியாக மாறிவிட்ட சீடரை குரு அழைத்து துயரத்தில் ஆழ்ந்துள்ள குடும்பத்தினருக்கு ஆறுதல் சொல்லி வர அனுப்பினார். அந்தச் சீடரும் துயரத்தில் ஆழ்ந்துள்ள குடும்பத்தினரை சந்தித்து மிகுந்த ஆர்வத்துடன் வேதாந்த முழக்கம் செய்யத் துவங்கினார். ஊமை பல்வேறு விஷயங்களை விளக்கி உரைக்க முயலுவதுபோன்று அந்தக்காட்சி அமைந்தது. அந்த வீட்டில் உள்ளவர்களின் கவலை மேலும் அதிகரித்தது. திடீரென்று அவர்கள் முன்பு குரு தரிசனம் தந்தார். அவரைக் கண்டவுடன் அனைவரும் உற்சாகமும் மகிழ்ச்சியும் அடைந்தனர்; தமது குடும்ப உறுப்பினர் ஒருவரை இழந்துவிட்ட கவலையையும் அவர்கள் மறந்துவிட்டனர். குரு ஓரிரு சொற்கள் மட்டுமே பேசினார். அவர்கள் அனைவரும் மனக்கவலையை உடனடியாக மறந்தனர்.

''மனத்தால் ஒருவர் நினைக்கமுடியாதது எதுவோ, அதுவே அந்த மனத்தை அறிய உதவுகிறது'' என்று கேனோபநிஷத் கூறுவதை நினைவுபடுத்திக் கொள்ளுங்கள்.

புத்தி பூர்வமாகவும், சொல்லளவிலும் தத்துவம் பேசுகிறவர்கள் இந்த உலகில் வீணாக வாழ்கிறார்கள். அவர்களால் மனித குலத்துக்கு எவ்விதப் பயனும் இல்லை. துக்கம் நிகழ்ந்த இல்லத்தில் வேதாந்த முழக்கம் செய்ததுபோல, அவர்கள் பேசுகிற பேச்சு மக்களின் காதுகளில் ஒலிக்கிறது.

சந்திரன் தனது ஒளியால் தான் பிரகாசிப்பதாகக் கூறமுடியுமா? தனது ஒளியால் அது உங்களுக்கு உதவுவதாகக் கூறமுடியுமா? தனது ஒளி சூரியனின் ஒளியைவிட பிரகாசமானது என்று அது கூறமுடியுமா? சூரியன் உதிக்கிறபோது சந்திர ஒளியின் சிறப்பு வெட்டவெளிச்சமாகிவிடும்.

ஆழ்ந்த அனுபவத்தின் மூலமாக ஏற்படுகிற ஞானம் இருக்கிறபோது, மூளையிலிருந்து மட்டும் உதிக்கும் ஞானத்தால் என்ன பயன்?

ஞானிகளும், துறவியர்களும் இறையனுபவம் பெற்றவர்களும் மனிதகுலம் முழுவதுக்கும் ஒளியூட்டுவதற்காக வாழ்கிறார்கள். அவர்கள் அமைதியாக இருந்தாலும் அவர்களின் தரிசனம் மக்கள் மனத்தில் மாற்றத்தைத் தோற்றுவிக்கிறது. ஆனால் வறட்டு வேதாந்தி, தனி ஒரு மனிதனைக் கூட மனமாற்றம் அடையுமாறு செய்ய இயலாது.

மனிதா! அறிவாற்றலை மறந்துவிடு. நீ பெற்றிருக்கிற அறிவு உனதல்ல, அது இறைவனுக்குச் சொந்தமானது. இறைவனின் சிறப்பை உணர்ந்து, அவனது விருப்பப்படி நடந்துகொள்.

## 28. பண்புள்ள இளைஞனும் அழகிய பெண்ணும்

ஒரு சமயம் நற்பண்பு வாய்ந்த அழகிய இளைஞன் ஒருவன் வாழ்ந்து வந்தான். மனிதர்களின் முன்னேற்றம் அல்லது நன்மைக்கு எதிராக அவன் நேராகவோ, மறைமுகமாகவோ எந்த ஒரு செயலிலும் ஈடுபட்டதில்லை. ஒருமுறை அவன் சுற்றுலாச் சென்றிருந்தான். வழியில் அவன் ஒரு அழகிய பெண்ணைக் கண்டான். கண்டதும் காதல்

கொண்டான். அவளும் ஆட்சேபனை தெரிவிக்க வில்லை. தாமதம் செய்யாமல் அவன் அந்தப் பெண்ணுடன் வீடு திரும்பினான். திருமணத் தேதியை நிச்சயம் செய்வதற்கு முன்பாக, அந்தப் பெண் வேறு ஒரு இளைஞனைக் காதலிப்பதை அவன் அறிந்துகொண்டான். அந்தப் பெண்ணின் நடவடிக்கைகளிலிருந்து அவன் இதனை அறிந்து கொண்டான். தயக்கமின்றி அந்தப் பெண்ணை அவள் விரும்பிய இளைஞனுக்கே மணம் முடித்து வைத்தான். ஓராண்டு கழிந்தது. அந்தப் பெண் பண்புள்ள இளைஞனின் அன்பை ஏறக்குறைய மறந்துவிட்டாள். அந்த இளைஞன் மந்திரவாதியிடம் பெற்ற மருந்து ஒன்றை இனிப்புப் பண்டத்தின்மூலம் அவளுக்குக் கொடுத்தான். அவள் அதைத் தின்றதும் கணவனை வெறுக்கத் துவங்கினாள். அவனைவிட்டுப் பிரிந்து பண்புள்ள இளைஞனிடம் வந்து சேர்ந்தாள். அதன் பிறகு அவர்கள் இருவரும் ஆயுள் முழுவதும் இன்பமாக வாழ்ந்தார்கள்.

கடவுளும், குருவும் ஒத்த கருத்து உடையவர்கள். அவர்கள் பண்புள்ள இளைஞனைப் போன்றவர்கள். அவர்கள் சொல்கின்ற அனைத்தும் தனி மனிதன் அல்லது உலகின் நன்மைக்காகத் தான்.

இளைஞன் பெண்ணைத் தேர்ந்தெடுப்பதுபோல குரு அல்லது இறைவன் உலகிலிருந்து சீடனைத் தேர்ந்தெடுக்கிறார்.

பெண், மற்றொரு இளைஞனை விரும்புவதுபோல பக்தன் அல்லது சீடன் உலகியற் பொருட்களை விரும்புகிறான். கடவுளும் குருவும் தமது பக்தன் மற்றும் சீடனை அவன்போக்கில் விட்டுவிடுகின்றனர்.

ஆனால் தனிமனிதன் கடவுள் அல்லது குருவை ஏறக்குறைய மறந்துவிடுகிற நிலை ஏற்படும்போது அவர்கள் தமது அருட்சக்தியை (மந்திரவாதியின் மருந்தைப்போல) பயன்படுத்தி உலகியல் பொருட்களை நாடி நிற்கும் மனத்தை திசை திருப்புகின்றனர். அவர்கள் தமது சொந்த இடத்துக்கு வந்து சேருமாறு செய்கின்றனர்.

அவர்கள் தனிமனிதனை உலக வாழ்விலிருந்து பிரித்துச் செல்வது தனிச்சிறப்பான, கேள்விக்கு அப்பாற்பட்ட செயல். ஆனால், அது தனிமனிதனின் நன்மையைக் கருதியே செய்யப்படுகிறது.

## 29. பக்குவமாக சமைக்கப்பட்ட உணவு

ஒரு சமயம் பிரம்மநிஷ்டையில் சிறந்த குருநாதர் ஒருவர் தனது சீடனுடன் வாழ்ந்து வந்தார். அவர்கள் இருவரும் ஒரே குடிலில் வாழ்ந்து வந்தனர். சீடன் சமய நூல்களை முறையாக கற்றுத் தேர்ந்தான். மேலும் அவன் இரவும், பகலும் குருநாதருக்கு தொண்டு செய்தான். குருவுடன் நெருங்கிப் பழகுகின்ற காரணத்தால் குருநாதரிடம் உண்மை அன்பு செலுத்துகிற பக்தன் தான்தான் என்று அவன் எண்ணினான். மேலும் ஆண்டு முழுவதும் அங்குமிங்கும் அலைந்து திரிந்துவிட்டு எப்போதாவது குருநாதரை தரிசனம் செய்கின்ற சீடர்கள் அவரிடம் உண்மையிலேயே அன்பு செலுத்துபவர்கள் அல்ல என்றும் அவன் நம்பினான். இது அவனுடைய அகந்தையை அதிகரித்தது.

குளிர் காலத்தில் ஒருநாள் இரவு வெளியில் ஏதோ ஒரு வேலையை முடித்துக்கொண்டு சீடன் குடிலுக்குத் திரும்பினான். அப்போது குடிலுக்குள்

எப்போதாவது குருவை தரிசனம் செய்கிற சீடர் உள்ளே இருந்தார். அவரது குரலை இந்த சீடன் கேட்டான். கதவைத் தட்டினான், குரு உள்ளேயிருந்து, ''யார் அது ?'' என்று கேட்டார். சீடன் வழக்கம்போல பதில் சொன்னான்: ''நான்தான் தயவு செய்து கதவைத் திறவுங்கள்.''

''நான் அருமையாக சமைக்கப்பட்ட உணவை உட்கொள்ளுகிறேன். இப்போது இரண்டாவது நபருக்கு இந்த விருந்தில் இடமில்லை'' என்று குரு பதிலளித்தார்

சீடன் குருவை தவறாக புரிந்து கொண்டான். எப்போதாவது ஆசிரமத்திற்கு வருகிற சீடனின் முன்னால் குருநாதர் தன்னை சிறுமைப்படுத்தி அவமானப்படுத்திவிட்டதாக அவன் எண்ணினான். இதனால் வெறுப்புற்று அந்த இடத்திலிருந்து உடனே புறப்பட்டான். குறிக்கோளின்றி அங்கும் இங்கும் அலைந்தான். காலப்போக்கில் குருநாதரிடத்திலிருந்து பிரிந்து வாழ்தல் என்னும் தீ, அகந்தையை அவனுடைய மனத்திலிருந்து அகற்றி முழுமையாக எரித்துவிட்டது. இதயமும் மனமும் தூய்மை அடைந்துவிட்டது.

பிரிவு என்னும் தீ அவனது இதயம் மற்றும் மனத்தை நன்கு பக்குவப்படுத்தியது. அவன் தன்னை மறந்தான். குருபக்தியில் சிறந்து விளங்கினான்.

ஒரு நாள் திடீரென்று அவன் குருவின் குடிலுக்கு வேகமாக வந்தான். கதவை பலமாகத் தட்டினான். அன்பு தோய்ந்த குரலில், ''குருதேவ், குருதேவ்'' என்று குரல் கொடுத்தான். அந்தக் குரல், குருநாதர் வழக்கமாக ''யாரது'' என்று

கேட்கின்ற கேள்வியை மூழ்கடித்துவிட்டது. அவன் மனத்தில் குருதேவர் மட்டுமே நிறைந்திருந்தார். அவனுக்கு வேறு எதுவும் கண்ணில் படவில்லை. தானோ அல்லது இந்த உலகமோ இருப்பதாக எண்ணவில்லை. இருப்பதெல்லாம் குருநாதர் ஒருவரே என்று அவன் எண்ணினான்.

குருநாதருக்கு அவன் குரல் நன்கு தெரியும். உள்ளே அவரால் காத்துக்கொண்டிருக்க முடிய வில்லை. அவர் வெளியே விரைந்தோடி வந்து அன்புடன் தனது சீடனை கட்டித் தழுவிக்கொண் டார். ''நான் இப்பொழுது நன்கு பக்குவமாக தயாரிக்கப்பட்ட உணவை உட்கொள்ளுகிறேன். இந்த விருந்தில் பங்கு கொள்ள வேறு எவருக்கும் இடமில்லை'' என்று அவர் கூறினார்.

இறைவன் எங்கும் இருக்கிறார். அவர் இரண்டு அல்லாத ஒன்றாக இருக்கிறார். அவரன்றி இன் னொருவர் இருப்பதற்கு இடமில்லை. இந்தப் பரந்த உலகில் அந்த ஜீவாத்மா தனித்திருக்க இடமில்லை.

அகங்காரம் இருக்கின்ற வரையில் நீங்களும்கூட கர்வம் பிடித்த இந்த சீடனைப்போல இருளில் அலைந்து இன்னல் அனைத்தையும் அனுபவிக்க வேண்டும். இந்த நிலையில் நீங்கள் எவ்வளவுதான் பக்தராக இருந்தாலும் திருத்தலங்களுக்குச் சென்று தெய்வதரிசனம் செய்தாலும் இறைவன் அருளைப் பெறமுடியாது. உங்களுக்கு அநந்யபக்தி இருக்கவேண்டும். இறைவன் அருளைப்பெற இறை வனிடத்தில் அன்பு செலுத்தவேண்டும் ''நான் இறைவனுக்கு தொண்டு செய்கிறேன்'' என்ற எண்ணத்துடன் தொண்டு செய்வது அநந்யபக்தி ஆகாது, ஆழ்ந்த அன்பு என்னும் தீயில் உங்கள்

அகந்தை அழிக்கப்படுகிறபோது அந்த நெருப்பில் உங்கள் இதயமும், மனமும் நன்குபக்குவப்படுத்தப் படுகிறபோது பிரிவு என்னும் தீயில் உங்கள் இறை அன்பு என்னும் உணவு நன்கு சமைக்கப்படுகிற போது அது இறைவனுக்கு விருப்பமானதாக ஆகிறது. அந்த நிலையில் நீங்களோ அல்லது இந்த உலகமோ இருப்பதாகக்கொள்ள முடியாது. இறைவன் ஒருவரே அப்போது நிலைத்திருக்கிறார். அப்பொழுது உங்கள் இதயத்திலும், மனத்திலும் நிறைந்திருக்கிறார். அந்த நிலையில்தான் நீங்கள் இறைவனின் அன்பைப் பெறுகிறீர்கள். அப் பொழுது குருநாதர் ஓடிவந்து சீடனை கட்டித் தழுவிக்கொண்டது போல இறைவனும் ஓடோடி வந்து உங்களைக் கட்டித் தழுவிக் கொள்ளுகிறார்.

அப்போது நீங்கள் இருவரும் நன்கு சமைக்கப் பட்ட உணவை உட்கொள்ளுகிறீர்கள். அப்போது உங்களைத்தவிர மற்றொரு நபருக்கு அங்கு இடம் இல்லை.

''இறைவா இந்த அனைத்தும் உனது சொந்த ஆத்மா'' என்று சொல்லி 'தான்' என்னும் எண்ணத்தை அகற்றி விடுங்கள்.

## 30. சந்தேகப்பட்ட மனிதன் மரணத்தைத் தழுவினான்

கடலின் நடுவில் ஒரு பாறையில் இருவர் நின்று கொண்டிருந்தனர். இருள் கவ்வியது, மேகம் திரண்டது, அவர்களால் கரையைக்காண முடிய வில்லை. அலைகள் பாறையை வந்து மோதின. கடல் கொந்தளித்தது. அந்த இருளில் ஒரு மனிதன் அங்கே வந்தான். அவன் அவர்கள் இரு வரையும் பார்த்து, ''வாருங்கள் உங்கள் இருவரை

யும் கரைக்கு அழைத்துச் செல்லுகிறேன்'' என்று கூறினான்.

புத்திசாலி மனிதன் அவனைப் பின் தொடர்ந்து சென்றான்.

ஆனால் முட்டாள் மனிதன், ''நீ எப்படி எங்களை கடலைத்தாண்டி அழைத்துச் செல்வாய் ?'' என்று கேள்வி கேட்டான்.

''என்னிடம் படகு இருக்கிறது'' என்று புதிதாக வந்தவன் சொன்னான்.

''உன்னுடன் வருவதற்கு நான் ஆயத்தமாக இருக்கிறேன்'' என்று புத்திசாலி மனிதன் சொன்னான்.

''நான் வரமாட்டேன். படகில் கோளாறு இருந்தால் என்ன செய்வது ? புதிதாக வந்தவன் கொள்ளைக்காரனாக இருந்தால் என்ன செய்வது?'' என்று முட்டாள் மனிதன் வினவினான்.

புத்திசாலி மனிதன் படகில் அமர்ந்து கொண்டான். படகோட்டி அவனை பத்திரமாக கரைக்கு கொண்டுபோய் சேர்த்தான். கடலில் பொங்கிவந்த அலைகள் அந்த முட்டாள் மனிதனை விழுங்கின.

மனிதன் சம்சாரக்கடலில் மிதந்து சங்கடங்கள் பல அனுபவித்த பிறகு மனிதப்பிறவி என்னும் வரப்பிரசாதத்தை பெறுகிறான். பாதுகாப்பு என்னும் கரையை இன்னும் அடையவில்லை. வாழ்வின் அந்திப்பொழுது நெருங்கிக் கொண்டிருக்கிறது. கண்பார்வை போய்விட்டது. உலகியல் வாழ்க்கை வேற்றுமைகள் என்னும் மேகங்கள் தோன்றி ஞானம் என்னும் கண்ணை குருடாக்கி விடுகின்றன. கவலையுடன் பிரார்த்தனை செய்து

கொண்டு தனிமனித வாழ்க்கை என்னும் பாறையின் மீது மனிதன் நின்றுகொண்டிருக்கின்றான்.

அப்போது குருநாதர் வருகிறார். இறைவனின் திருநாமம் அல்லது பக்தி என்னும் படகை அவர் கொண்டு வருகிறார். தன்னைப் பின்தொடர்ந்து வந்து படகில் ஏறி பத்திரமாக கரைசேரும்படி அவர் அறிவுரை கூறுகிறார். புத்திசாலியான மனிதன் குருநாதர் சொல்லைக் கேட்கிறான். கரையைக் கடக்கிறான். ஆனால் முட்டாளின் மனதில் ஆயிரம் சந்தேகங்கள் எழுகின்றன. குருவின் தகுதிபற்றியும், பக்தியின் தன்மைபற்றியும் அவன் ஆயிரம் கேள்விகளை எழுப்புகிறான். மீண்டும் அவனை சம்ஸாரக் கடல் விழுங்கிவிடுகிறது. இக்கடலிலிருந்து தப்பித்துவிட இறைவன் தந்த மகத்தான வாய்ப்பை அவன் நழுவ விட்டுவிட்டான்.

## 31. ஆடம்பர மனிதன்

அவன் ஒரு பணக்காரன்; ஆடம்பரமான வாழ்க்கையை நடத்தி வந்தான். அறுசுவை உணவை அவன் உண்டு வந்தான். அவனுக்கு ருசியாக இல்லை என்றால் அந்தப் பண்டத்தை வீசி எறிந்துவிடுவான். இந்த ஆடம்பர வாழ்க்கையால் அவனுக்கு சீதபேதி நோய் ஏற்பட்டது. இந்த நோய் குணமாக கசப்பான மருந்தைச் சாப்பிட வேண்டும் என்று டாக்டர் கூறினார். ''இந்தக் கசப்பான மருந்தை நீ உட்கொள்ளாவிட்டால் நீ இறந்துவிடுவாய்'' என டாக்டர் எச்சரித்தார். மறுவார்த்தை பேசாமல் அந்த மனிதன் மருந்தை உட்கொண்டு குணம் அடைந்தான். அன்றிலிருந்து ஆடம்பர வாழ்க்கையை முற்றிலுமாகப் புறக்கணித்தான். இனி எப்போதும் உடல்நலம் கெடாமல் இருக்கவேண்டும் என்ற எண்ணத்தில் அவன் இப்படிச் செய்தான்.

இளமைப் பருவத்தில் ஏராளமான சக்தி உடலில் இருக்கும்போது மனிதன் கண்டதே காட்சி, கொண்டதே கோலம் என வாழ்கிறான். அனைத்திலும் சிறந்ததை அவன் விரும்புகிறான்! துறவு, தன்னல மறுப்பு, தியாகம் இவற்றை அவன் ஏளனம் செய்வான். அதிகபட்சமாக புலன் இன்பம் தராத எதன்மீதும் அவனுக்கு நாட்டம் இல்லை.

அவனது உடல் பலம் குன்றுகிறது. அப்போது குருநாதர் வருகிறார். அந்த மனிதன் பிறப்பு—இறப்பு என்னும் கொடிய நோயால் அவதிப் படுவதைச் சுட்டிக் காட்டுகிறார். துறவு, தியாகம், தன்னல மறுப்பு என்னும் கசப்பான மருந்தை அவர் அவனுக்குக் கொடுக்கிறார். ஏனெனில் பிறப்பு—இறப்பு என்னும் கொடிய நோயிலிருந்து தப்பிக்க இது ஒன்றே வழியாகும். மனிதன் மாத்திரையை உட்கொள்ளுகிறான். ஆடம்பரம், கடவுள் மறுப்பு, அஜாக்கிரதை என்னும் பழைய வாழ்க்கையைத் திரும்பவும் மேற்கொள்ளுவதில்லை என அவன் அந்த விநாடியே உறுதி பூணுகிறான்.

## 32. க்ஷயரோக நோயாளி

ஒரு மனிதன் க்ஷயரோக நோயால் அவதிப் பட்டான். அவன் உயிருடன் இருக்கும் வரையில் அந்த நோயை குணப்படுத்த முடியாது என டாக்டர் கண்டுபிடிக்கிறார். ஆயினும் அவர் இதை அந்த நோயாளியிடம் கூறவிரும்பவில்லை. மிகவும் உற்சாகமாக அவர் நோயாளியிடம் பேசுகிறார், "தம்பி, நீ முழுமையாக குணமடைந்துவிடுவாய். ஆனால் உன்னைப் பிடித்துக் கொண்டிருக்கிற நோய் கொடியநோய் என்பதை மட்டும் நீ உணர வேண்டும். இந்த நோயை மருந்தால் மட்டும் குணப்படுத்தமுடியாது. நீ உணவு உண்பதில் கடுமை யான கட்டுப்பாட்டை கடைப்பிடிக்க வேண்டும்.

அப்போது நீ மிக எளிதாக இந்த நோயிலிருந்து விடுபடலாம்'' என்று அவர் நோயாளியிடம் கூறு கிறார். நோயாளி டாக்டர் சொல்லுகிறபடி உண வில் கட்டுபாட்டைக் கடைப்பிடிக்க வாக்குறுதி அளிக்கிறான். மருந்து கொடுப்பதெல்லாம் உணவில் கட்டுபாட்டைக் கடைப்பிடிக்குமாறு செய்வதற் காகத்தான். நோயாளி மருந்தை உட்கொள்ளு கிறான். உணவிலும் கட்டுப்பாட்டைக் கடைப் பிடிக்கிறான். இப்போது நோயின் கடுமை தணி கிறது. அவன் சிகிச்சையை தொடருகிறான். நோய் அவனை முழுமையாக விட்டுவிடவில்லை. ஆனால் அது கடுமையாக அவனை பாதிக்கவில்லை. நோய் அவனிடத்தில் இருக்கிறது. ஆனால் வெளி யில் அவ்வளவாகத் தலைகாட்டவில்லை. நோயாளி இயற்கையான மரணத்தை சந்திக்கும்போது இந்த நோயும் இறக்கிறது.

அதுபோல ஒரு சாதகன், ஒரு ஆன்மீக குருநாதரை தரிசித்து தனது வாழ்க்கை வரலாறு, தான் செய்த பாவங்கள், தனது தீயகுணங்கள் அனைத்தையும் அவரிடம் கூறுகிறான். இவையனைத் தும் அஞ்ஞானத்தின் விளைவாக நிகழ்பவை என்றும் சரீர உணர்வு மறைகிறபோது அஞ்ஞானம் அகலு கிறது என்றும் குருநாதர் கண்டுபிடிக்கிறார். ஆயினும் குரு அவனுக்கு மந்திர உபதேசம் செய் கிறார். பிறகு அவனிடம் பின்வருமாறு கூறுகிறார்: ''இது மிகச்சிறந்த மருந்து. நீ அஹிம்சை, சத்யம், பிரம்மச்சரியம், ஆகியவற்றைக் கடைப் பிடிக்கவேண்டும். நீ பிரம்ம முகூர்த்தத்தில் எழுந்து தியானம் செய்யவேண்டும். நீ உனது ஆன்மீக சாதனைகளில் இடையறாது ஈடுபட வேண்டும். நீ இவ்வாறு செய்யாவிடில் இந்த மருந்தினால் பலன் ஏதும் இல்லை, நீ தன்னலத்தை மறந்து தொண்டு செய்யவேண்டும். இறைவனிடம்

பக்தி செலுத்தவேண்டும். தியானம் செய்ய வேண்டும். அப்போது உனக்குள் இருக்கும் நோய் அகன்றுவிடும்'' சாதகன் மந்திரஜபம் செய்து, ஆன்மீக சாதனையில் ஈடுபடுகிறான். விரைவிலேயே இதயத்தில் உற்சாகம், மனத்தில் தெளிவு புத்தி, கூர்மை ஆகியவற்றை அவன் அனுபவிக்கிறான். அவனது மனச்சாட்சி தெளிவாக இருக்கிறது. இந்த நல்ல அறிகுறிகள் தரும் உற்சாகத்துடன் அவன் தொடர்ந்து சாதனையிலும், மந்திரஜபத்திலும் ஈடுபடுகிறான். தீயகுணங்கள் அவனுக்குள் மறைந்திருக்கின்றன; வெளியே தலைகாட்டுவதில்லை. இறையருளால் அவன் இறப்பதற்குள் ஆன்மஞானம் பெற்றால் அவன் அஞ்ஞானம் அகலுகிறது; பிறப்பு-இறப்பு என்னும் கொடியநோயிலிருந்து அவன் விடுபடுகிறான்.

## 33. திசை மாறிய யாத்திரீகன்

புனித கங்கையில் நீராட ஆயிரக்கணக்கான மக்கள் ரிஷிகேசம் வருகின்றனர். ஒருவன் அவசர அவசரமாக ரயில்வே ஸ்டேஷனுக்குச் சென்று சென்னைக்கு ஒரு பயணச் சீட்டு தருமாறு கேட்டான். அன்று ஒரு புனித நாள். அவன் அந்த நாளில் ரிஷிகேசத்திலிருந்து புறப்படுகிறான். அன்று புனித கங்கையில் நீராடும் வாய்ப்பை நழுவவிட்டு அவன் புறப்படுவதைக் கண்ட ஒரு யாத்திரீகன் அவனைப் பார்த்து, ''தம்பி, இந்தப் புனித நாளில் இங்கு இருந்து கங்கையில் நீராடவில்லையா? நீ தெற்கில் பயணம் செய்வதை ஒத்திப்போடக்கூடாதா?'' என்று கேட்டான். அதற்கு பதிலளித்த அவன், ''நண்பரே! கங்கையில் என்ன இருக்கிறது? பல ஆண்டுகளாக இரவும் பகலும் கங்கையில் குளித்திருக்கிறேன். தென்கோடியில் ஓடும் தாமிரபரணி நதியில் நீராடினால் நிறைய

புண்ணியம் கிட்டும் என்று கேள்விப்பட்டேன். ஆகவே நான் அங்கு செல்லுகிறேன்'' என்று கூறினன். அவனது முட்டாள்தனத்தைக் கண்டு மக்கள் நகைத்தனர். ஒரு மாபெரும் துறவியுடன் நீண்ட நாட்களாக வாழ்ந்து வருகிறவர்கள் அவரிடத்தில் கொண்டிருக்கிற பக்தியை அடிக்கடி குறைத்து விடுகின்றனர். உலகத்தின் எல்லாப் பகுதிகளிலிருந்தும் இந்தத் துறவியை தரிசிப்பதற்காக பல லட்சக்கணக்கான மக்கள் வருகின்றனர். ஆனல் இந்தத் துறவிக்கு அருகிலேயே இருக்கின்ற சீடர்கள் தாங்கள் முக்தி பெறுவதற்கு சில திருத்தலங்களுக்கு யாத்திரை செய்யவேண்டுமென்றும், குறிப்பிட்ட சில சாதனைகளில் ஈடுபடவேண்டுமென்றும் அதற்காக குருநாதரை பிரிந்து செல்லவேண்டுமென்றும் எண்ணுகின்றனர். இது மிகவும் பரிதாபமானநிலை. ஒரு துறவியின்மீது உங்களுக்கு ஆழமான, உறுதியான பக்தி ஏற்படுகிறவரை அந்த பக்தி என்னும் சுடர் உங்களுக்குள்ளேயே பிரகாசித்துக்கொண்டிருக்கட்டும். இதுவே சாலச் சிறந்தது.

## 34. செம்மறி ஆடும் ஓநாயும்

ஒரு மனிதன் ஒரு மந்தை நிறைய இருந்த செம்மறி ஆடுகளை பாதுகாத்து வந்தான். அவன் ஒரு சிறு குன்றின்மேல் அமர்ந்து தொலைவில் வந்து கொண்டிருந்த ஓநாய்களை விரட்டினன். மாலை நேரம் வந்தது. அந்த மனிதன் தனக்குள் பின்வருமாறு எண்ணிக்கொண்டான். ''பகல் முழுவதும் ஓநாய்களை நான் விரட்டிக்கொண்டிருந்தேன். மந்தைக்கருகில் ஒரு ஓநாய்கூட வரமுடியவில்லை. இரவில் ஒன்றும் நிகழாது. ஓநாய்கள் வரமாட்டா. அப்படியே வந்தாலும் அவைகளை நான் விரட்டி விடுவேன்.'' இரவுப்பொழுது வந்தது. மந்தையை

நோக்கி ஓநாய்கள் வரும்போது அவை ஊளையிடும் சப்தத்தைக் கேட்டு அவன் குரல் கொடுப்பான். அவன் குரல் கேட்டு ஓநாய்கள் ஓடியிருக்கும் என்று அவன் கற்பனை செய்தான். ஆனால் இரவு முழுவதும் ஓநாய்கள் சுறுசுறுப்பாக இயங்கின. பல ஆடுகளை தூக்கிச் சென்றன. காலையில் சூரியன் உதித்ததும் மந்தையில் பாதி காலியாகி இருந்ததை அந்த மனிதன் கண்டான். அவனுக்கு புத்தி வந்தது. மறுநாள் சூரிய வெளிச்சம் இருக்கின்றபொழுதே பெரும் தீ மூட்டினான். சூரிய அஸ்தமனத்திற்குப் பிறகு வெளிச்சம் நிறைந்திருந்தது. அந்த வெளிச் சத்தின் உதவியால் மந்தையை நெருங்கி ஓநாய்கள் வராதவாறு அவன் பார்த்துக்கொண்டான்.

ஒரு ஆன்மீக சாதகனின் நிலையும் அதுதான். ஆன்மீக குரு என்னும் சூரியனின் முன்னே அவன் இருக்கிறபொழுது ஆன்மீக நற்பண்புகள் என்னும் ஆட்டு மந்தையை ஓநாய்கள் என்னும் தீய குணங்களிலிருந்து காத்துக்கொள்ள முடிகிறது. குருநாதர் என்னும் சூரியனின் உதவிகொண்டு ஓநாய்களிடமிருந்து ஆடுகளை காப்பதற்கு தன்னால் இயலும் என்பதால் எந்தப் பாவமும் தன்னைச் சேராது என்று அவன் கருதினான். பாவம் தன்னை நெருங்கி வராது என்றும் அவன் கருதினான். அவன் குருநாதரைவிட்டுத் தொலைவில் சென்றான். தன்னை ஒரு ஜீவன்முக்தன் என்று நினைத்துக் கொண்டு அப்படிச் சென்றான். பாவம், தீய வாழ்க்கை, மாயை ஆகியவற்றைச்சாடி அவன் விரிவுரைகள் நிகழ்த்தினான். குருநாதரின் தொடர்பு துண்டிக்கப்பட்ட நிலையில் அவனது அஞ்ஞானம் என்னும் இருள் தலை தூக்கியது. சாதகன் தன்னிடமிருந்த நல்ல பண்புகள் பலவற்றை இழந்தான். அவன் இதுவரை எந்தத் தீய குணங்களைச்சாடி வந்தானோ அந்தத் தீய

குணங்கள் என்னும் ஓநாய்கள் அவனுக்குள்ளே சப்தம் போடாமல் புகுந்து விடுகின்றன. அவனைச் சுரண்டி அவனது பண்புகள் பலவற்றைக் கொள்ளையிட்டு விடுகின்றன. [இறையருளால் அவன் குருநாதரிடம் திரும்பி வருவதற்கு முன்பாக தீய குணங்கள் என்னும் ஓநாய்கள் அவனை விழுங்கி ஏப்பம் விடாமல் இருந்தால்] அவன் குருநாதரிடம் திரும்பிவருகிறபொழுது தன்னிடமிருந்த ஆன்மீகச் செல்வத்தில் பெரும் பகுதியை தான் இழந்து விட்டதை அவன் உணர்கிறான். தான் குருநாதரை விட்டு பிரிந்து சென்றதே இதற்கு காரணம் என்றும் அறிகிறான். இதனை அறிந்து உணர்ந்துகொண்ட அவன் சாதன சதுஷ்டயம், யமம், நியமம், போன்றவற்றைக்கொண்டு பெரும் தீ மூட்டுகின்றான். குருவின் முன்னிலையில் அவன் இருக்கின்றபொழுதே விவேகம் என்னும் விளக்கை அவன் ஏற்றிக் கொள்கிறான். இந்த விளக்கு இருக்கின்றபொழுது அவனை நோக்கி இருள் நெருங்குவதில்லை. தீய குணங்கள் என்னும் ஓநாய்கள் இப்போது அவனுக்குத் தொல்லைகள் தருவதில்லை. பிறகு உண்மையிலேயே அவன் ஒரு யோகியாக ஜீவன் முக்தனாக ஆகிறான். அவனுக்கு உள்ளும் புறமும் குருநாதர் என்னும் ஒளி சுடர்விட்டுப் பிரகாசித்துக் கொண்டிருக்கிறது.

---

## 4-வது அத்தியாயம்

# சாதகனின் கருவி

### 35. அழுது புலம்பிய பறவை

ஒரு ஆண் பறவையும், பெண் பறவை ஒன்றும் ஒரு மரத்தின் கிளைகளில் கூடுகட்டின. அவற்றுக்குச் சில குஞ்சுகள் இருந்தன. ஆண் பறவை உணவு தேடிச் செல்லும். அப்போது பெண் பறவை குஞ்சுகளைக் கவனித்துக்கொள்ளும். ஒருநாள் ஆண் பறவை வெளியே சென்றிருந்தபொழுது ஒரு வேடன் வந்தான். பெண் பறவையைப் பார்த்து அதற்கு குறிவைத்தான். இதைப் பெண் பறவை பார்த்துவிட்டது. ஆனாலும் அது பறந்துசெல்ல வில்லை. தான் பறந்து சென்றால் தன்னுடைய குஞ்சுகளை வேடன் கொன்றுவிடுவான் என்று அது அஞ்சியது. இந்த நல்ல வாய்ப்பைக்கண்டு அந்த வேடன் பெண் பறவையின்மீது அம்பு எய்து அதனை வீழ்த்தினன். ஆண் பறவை அப்பொழுதுதான் கூட்டுக்கு வந்தது. வேடனின் அம்புக்கு இரையாகி வீழ்ந்து கிடக்கும் பெண் பறவையைக் கண்டு அது கண்ணீர் வடித்தது. தனது குஞ்சுகளுடன் அது அழுது புலம்பியது. மாறாக, தான் பறந்து சென்றிருந்தால் அது தப்பித்து இருக்கும். தனது மனைவி இறந்ததைக் கண்டு துக்கத்தில் மூழ்கி கூட்டிலேயே அது அமர்ந்து விட்டது. வேடன் மற்றொரு அம்பை அதன்மீது எய்து அதனையும் வீழ்த்தினன். பிறகு அவன் எளிதாக மரத்தில் ஏறி குஞ்சுகளைப் பிடித்துக்கொண்டான். இவ்வாறு தன்னைக் காத்துக்கொள்ளும் முயற்சியில் ஈடுபடாத குடும்பம் அழிந்தது.

இந்த உலகில் வாழ்கின்ற மனிதர்களின் நிலையும் இப்படித்தான் இருக்கிறது. பெற்றோர்கள் தமது குழந்தைகளிடத்திலும் பேரன் பேத்தி களிடத்திலும் பந்தமும் பாசமும் கொண்டிருக் கின்றனர். தம்மை மரணம் நெருங்கி வருவதைப் பற்றி அவர்கள் கவனிப்பதில்லை. மரணம் மிகவும் நெருங்கி வருகிறபொழுதுகூட பந்தம் அவர்களது கண்களை மறைக்கிறது. குழந்தைகளிடத்தில் மேலும் பற்றுகொள்ளுகிறார்கள். தவிர்க்க முடியாத நிலையில் மரணம் அவர்களை இழுத்துச் செல்லுகிறது. தன் அன்புக்கு உரிய ஒருவர் இறக்கின்றபொழுது, பாதிக்கப்பட்ட மனிதன் அதனை ஒரு அறிகுறியாக எடுத்துக்கொண்டு விவேகம் மற்றும் வைராக்கியம் என்னும் சிறகு களின் துணைகொண்டு பறந்துசென்று கடுந்தவம் புரிந்து அமர நிலையினை அடையவேண்டும். ஆனால் இதற்கு மாறாக இழப்புக்கு ஆளான மனிதன் மேலும் மேலும் அழுது புரண்டு குடும்பத்தில் தனக் குள்ள பந்தத்தை மென்மேலும் அதிகப்படுத்திக் கொள்கிறான். வேடனுக்கு [மரணத்துக்கு] மற்றொரு ஆள் எளிதாக கிடைக்கிறது. இவ்வாறு மரணத்தை எதிர்த்துப் போராடும் முயற்சியில் ஈடு படாமல் அந்தக் குடும்பத்தினர் ஒவ்வொருவராக யமனின் வீட்டை அடைகின்றனர். மரணம் தவிர்க்கமுடியாதது என்பதை அவர்கள் அறிந்திருக் கிறார்கள். ஆயினும் அவர்கள் சோம்பலுடன் அமர்ந்திருக்கிறார்கள். மரணத்தை எதிர்த்துப் போராடும் எந்த முயற்சியிலும் அவர்கள் ஈடுபடுவது கிடையாது. மனிதா! உனக்கு விவேகம் மற்றும் வைராக்கியம் என்ற சிறகுகள் இருக்கின்றன. வேடன் வந்து உன்னைக் கொண்டு செல்வதற்கு முன்பாக நீ பறந்து செல்.

## 36. மக்களை ஏமாற்றும் குடிகாரன்

ஒருவன் கள்ளுக் கடைக்குச் சென்றான். அவன் நிறைய கள் குடித்தான். பிறகு அவன் ஒரு மிட்டாய்க் கடைக்குச் சென்றான். அங்கு சில இனிப்புப் பண்டங்களைத் தின்றான். பிறகு ஒரு வெற்றிலை பாக்கு கடைக்குச் சென்று பீடா போட்டுக்கொண்டான். வெளியே வந்த அவன் மிட்டாய் கடையில் தரமான பால் விற்பதாகச் சொன்னான். ''இப்பொழுதுதான் நான் ஒரு கோப்பை பால் குடித்தேன். அது எனக்கு புத்துணர்ச்சியும், போதிய அளவுக்குத்தெம்பும் கொடுத்திருக்கிறது. உங்கள் முன்னே வந்து நின்று கர்ச்சிக்கும் அளவுக்கு சக்தியையும் அது கொடுத்திருக்கிறது. நீங்களும் அந்தக்கடைக்குச் சென்று அந்தப்பாலைக் குடியுங்கள்'' என்று அவன் கூறினான். அவன் கள் குடித்திருந்ததால் வாயிலிருந்து நாற்றம் வந்தது. அதனைத்தடுக்க பீடாவுக்கு சக்தியில்லை. அவன் நிலைதடுமாறினான். அவன் குடித்திருந்தது அனைவருக்கும் தெரிந்துவிட்டது. அவன் குடித்தது கள் என்றும், பால் அல்ல என்றும் மக்கள் புரிந்து கொண்டனர். மக்களுடைய நன்மை கருதி பேசவில்லை என்றும், தன்னுடைய தேவைகளை பூர்த்தி செய்து கொள்வதற்காக பணம் சம்பாதிக்கவே அப்படிச் செய்தான் என்றும் மக்கள் புரிந்துகொண்டனர். ஆகவே மக்கள் அவனை கண்டித்தனர். அவனை வெறுத்து ஒதுக்கினர். இந்தக் குடிகாரனைப்போல சமயத்துறையிலும் சில போலிகள் வாழ்ந்து வருகின்றனர். அவர்கள் தங்களது கீழ்த்தரமான ஆசைகளை பூர்த்தி செய்து கொள்வதற்காக பணம் சேர்க்கும் நோக்கத்துடன் சமயப்பிரசாரத்தில் ஈடுபடுகின்றனர். இத்தகையவர்கள் மக்களின் சமய நம்பிக்கையைவைத்து வியாபாரம் நடத்துகின்றனர்.

இந்தப் போலிகள் நன்கு திட்டமிட்டுச் செயலாற்றுகின்றனர். சிறிது காலம் ஆன்ம சாதனை செய்வதற்கு என்று ஒரு இடத்தைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளுகின்றனர். குடிகாரன் மிட்டாய்க் கடைக்கு சென்று வந்ததுபோல இவர் களும் செய்கிறார்கள். தங்கள் தரங்கெட்ட இயல்பினை மறைப்பதற்கு புறத்தே சில வேஷங் களை தரித்துக்கொள்ளுகின்றனர். இது கள்ளைக் குடித்தவன் பீடா போட்டுக் கொண்டதற்கு ஒப்பா கும். பிறகு, தாம் ஏதோ ஆன்மஞானம் பெற்று விட்டதைப்போல பாசாங்கு செய்துகொண்டு பிரச் சாரத்தில் ஈடுபடுகின்றனர். மேலும் தாங்கள் அனு பவிக்கும் தெய்வீகப் பேரானந்தம் பற்றியும் பேசு கிறார்கள். அவர்கள் கவர்ச்சிகரமாக பேசுகிறார்கள். ஆனால் அவர்களின் தரக்குறைவான இயல்பு களையும், ஆசைகளையும் மக்கள் புரிந்துகொள்ளு கின்றனர். இந்தப் போலித்தனமான சமயப் பிரசாரகர்கள் கண்டிக்கப்பட்டு எல்லாத் தரப்பிலிருந்தும் வெறுத்து ஒதுக்கப்படுகின்றனர்.

மனிதா உனது எண்ணங்களை உனது செயல்கள் வெளிப்படுத்துகின்றன. உன்னிடத்தில் இல்லாத ஒன்றை நீ பெற்றிருப்பதாகப் பேசமுடியாது. இதை புரிந்துகொள். உன்னைப் பக்குவப்படுத்திக் கொள். நீ ஏமாற்றித்திரியாமல் உண்மையிலேயே ஒரு ஆன்மீக வீரனாக ஆகிவிடு.

## 37. தோட்டக்காரனும் ஆடு மேய்ப்பவனும்

ஒருநாள் காலையில் ஒரு தோட்டக்காரன் தனது எஜமானன் வீட்டுக்குப் போய்க்கொண்டிருந்தான். அவன் தலையில் பூத்தொட்டி ஒன்றை சுமந்து சென்றான். அந்தத் தொட்டியில் அழகிய, பசுமை

யான செடி ஒன்று இருந்தது. தோட்டக்காரன் அரும்பாடுபட்டு அதனை வளர்த்திருந்தான். வழியில் அவன் ஆடுமேய்க்கும் ஒருவனைச் சந்தித்தான். ஆட்டிடையன் தன் வீட்டுக்குச் சென்று கொண்டிருந்தான். அவன் தோளில் ஒரு ஆட்டைச் சுமந்துகொண்டு சென்றான். தோட்டக்காரன் ஆட்டிடையனை சந்தித்து வெகுநாட்கள் ஆகிவிட்டன. ஆகவே அவன் ஆட்டிடையனை புன்முறுவலுடன் வரவேற்றான். இருவரும் வெகு நேரம் பேசிக்கொண்டிருந்தனர். பேச்சு முடிந்ததும் இருவரும் தத்தம் வழியில் சென்றனர். தோட்டக்காரன் எஜமானன் வீட்டை நெருங்கினான். வீட்டுக்குள் செல்லுவதற்கு முன்பாக தொட்டியைக் கீழே இறக்கினான். இறக்கியதும் அவன் திகில் அடைந்தான். தொட்டியில் ஒரு இலையைக்கூடக் காணோம்; செடியில் தண்டு மட்டுமே இருந்தது. ஆட்டிடையன் தனது நண்பனிடம் பேசிக் கொண்டிருந்தபோது அவன் தோளிலிருந்த ஆடு அவன் நண்பனின் தலையில் இருந்த செடியின் இலைகளைத் தின்றுகொண்டிருந்தது. தோட்டக்காரன் பூச்செடியின்றி எஜமானன் வீட்டுக்குள் எப்படி நுழைவான்? அவன் ஆழ்ந்த வருத்தத்துடன் தோட்டத்திற்குத் திரும்பிவந்தான்.

ஒரு சாதகன் இதயம் என்னும் தோட்டத்தில் தெய்வீகப் பண்புகளை வளர்க்கிறான். ஒரு நற்பண்பைப்பெற அவன் கடும் முயற்சிகளில் ஈடுபட வேண்டியிருந்தது. இறைவனின் சாம்ராஜ்யம் தனது எஜமானனின் வீட்டுக்குள் அவன் நுழைய நற்பண்பு அனுமதிச்சீட்டாக உள்ளது. இறைவனின் சாம்ராஜ்யத்தை நோக்கி நற்பண்புகள் அடங்கிய தொட்டியை அவன் சுமந்துசெல்லுகிறான். வழியில் ஒரு 'நண்பனைக்' காணுகிறான். இவனிடம் உள்ள நற்பண்பைத் தின்றுவிடக்கூடிய ஒரு தீய

குணம் அந்த நண்பனிடம் இருந்தது. இந்த நண்பனுடன் தொடர்பு கொள்வது சாதகனுக்கு மகிழ்ச்சி தருவதாக இருந்தது. ஆனால் தன்னிடமிருந்த நற்பண்புகளை அந்த 'நண்பன்' போக்கி விட்டான் என்பதை சாதகன் விரைவில் உணருகிறான். இறைவனின் சாம்ராஜ்யத்துக்குச் செல்லுவதற்குக் கிடைத்த அனுமதிச் சீட்டை அவன் இழந்துவிட்டான். வேதனையும் மரணமும் நிறைந்த இந்த உலகுக்கு அவன் ஏமாற்றத்துடன் திரும்ப வேண்டியதாயிற்று.

மனிதா! தீய நட்பு குறித்து எச்சரிக்கையாக இரு, சத்சங்கத்தில் சேர்ந்துகொள், அப்போது நீ ஆன்மீக வாழ்வில் உயர்வு பெறுவாய்.

## 38. வெல்லப் பிள்ளையாருக்கு நைவேத்தியம்

வெல்லத்தில் பிள்ளையார் உருவம் செய்து வழிபடுவதுபற்றிக் கேள்விப்பட்ட ஒரு மனிதன் அது போல விநாயகருக்கு வழிபாடுசெய்ய விரும்பினான். அவன் ஒரு மகாக்கருமி. ஆயினும், அவன் விநாயகர் உருவம் செய்து, வழிபடத் துவங்கினான். விநாயகருக்கு நைவேத்தியம் அர்ப்பணிக்கும் நேரம் வந்தது, கருமிக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. நைவேத்தியத்துக்கு அவன் எதுவும் கொண்டுவரவில்லை. எதையும் வாங்கி வரவும் அவன் விரும்பவில்லை. விநாயகருக்கு பருத்த தொந்தி இருப்பதை அவன் கவனித்தான். தொந்தி வெல்லத்தால் ஆனது. ''இந்த வெல்லத்தையே இறைவனுக்கு அர்ப்பணம் செய்துவிடலாம்'' என்று அவன் எண்ணினான். அவன் ஒரு பேனாக் கத்தியை எடுத்து வெல்லப் பிள்ளையாரின்

தொந்தியில் சிறிதளவு வெட்டிஎடுத்து அந்த வெல்லத்துண்டையே ஒரு தட்டில் வைத்து வெல்லப்பிள்ளையாருக்கு அர்ப்பணம் செய்தான். அவனுக்குப் பாடம் புகட்ட விநாயகர் அவனைக் கொடிய வறுமையில் ஆழ்த்திவிட்டார். அவன் தனது உடலின் சதையையே உண்டு, பின் வேதனை யுடன் மரணத்தைத் தழுவினான்.

சிலர் பக்தி உணர்வு இன்றி தீய நோக்குடன் ஞானிகளையும் துறவியர்களையும் நாடிவருகின்றனர். துறவியர்களை வழிபட்டால் பெயரும் புகழும் பெற லாம் என்று அவர்கள் கேள்விப்படுகின்றனர். ஆகவே அவர்கள் துறவியர்களை அணுகி இனிக்க இனிக்கப்பேசுகின்றனர். அவர்கள் கருமிகள். அவர்கள் ஒரு பைசாகூட தர்மம் செய்ய மாட்டார்கள். அவர்கள் துறவியர்களை ஏமாற்றவும் செய்வார்கள். துறவியரின் ஆஸ்ரமத்தோட்டத் திலிருக்கும் பூக்களையும், காய்கனிகளையும் பறித்து அவர்களுக்கே அர்ப்பணம் செய்வர்! காலப் போக்கில் அவர்களிடம் இருந்த ஓரளவுசெல்வமும், அறிவும்கூட பறந்தோடுகின்றன. இதன் விளைவாக அவர்கள் அறியாமை மற்றும் மாயையில் மூழ்கி கொடிய மரணத்தைத் தழுவுகின்றனர்.

## 39. பொறுமைசாலியான ஏழை மனிதன்

ஒரு சமயம் செல்வந்தரான பிரபு ஒருவர் வாழ்ந்து வந்தார். அவர் ஒரு பெரிய மாளிகையில் வசித்து வந்தார். அருகில் நிலை குலைந்த குடிசை ஒன்றில் ஒரு ஏழை வசித்து வந்தான். அவன் பிச்சை எடுத்து உண்டு வந்தான். ஆனால் அவன் எப்போதும் உற்சாகமாக இருப்பான். தனது வறுமையை எண்ணி ஒருபோதும் வருந்தியதில்லை.

ஒரு சமயம் பல நாட்களாக அவன் பட்டினி கிடக்க நேர்ந்தது. ஆதலால் அவன் பணக்கார பிரபுவின் உதவியை நாடிச் சென்றான். பிரபு அவனை அன்புடன் வரவேற்றார். வந்த காரணத்தை வினவினார். தான் பல நாட்களாகப் பட்டினி கிடப்பதாகவும் தனக்கு உணவு கொடுத்தால் போதும் என்றும் அந்த ஏழை கூறினான். ''அவ்வளவுதானே, வந்து உட்கார்'' என்று சொன்ன பிரபு, வேலைக்காரனை அழைத்தார். ''என்னுடன் விருந்துண்ண ஒரு முக்கியமான விருந்தினர் வந்திருக்கிறார். சமையற்காரரிடம் சொல்லி விருந்துக்கு உடன் ஏற்பாடு செய்யச் சொல். நாங்கள் கைகழுவ தண்ணீர் கொண்டு வா'' என்று அந்த வேலைக்காரனிடம் பிரபு சொன்னார்.

ஏழை மனிதனுக்கு எல்லாம் ஆச்சரியமாக இருந்தது. பிரபு தாராள மனம் உடையவர் என்று அவன் கேள்விப்பட்டிருக்கிறான். ஆனால் இத்தகைய உடனடி வரவேற்பு தனக்குக் கிடைக்கும் என அவன் எதிர்பார்க்கவில்லை. பிரபுவின் விருந்தோம்பலை அவன் புகழ்ந்து பேசினான். பிரபு குறுக்கிட்டு, ''அப்படிச் சொல்லாதீர்கள் நண்பரே, வாருங்கள் உணவு உட்கொள்ளச் செல்லலாம்'' என்று கூறினார். இப்படிச் சொல்லிக்கொண்டே தன் கைகளைத் துடைத்துக்கொண்டார். கைகளுக்கு யாரோ தண்ணீர் ஊற்றுவதுபோலவும் இவர் கைகளைக் கழுவுவதுபோலவும் பாசாங்கு செய்தார். அவர் அந்த ஏழை மனிதனைப் பார்த்து ''நீங்கள் கை கழுவவில்லையா?'' என்று கேட்டார்.

ஏழையின் கண்களுக்கு வேலைக்காரனும் தெரியவில்லை, தண்ணீரும் தெரியவில்லை. ஆனால் பிரபு சொன்னதுபோலவே செய்ய அவன் தீர்மானித்தான். ஆகவே அவனும் கைகளைக் கழுவுவதுபோல

பாசாங்கு செய்தான். ''இப்போது நாம் உணவு உட்கொள்ளலாம்'' என்று சொல்லியவாறு பல்வேறு உணவு வகைகளின் பெயரைச் சொல்லி அவற்றைக் கொண்டு வருமாறு வேலைக்காரர்களிடம் சொன்னார். அங்கு எந்த வகையான உணவுப் பொருளையும் காணோம். வேலைக்காரர்களையும் காணோம்.

பிறகு அந்த பிரபு ஏழை மனிதனைப் பார்த்து, ''நம் முன்பாக அறுசுவை உணவு இருக்கிறது. நண்பரே நன்கு ருசித்துச் சாப்பிடுங்கள். இங்குள்ள உணவு வகைகளை முழுமையாகத் தாங்கள் உண்ண வேண்டும்'' என்று கூறினார். கற்பனைத் தட்டு களிலிருந்து உணவுப் பொருட்களை எடுத்து அவர் உண்பதாக நடித்தார்.

ஏழை பசியால் களைத்து மயங்கினான். ஆயினும் பொறுமையை இழக்கவில்லை, மனந்தளரவில்லை, அவனும் உணவு உண்பதுபோல நடித்தான். பிரபு இடையிடையே, ''என்ன சுவையான ரசம்! கறி அற்புதமாக இருக்கிறது. இல்லையா நண்பரே!'' என்று கூறினார் ''ஆமாம், ஆமாம்'' என்று அந்த ஏழை கூறினான். அப்படியானால் இன்னும் கொஞ்சம் சாப்பிடுங்கள் என்று சொன்ன பிரபு கற்பனைக் கறியை எடுத்துப்பரிமாறினார். இப்படி பலப்பல உணவு வகைகளைப் பரிமாறினார். அவை ருசியாக இருக்கிறதா என்றும் அடிக்கடி கேட்டுக் கொண்டிருந்தார்.

பசி கடுமையாகத் தன்னை வாட்டிய நிலையிலும் அந்த ஏழை இதுபோன்ற உணவை தான் ஒருபோதும் உட்கொண்டதில்லை என்று கூறினான். பிரபுவுக்கு நன்றி கூறினான். தனது வேதனையை

ஒரு சிறிதும் வெளிப்படுத்தவில்லை. நிகழ்வதெல்லாம் உண்மை என்பதுபோலத் தொடர்ந்து அவனும் நடித்துக்கொண்டிருந்தான்.

பிரபு தாராள மனம் உடையவர். தர்ம சிந்தனை உடையவர். ஏழை மனத்தளர்ச்சி அடைந்து விடுவானு என்று அவர் சோதித்து அறிய விரும்பினுர். அந்த ஏழை மிகவும் பொறுமைசாலி என அவர் கேள்விப்பட்டிருந்தார். இத்தகைய மனத்திருப்தியும், உற்சாகமும் உடைய ஏழை மனிதன் பட்டினி கிடக்கக்கூடாது என்றும் வறுமையில் வாடக்கூடாது என்றும் பிரபு கருதினுர். ஆயினும் அவருக்கு ஐயம் இருந்தது. ஆகவே ஏழையை சோதிக்க விரும்பினுர். இந்த சோதனைக்குப்பின், தான் ஏழையைப்பற்றி கேள்விப்பட்டதெல்லாம் உண்மைதான் என பிரபு உணர்ந்தார்.

பிறகு பிரபு கை தட்டி வேலைக்காரர்களை அழைத்தார். அவர் முன்பு சொன்ன உணவு வகைகளை எடுத்துக்கொண்டு வேலைக்காரர்கள் வந்தனர். அறுசுவை உணவு, வகை வகையாக மேஜையில் வைக்கப்பட்டிருந்தது. ஏழை மனிதன் இம்முறை நடிக்கவேண்டிய அவசியம் ஏற்படவில்லை. இப்போது பிரபுவுடன் அந்த ஏழை மகிழ்ச்சியாக விருந்து உண்டான்.

உணவு உட்கொண்ட பின்னர் பிரபு, அந்த ஏழையைப் பார்த்து, ''நண்பரே, நீங்கள் அளவிலாப் பொறுமைசாலி. ஒவ்வொன்றையும் சிறப்பாகப் பயன்படுத்திக்கொள்ளும் ஆற்றல் உங்களிடத்தில் இருக்கிறது. எதிர்ப்பை உற்சாகத்துடன் தாங்கிக்கொள்ளுகிறீர்கள். எனது பண்ணைகளில் ஒன்றை நிர்வாகம் செய்ய தகுதிமிக்க

ஒருவரை நான் தேடிக்கொண்டிருந்தேன். இனிமேல் நீங்கள் என்னுடன்தான் இருக்க வேண்டும்'' என்று கூறினார்.

அதன் பிறகு அந்த ஏழை வறுமையில் வாடுவதற்கு அவசியம் இல்லாமல் போய்விட்டது.

பாமர மனிதன் தெரிந்துகொள்ள இந்தக் கதையில் நிறைய நீதிகள் உள்ளன. பணக்காரரைக் காண அந்த ஏழை சென்றபோது, சில நாட்கள் பிச்சை எடுக்க அவசியமில்லாதபடி சிறிதளவு பணத்தை தர்மம் செய்யும்படி பணக்காரரிடம் கேட்கவில்லை. அவனுக்கு பேராசை இல்லை என்பது இதன்மூலம் தெரிகிறது. அவன் நிகழ்காலத்தைப்பற்றியே கவலைப்பட்டான். அவனுக்கு இப்போது உணவு தேவைப்பட்டது., அதை மட்டுமே அவன் கேட்டான். இப்போது அவன் பணம் கேட்டிருந்தால் அது அவனுக்குக் கிடைத்திருக்கும். அதை சில நாட்களில் செலவழித்திருப்பான். மீண்டும் அவன் வறுமையில் வாடுவான். உடனடியாக அவனுக்கு எது தேவைப்பட்டதோ அதைத்தவிர வேறு எதையும் அவன் கேட்கவில்லை. இது அவனது நல்வாழ்வுக்கு அஸ்திவாரம் அமைத்தது. பணக்காரரின் பண்ணையில் அவன் வேலைக்கு அமர்த்தப்பட்டான்.

பணக்காரன் கற்பனை உணவுப் பண்டங்களைக் காட்டி தன் விருந்தாளியை அல்லற்படுத்திய போதும் ஏழை மனிதன் தனது கடுமையான பசியைப் பொருட்படுத்தாது பொறுமையாக இருந்தான். அவன் பொறுமை இழந்திருந்தால் அறுசுவை விருந்தையும், எதிர்பாராது கிடைத்த வேலையையும் இழந்திருப்பான்.

தன் வாழ்வு வளமாக அமையாதது குறித்து அவன் வருத்தம் தெரிவிக்கவில்லை. சாதாரணமாக எந்த ஒரு பிச்சைக்காரனும் ஒரு பணக்காரனிடம் தனது துரதிர்ஷ்ட வாழ்வு குறித்து வருத்தம் தெரிவிப்பான்.

இக்கதையின் நீதி யாதெனில், ஒவ்வொரு மனிதனும் பொறுமையாக இருக்க வேண்டும். எந்த ஒரு சூழ்நிலையையும் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக்கொள்ளவேண்டும். ஒவ்வொருவரும் எதிர்ப்பை ஊக்கத்துடன் தாங்கிக்கொள்ள வேண்டும். தன்னால் இயன்றஅளவுக்கு பணிகளைச் செய்யவேண்டும், இறைவனைப் பிரார்த்திக்க வேண்டும். அவனது அருள் கிடைக்கும் என்று நம்பிக்கை கொள்ள வேண்டும். தனது ஏழ்மை குறித்து எவரும் வருந்தக்கூடாது, வினை விதைத்தவன் வினை அறுக்கிறான், தினை விதைத்தவன் தினை அறுக்கிறான். ஆகவே தனது ஏழ்மை குறித்து வருந்திப்பயனில்லை, ஒருவன் தனது சுயமுயற்சியின் மூலம் லட்சியத்தை நிறைவேற்றிக்கொள்ளத் துணிவு பெற வேண்டும்.

பொறுமை பொன் போன்றது. பொறுமையில்லா வாழ்க்கையில் முழுமையாகத் தோல்வியே ஏற்படும். இக்கதையின் மிகமுக்கியமான கருத்து யாதெனில் ஒருவன் ஏதேனும் ஒரு பயன் கருதி மற்றொருவனை அணுகுகிறபோது அவனுடைய கருத்துக்கு இசைவாக நடந்துகொள்ள ஆயத்தமாக இருக்கவேண்டும்.

பேராசையும் இறைவன் அருளும் இணைந்திருப்பதில்லை. பேராசை இருக்குமிடத்தில் நல்வாழ்வு இருக்காது. ஒருவன் நிகழ்காலத் தேவையை மட்டும் பூர்த்தி செய்துகொண்டு தனது தேவைக்கு அதிக

மாக எதையும் எதிர்பாராமல் வாழக் கற்றுக் கொள்ளவேண்டும்.

பொறுமை, உற்சாகம், போதும் என்ற மனம், இனிய இயல்பு, இவற்றின் துணையுடன் ஒவ்வொரு மனிதனும் தான் இருக்கின்ற சூழ்நிலையை அதிக பட்சம் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்.

## 40. ஒரு மன்னனும் அவனது பருந்தும்

ஒரு மன்னன் வேட்டையாடவும், வேவு பார்க்கவும் ஒரு பருந்தைப் பயிற்றுவித்து வந்தான். அவன் வெளியில் செல்லுகிறபோதெல்லாம் அந்தப் பருந்தையும் உடன் கொண்டு செல்வது வழக்கம். ஒரு நாள் மன்னனும் வேட்டைக்கு அவனுடன் வந்தவர்களும் பாலைவன மணல் மேடுகளுக்கு நடுவில் இருந்த ஒரு பள்ளத்தாக்கின் வழியாக அரண்மனைக்குத் திரும்பி வந்து கொண்டிருந்தனர். மன்னனுக்குத் தண்ணீர் தாகம் எடுத்தது. பள்ளத் தாக்கின் வழியாக அவன் சென்று கொண்டிருந்த போது ஒரு பாறையின் உச்சியிலிருந்து தண்ணீர் வழிந்து வருவதை அவன் கண்டு மகிழ்ந்தான். அவன் உடனே கீழே இறங்கி ஒரு வெள்ளிக் கோப்பையை எடுத்துக்கொண்டு அதில் சிறிதளவு தண்ணீர் பிடித்தான். இதற்கிடையில் அவன் எடுத்துச் சென்றிருந்த பருந்து மணல் மேடுகளைச் சுற்றி வட்டமிட்டுக்கொண்டிருந்தது.

சிறிது நேரத்தில் கோப்பையில் தண்ணீர் நிறைந்தது. தெளிந்த அந்த நீரைக் குடிப்பதற்காக மன்னன் கோப்பையை வாயருகில் உயர்த்தி கொண்டு சென்றான். அவன் தண்ணீரைக் குடிப் பதற்கு முன்பாக பருந்து கீழ்நோக்கிப் பறந்து

வந்து அவன் கையிலிருந்த கோப்பையை கீழே தட்டி விட்டது. கோப்பையிலிருந்த தண்ணீர் முழுவதும் கொட்டிவிட்டது.

மன்னன் மேல் நோக்கிப் பார்த்தான். அவன் அன்புக்குரிய பருந்து பாறையின்மேலே தண்ணீர் எங்கிருந்து வருகிறதோ அந்த இடத்தில் அமர்ந்து கொண்டிருந்தது. மன்னன் மீண்டும் கோப்பையை எடுத்துக்கொண்டு சொட்டுச் சொட்டாக விழுகின்ற தண்ணீரைப் பிடித்தான். அந்தக் கோப்பை நிறை வதற்காக அவன் வெகு நேரம் காத்திருக்க வேண்டி யிருந்தது. பிறகு அவன் அந்தத் தண்ணீரை குடிக்கப் போகின்ற பொழுது பருந்து மீண்டும் கீழே பறந்து வந்து மன்னன் கையிலிருந்த கோப்பையை தட்டிவிட்டது.

மன்னன் மிகவும் கோபமடைந்தான். மீண்டும் அவன் பொறுமையுடன் தண்ணீரை சேகரித்தான். ஆனால் மூன்றும் முறையாகவும் தண்ணீர் குடிக்க பருந்து அனுமதிக்கவில்லை.

மன்னன் கடுங்கோபமடைந்தான். தனது வாளை உருவிக்கொண்டு அந்தப் பருந்தைப் பார்த்து பின்வருமாறு கூறினன்: ''இதுதான் கடைசித் தடவை. நான் தண்ணீர் குடிப்பதை நீ மீண்டும் தடுத்தால் உன்னைக் கொன்றுவிடுவேன்'' என்று கூறினன். மீண்டும் அவன் தண்ணீரை சேகரித் தான். கையில் வாளை உயர்த்திக்கொண்டு அவன் தண்ணீரைக் குடிக்கப் போனன். பருந்து மீண்டும் கீழே பறந்து வந்து கோப்பையைத் தட்டிவிட்டது. அது அப்படிச் செய்கிறபோது மன்னன் தன் கையிலிருந்த வாளால் அதன் தலையை வெட்டி எறிந்தான்.

''இப்பொழுது நீ நல்ல பாடம் கற்றுக் கொண்டிருப்பாய்!'' என்று அவன் கொக்கரித்தான். அவன் கீழே பார்த்தபொழுது கோப்பை பூமியின் வெடிப்பு ஒன்றுக்குள் விழுந்து கிடந்ததைக் கண்டான். அவனால் அதை உடனடியாக எடுக்க முடியவில்லை. ஆகவே அவன் பாறையின்மீது ஏறினான். தண்ணீர் எங்கிருந்து வருகிறதோ அங்கேயே சென்று தண்ணீர் குடிக்க விரும்பினான். பாறையின் உச்சியை அவன் அடைந்ததும் அங்கு தண்ணீர் குளம்போல தேங்கியிருந்ததைக் கண்டான். அதற்குள் விஷப்பாம்பு ஒன்றையும் கண்டான். அவன் திகைத்துப் போனான். அவனுக்கு இப்பொழுது தாகம் பற்றிய நினைவில்லை. தனது அவசர புத்தியால் தன் உயிரைக் காப்பாற்றிய பருந்தை கொன்றுவிட்டதை அவன் எண்ணிப் பார்த்தான்.

''எந்த ஒரு செயலையும் அவசரக்கோலத்தில் செய்யக்கூடாது என்ற ஒரு பாடத்தை நான் கற்றுக் கொண்டேன்'' என்று அவன் உறுதியுடன் கூறினான்.

அவசரக்கோலத்தில் செய்யப்படுகிற செயல், கவலையின் தாய். விவேகத்தை வளர்த்துகொள்ளுங்கள். நன்றாக சிந்தித்து செயல்படுங்கள். தாவிக் குதிப்பதற்கு முன்பாக நன்றாக உற்றுநோக்குங்கள்.

## 41. மன்னனும் ஜோதிடரும்

ஒரு மன்னன் ஜோதிடர் ஒருவரிடம் தனது ஜாதகத்தைக் கொடுத்து தன்னுடைய எதிர் காலத்தைப்பற்றிக் கேட்டான். ஜோதிடர் கிரகங்களின் நிலையை ஆராய்ந்து சாஸ்த்திரங்களையும் ஆராய்ந்து இறுதியாக பின்வருமாறு கூறினார்: ''மன்னா, உனது உறவினர்கள் உனக்கு முன்பாகவே

இறந்துவிடுவார்கள். நீ உனது கைகளாலேயே அவர்களுக்கு இறுதிச் சடங்குகளைச் செய்ய வேண்டும்.'' மன்னன் கடுங்கோபமடைந்தான். அவன் தனது உறவினர்களிடத்தில் மிகுந்த பாசம் கொண்டிருந்தான். ஜோதிடரின் அத்தகைய கணிப்பை அவனால் சகித்துக் கொள்ள முடியவில்லை. அந்த அப்பாவி ஜோதிடருக்கு ஆயுள்தண்டனை அளிக்குமாறு உத்தரவிட்டான்.

பிறகு அவன் மற்றொரு ஜோதிடரை அழைத்து வருமாறு உத்தரவிட்டான். இந்த ஜோதிடர் இதற்கு முன்னே வந்தவரைவிட தந்திரம் உடைய வர். இதற்கு முன்பாக ஜாதகத்தைப்பார்த்த ஜோதிடரின் கணிப்பு சரியானதுதான் என்று அவர் கருதினார். ஆகவே அவர் அதே உண்மையை வேறு விதமாக விளக்கிச் சொன்னார். ''மன்னா நீங்கள் நீண்ட ஆயுளுடன் இருப்பீர்கள், உங்கள் உறவினர் களைவிட அதிகமாக ஆயுள்காலத்துக்கு நீங்கள் வாழ்வீர்கள்'' என்று அவர் சொன்னார். மன்னன் உயிருடன் இருக்கும் போதே அவனுடைய உறவினர்கள் அனைவரும் இறந்து விடுவார்கள் என்பதுதான் இதற்கும் பொருள். அதே உண்மை மன்னன் மகிழக்கூடிய அளவுக்கு தந்திரமாக சொல்லப்பட்டது, அவ்வளவுதான். மன்னன் மகிழ்ந்தான். இந்த ஜோதிடருக்கு நிறையபணமும், விலையுயர்ந்த பொருட்களும் வெகுமதியாக கொடுத் தான். ஆகவே உண்மையைச் சொல்லுகிற பொழுதுகூட அதனை இனிய சொற்களால் கூற வேண்டும். உண்மையைக்கூட பிறர் மனத்தை புண்படுத்துகிற வகையில் சொல்லக்கூடாது. அப்படிச் சொன்னால் உண்மையும் பொய்யாகும். உனது பேச்சு உண்மையானதாகவும், இனிமை யானதாகவும், பயனுள்ளதாகவும் இருக்க வேண்டும்.

## 42. தாடியுள்ள மனிதனும், கஞ்சியும்

தாடியும், மீசையும் வளர்த்திருந்த ஒரு மனிதருக்கு ஒருவர் கஞ்சி கொடுத்தார். அந்த மனிதன் கஞ்சியைக் குடிக்க விரும்பினுன். அதை வேண்டாமென்று சொல்ல மனம் வரவில்லை. அவன் அதனை குடித்தால் கஞ்சி தாடியிலும், மீசையிலும் ஒட்டிக் கொள்ளும். அவன் தனது தாடியையும், மீசையையும் தினமும் கவனத்துடன் வளர்த்து வந்தான். தாடியிலும், மீசையிலும் கஞ்சி படாத அளவுக்கு கஞ்சியைக் குடிப்பதற்கு அவன் பெருமுயற்சி எடுத்துக்கொண்டான். மீசையிலிருந்து சற்றுத் தொலைவில் கஞ்சி இருந்த டம்ளரை வைத்துக் கொண்டு குடிக்கத் துவங்கினுன். இதன் விளைவாக கஞ்சி பூமியில் விழுந்தது. கஞ்சி வாயிலும் விழவில்லை. மீசையிலும் படவில்லை.

இந்தத் தாடிக்கார மனிதன் அரைகுறை சாதகனுக்கு ஒப்பாவான். தாடிக்காரன் தாடியையும், மீசையையும் வளர்ப்பதுபோல அரைகுறை சாதகன் தனது மேலாடைகள் சுத்தமாகவும், அழகாகவும் இருக்க வேண்டுமென்பதில் அக்கறை காட்டுகிருன்.

கஞ்சி என்பது ஆன்மீக குரு சாதகனுக்கு வழங்குகிற ஞான அமுதத்துக்கு ஒப்பாகும். சாதகன் தனது உடல், வேதனை, காயங்கள், துன்பங்கள் இன்றி சுகமாக இருக்க வேண்டுமென்ற ஆர்வத்தில் ஆன்மீக சாதனையிலிருந்து விலகியிருக்க முயற்சிக்கிருன். நடைமுறையில் ஆன்மீக சாதனையில் ஈடுபடாமல் வாழ்க்கையில் நிலையான மகிழ்ச்சியை பெற்றுவிடலாம் என்று அவன் நினைக்கிருன்.

தனது ஆன்மீக குருவின் உபதேசங்களையும் அவனுல் புறக்கணிக்க முடியவில்லை. ஏனெனில்

அந்த உபதேசங்கள் அவனுக்கு நற்பயன் தரமுடியும். குருவிடம் சாதகன் பெறுகிற உபதேசங்கள் அவனுக்கு எந்தவித நற்பயனும் தருவதில்லை. ஏனெனில் அவன் அந்த உபதேசங்களை தனது தீய செயல்கள்மூலம் வீணாக்கிவிடுகிறான். குருநாதருடன் அவன் வாழ்ந்து வருவதுகூட அவனுக்கு எந்தவித நற்பயனையும் தருவதில்லை. அவன் தனது அநுபவத்தின்மூலம் நிறைய விஷயங்களைக் கற்றுக் கொண்டு தனது மனப்போக்கை மாற்றிக்கொள்ள வேண்டியிருக்கிறது. அவன் உடல் மற்றும் அதன் சுகம் இவற்றில் வைத்திருக்கிற பற்றை விடுத்து குருநாதரின் அருகில் இருக்க தனக்கு கிடைத்த வாய்ப்பையும் குருநாதர் அருளுகின்ற உபதேசங்களையும் தனது ஆன்மீக வளர்ச்சிக்காக பயன் படுத்திக்கொள்ள முயற்சிக்க வேண்டும்.

அமரவாழ்வு ஆத்மாவுக்கே கிடைக்கிறது. உடலுக்கு அல்ல. உடலின் மீது நீங்கள் வைத்திருக்கிற பற்றை விடுகின்றபோதுதான் ஆத்மாவுக்கு கிடைக்கிற அமரவாழ்வை நீங்கள் அடைய முடியும்.

## 43. விகாரமான மனிதனை திருமணம் செய்துகொண்ட அழகி

ஒரு சமயம் அழகிய பெண் ஒருத்தி செல்வச் செழிப்புடன் வாழ்ந்து வந்தாள். பல இளைஞர்கள் அவளைத் திருமணம் செய்துகொள்ள விரும்பினர். ஆனால் அவள் விகாரமான உடல் அமைப்புக் கொண்ட ஒரு இளைஞனை திருமணம் செய்து கொள்ள விரும்பினாள். அவன் இந்தப் பெண்மீது மிகவும் காதல் கொண்டிருந்தான். இதன் காரணமாக உலகியல் நடவடிக்கைகளில் அவன் அரை குறையாக ஈடுபட்டான். அதில் வெறுப்பும்

கொண்டான். அந்த இளைஞனை அவள் ஏன் தேர்ந்து எடுத்தாள் என்று மற்றவர்கள் கேட்டனர். அவனுக்கு அழகில்லை. அவனிடத்தில் செல்வம் இல்லை. மூளையும் இல்லை. ஆனால் அவளை அடைய விரும்பிய மற்றைய இளைஞர்களிடம் இவை அனைத்தும் இருந்தன. ஆகவே மற்றவர்கள் அவள் அந்த இளைஞனைத் தேர்ந்தெடுத்ததற்கான காரணங்களை அறிய விரும்பினர். அவளும் பதிலளித்தாள்:

''உங்களை அந்த இளைஞனுடன் ஒப்பிட முடியாது. அந்த இளைஞன் இரண்டு உலகங்களையும் காணுகின்ற கண்களைப் பெற்றிருக்கின்றான். ஆனால் உங்களிடத்தில் அவை இல்லை.

காதலிப்பது கபட நாடகம்.

அந்த இளம் அழகியை, எல்லாச் செல்வங்களையும் பெற்றிருக்கிற இறைவனுக்கு ஒப்பிடலாம்.

அந்த ஏழையான விகாரமான இளைஞனை ஒரு பரம பக்தனுக்கு ஒப்பிடலாம். அத்தகைய பக்தனுக்கு இறைவனை மட்டுமே தெரியும், இறைவனுக்கு சம்பந்தமில்லாத எதுவுமே அவனுக்கு தெரியாது. மூவுலகும் அவன் காணுகின்ற எல்லைக்குள் அடங்கும்.

அந்தப் பெண்ணை அடைய விரும்பிய மற்ற இளைஞர்கள், இறைவனை அடைவதற்கு அல்லாமல் உலகியல் பொருட்களை அடைவதற்காக பிரார்த்தனை செய்கிற பக்தர்களுக்கு ஒப்பாவர்.

காதலிப்பது கபட நாடகம்.

ஏனெனில் நீங்கள் ஒரு பெண்ணை காதலிக்கின்ற பொழுது அவளுடைய உண்மை இயல்பை

காதலிக்கவில்லை. அவளுடைய புற அழகையும் சொத்துக்களையுமே காதலிக்கிறீர்கள்.

புற உலகில் பற்று கொள்வது ஆன்மாவை மறப்பதாக ஆகும். இது உறக்கத்தைவிட மோசமானது. வேதாந்தம் அல்லது பக்தி அல்லது யோகம் அனைத்தும் ஒன்றுதான். அனைத்திற்கும் முக்கிய குறிக்கோள் ஒன்றுதான். நீங்கள் புற உலகை மறக்கவேண்டும். அதனைக் காணாமல் கண்ணை மூடிக்கொள்ள வேண்டும். பரம்பொருள் என்னும் உங்களுடைய லட்சியத்துக்குள் நீங்கள் இடத்தையும் நேரத்தையும் காண வேண்டும். பிறகு ஆத்மா உங்களுக்குள் தனது இயல்பினை வெளிப்படுத்தும். அப்போது இறைவன் உங்களுக்கு அருள் புரிவார். தன்னுடைய சிறந்த பக்தன் என்பதாக உங்களைத் தேர்ந்தெடுத்துக்கொள்வார்.

## 44. பாம்பும் எலியும்

ஒரு கொடிய விஷம் கொண்ட நாகப்பாம்பு ஒன்று பிடிக்கப்பட்டு ஒரு கூடையில் அடைத்து வைக்கப்பட்டிருந்தது. உள்ளே அது பட்டினியாகக் கிடந்தது. பாம்பின் வேகத்தைத் தணிக்கவும் அதனைத் தன் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வரவும் விரும்பிய பாம்பாட்டி பலநாட்கள் அதற்கு உணவு கொடுக்காமல் பட்டினி போட்டான். ஒருநாள் பாம்பாட்டி வெளியில் சென்றிருந்தான். அப்போது பாம்பு இருந்த கூடையின்மேல் ஒரு எலி விளையாடிக்கொண்டிருந்தது. அது எலி என்று நாகப்பாம்பு புரிந்துகொண்டது. அது எலியிடம் பின்வருமாறு கூறியது: ''எலி மகாராஜா! உங்களுக்கு அன்பும் தாராள மனமும் உண்டு. பிராணிகள் சாம்ராஜ்யத்தில் நீங்கள் தனிச் சிறப்புடன் விளங்குகிறீர்கள். என்மீது கருணை

காட்டுங்கள்''. இதனைக்கேட்ட எலி பதிலளித்தது: ''கூடைக்குள்ளிருந்து பேசுகிற நீ யார்? எனது பரம விரோதியான நாகப்பாம்பு அல்லவா? என்னை ஏன் இப்படி முகஸ்துதி செய்கிறாய்?'' ''சக்கரவர்த்திகளுக்கெல்லாம் சக்கரவர்த்தியே, உங்களை நான் முகஸ்துதி செய்யவில்லை. எனது வாழ்நாளில் இனி ஒரு எலியைக்கூடத் தொடுவதில்லை என்று சத்தியம் செய்கிறேன். என்மீது கருணை காட்டுங்கள்.'' பாம்பின் பணிவை அறிந்தும் புகழுரையைக் கேட்டும் எலி மகிழ்ந்தது. ''பாம்பே, நீ சொல்வது உண்மைதான். நான் சக்கரவர்த்திகளுக்கெல்லாம் சக்கரவர்த்திதான். ஏனெனில் நீ தொடமுடியாத இடத்தில் நான் இப்போது இருக்கிறேன். நீ நன்கு பிடிக்கப்பட்டு கூடையில் அடைத்துவைக்கப்பட்டிருக்கிறாய். உனது வார்த்தைகளைக் கேட்டு நான் மகிழ்ச்சி அடைகிறேன். நான் இப்போது என்ன செய்ய வேண்டும் என்று சொல்'' என்று எலி கூறியது.

நாகப்பாம்பு பதிலளித்தது, ''மகாராஜா: எனது நீண்ட நாக்கு உங்கள் புகழை எப்போதும் பாடிக்கொண்டிருக்கட்டும். கூடையின் மேலே ஒரு சிறு துளை போடுமாறு உங்களை நான் வேண்டிக் கொள்ளுகிறேன். இதனை நீங்கள் ஒரு நிமிடத்தில் செய்துவிடலாம். இதற்காகத்தான் நான் ஏங்கியிருக்கிறேன்''. ''ப்பூ! இவ்வளவுதானா! இந்த சிறு சலுகையைப் பெறத்தானா இவ்வளவு பணிவாக வேண்டுகோள் விடுக்கிறாய்? ஒரு விநாடியில் துளை போட்டுவிடுகிறேன்'' என்று எலி கூறியது. எலி துளைபோடத் துவங்கியது. எலி துளை போட்டு முடிப்பதற்குள் பாம்பு அந்தத் துளையின் வழியாக வெளியே வந்தது. முதலில் எலியை விழுங்கியது. பிறகு பாம்பாட்டியின் இருப்பிடத்திலிருந்து அது தப்பிச் சென்றது. அது வழியில் பாம்பாட்டியைக்

கண்டது. அவனையும் கடுமையாகக் கடித்தது. விஷம் தலைக்கு ஏறி அவனும் இறந்தான்.

பாம்பாட்டியைப் போன்றவன் சாதகன். பாம்பைப்போன்றது தீய மனம், இத்தகைய மனம் தூய்மையற்றதாக இருக்கிறது. தீய பழக்க வழக்கங்களும், குணங்களும் உடையதாக இருக்கிறது. கூடை என்பது தீய பழக்க வழக்கங்கள் தன்னை நெருங்காமல் இருக்க சாதகன் மேற்கொள்ளுகிற சிறிதளவு தவம் மற்றும் சாதனை ஆகும். எலி என்பது மனத்தில் ஓரளவுக்கு இருக்கும் நல்ல பழக்கவழக்கங்கள். ஆயினும் இது இன்னும் ஆடம்பரம் மற்றும் புலன் இன்பத்தில் நாட்டம் உடையதாகவே உள்ளது. எலி இவ்விதம் இரு வகை குணம் உடையதாக உள்ளது.

சாதகன், தீவிர முயற்சிக்குப்பின் தீய எண்ணத்தைப் ''பிடித்து'' சாதனை, தவம் என்னும் கூடைக்குள் போட்டு அடைத்து வைத்திருக்கிறான். சாதகன், தீய எண்ணங்களுக்கு புலன் இன்பம் என்னும் உணவைத் தராமல் பட்டினி போட்டான். இந்த முறையில் மனத்தைத் தன் கட்டுப்பாட்டில் வைத்திருக்க முடியும் என்றும் தான் நினைக்கிறபடி மனத்தைச் செயல்பட வைக்க முடியும் என்றும் சாதகன் எண்ணுகிறான். ஆனால் அவன் வெளியில் சென்றிருக்கிறபோது, அதாவது அவனது விழிப்புணர்வில் சிறிது குறைவு ஏற்படுகிறபோது உலகியல் இன்பம் தரும் பொருள் அவனை நெருங்குகிறது. தீய மனம் அகத்தே மகிழ்ச்சி அடைகிறது. அது இந்தப் பொருளுடன் தொடர்பு கொள்ள முயற்சிக்கிறது. சிறிதளவு ஒளிபெற்ற புத்தி பின்வருமாறு பேசுகிறது: ''தீய மனமே, நீ எனது எதிரி. அப்படியிருக்க நான் உன்னை சுய கட்டுப்பாட்டிலிருந்து விடுவித்துவிடுவேன் என்று நீ எப்படி

எண்ணுகிறாய்?'' புலன்களை நீ தீய வழியில் செலுத்த நான் உன்னை அனுமதிப்பேனா?'' தீய மனம் வஞ்சகத் தன்மை உடையது. இன்பந்தரும் பொருட்களை அது புகழ்ந்துபாடுகிறது. அதற்கு தெய்வீகவண்ணம் பூசுகிறது. ''உன்னிடம் எனக்கு நாட்டம் இல்லை. செல்வம் என்பது தொண்டு செய்வதற்கும், தர்மம் செய்வதற்கும் பயன்படும் கருவி. பெண்களை நான் தெய்வத்தாயாக மதிக்கிறேன். மனித குலத்தின் மேன்மைக்காக இடையறாது பாடுபடும் உடலுக்கு நான் தரும் வாடகை, ஆடம்பர வாழ்க்கை. புலன்களை தீய வழியில் செலுத்தமாட்டேன் என நான் சபதம் செய்கிறேன்''—அத்தனையும் போலித் தனமான சொற்கள்.

தீய மனம் பாவங்களைச் செய்யமாட்டேன் என்றும், புலன்களை தீய வழிகளில் செலுத்தமாட்டேன் என்றும் சபதம் செய்கிறது. சுய கட்டுப் பாடு என்னும் தடையிலிருந்து தான் விடுவிக்கப் பட்டால் இவ்வாறெல்லாம் செய்யாதிருக்க உறுதி கூறுகிறது. சுய கட்டுப்பாட்டில் சிறிதளவு துளை போடப்படுகிறது. அரைகுறையாகக் கட்டுப் படுத்தப்பட்ட மனம், புலன் வழிப் பொருட்களை நோக்கி நாடிச் செல்ல ஒரு வழி தோற்றுவிக்கப் படுகிறது. தீய மனம் முதலில் சாதகன் ஓரளவுக்குப் பெற்றுள்ள விவேகத்தைத் தின்றுவிடுகிறது. புலன்வழிப் பொருட்களை அது அனுபவிப்பதற்கு முன்பாக இவ்வாறு செய்கிறது, பிறகு அது தப்பிச் செல்லுகிறது. இப்போது மனத்தின் தீய சக்தியின் வேகம் இருமடங்காக அதிகரிக்கிறது. புலன்களைப் பட்டினிபோட்டதும், ஆசைகளை அடக்கியதும்தான் இதற்குக் காரணம். தீய மனம் விரைந்து சென்று சாதகனைக் கொன்றுவிடுகிறது. சாதகன் விழிப் புணர்வை இழந்ததாலும், சாதனை மற்றும் தவத்தில் குறை ஏற்பட்டதாலும், தீயமனம் புலன்வழிப்

பொருட்களுடன் தொடர்பு கொண்டதாலும் இறந்துவிடுகிறான்.

சாதகனே! எச்சரிக்கை! எச்சரிக்கை! எச்சரிக்கை! உனது முயற்சிகள், சாதனைகள், தவம் இவற்றில் ஒரு வினாடிகூட குறை ஏற்பட அனுமதிக்காதே. லட்சியத்தை நோக்கி நடந்து செல்.

## 45. மணவாழ்க்கையை விளம்பரம் செய்த பெண்

கற்புடைய பெண்கள் தமது கணவன் தனிமையில் தன்னிடம் பேசிய அன்பு மொழிகளையும், மணவாழ்க்கை அனுபவங்களையும் பிறரிடம் ஒருபோதும் சொல்லமாட்டார்கள். ஒரு முட்டாள் பெண் தனது கணவன் தன்னிடம் அன்பு கொண்டிருப்பது குறித்து கர்வம் அடைந்தாள். தனது கணவன் தன்னிடம் எந்த அளவுக்கு காதல் கொண்டிருக்கிறான் என்பதையும், அதனை வெளிப் படுத்த அவன் தனது காதுகளில் எப்படி இனிமையான சொற்களைப் பேசினான் என்பதையும், அதிலிருந்து தான் அடைந்த மகிழ்ச்சியையும், பிறரிடம் சொன்னால் அவர்கள் மகிழ்ச்சி அடைந்து தன்னைப் பாராட்டுவார்கள் என அந்த முட்டாள் பெண் எண்ணினாள். இந்த அனுபவங்களைப் பலரும் அறிய அவள் சொல்லிக்கொண்டு சென்றாள். கேட்டவர்கள் அவளைப்பார்த்து ஏளனமாகச் சிரித்தனர்; பரிகசித்தனர், பண்பு நெறி தவறி நடக்கும் இந்தப் பெண்ணுடன் பழகுவதை அவளது உறவினர்கள்கூட நிறுத்திக்கொண்டனர். அவளது நாணமற்ற செயல்கண்டு அவளை அவளது கணவனே வெறுத்தான், இவ்வாறு அவள் அனைத்தையும் இழந்து தன்வாழ்வின் பிற்காலத்தில் மிகவும் துன்பப்பட்டாள்.

இதுபோல, நல்ல சாதகர்கள் குரு தமக்குச் செய்த உபதேசங்களை அல்லது தமது ஆன்மீக வாழ்வின் அனுபவங்களை ஒருபோதும் பிறரிடம் சொல்லுவதில்லை. ஆனால் முட்டாள் சாதகர்கள் துவக்கத்தில் தாம் பெறுகிற அனுபவங்கள் குறித்துத் தற்பெருமை கொள்ளுகின்றனர். பொது மக்களின் கவனத்தைக் கவர்ந்து அவர்களின் பாராட்டைப் பெறும் நோக்கில் அவற்றை விளம்பரப்படுத்துகின்றனர். ஆனால் அவர்கள் மமதை கொண்டிருப்பதைப் புரிந்து கொண்ட மக்கள் நகைக்கின்றனர். சகோதர சாதகர்களும் அவர்களுடன் பழகுவதை நிறுத்திக்கொள்ளுகின்றனர். மமதையின் காரணமாக, இறைவனுடன் துவக்கத்தில் ஏற்படுகிற தொடர்பையும் இழந்து, அவர்களுக்கு அருளப்பட்ட அனுபவங்களையும் இழந்து விடுகின்றனர். இவ்வாறு அனைவராலும் கைவிடப்பட்ட அவர்கள் தமது வாழ்வின் பிற்பகுதி முழுவதும் அளவிடற்கரிய அல்லலை அனுபவிக்கின்றனர்.

சாதகனே! உனது குரு உனக்குச் செய்கிற உபதேசத்தையும் உனது ஆன்மீக அனுபவங்களையும் ரகசியமாக வைத்திரு. அப்போது நீ ஆன்மீக வாழ்வில் வளர்ச்சியடைந்து லட்சியத்தை அடைவாய்.

## 46. மூடபக்திகொண்ட பக்தை

ஒரு முட்டாள் பக்தை, புத்த பகவானின் தங்க விக்கிரகம் ஒன்றை வைத்திருந்தாள். அவள் போகும் இடத்துக்கெல்லாம் அந்த விக்கிரகத்தையும் எடுத்துச்செல்வாள். இப்படி அலைந்து திரியும் அவள் ஒருநாள் மடாலயத்துக்கு வந்தாள். அங்கு நூற்றுக்கணக்கான புத்தர் விக்கிரகங்கள்

இருந்தன. மற்ற விக்கிரகங்களை அவள் விரும்பவில்லை. தன்னிடம் இருக்கும் விக்கிரகத்தை மட்டும் விரும்பினாள். அவள் ஊதுபத்தி கொளுத்தி வைக்கும்போது தனது விக்கிரகத்துக்குமட்டும் ஊதுபத்தி கொளுத்திவைப்பாள். அதிலிருந்து வரும் புகையைக்கூட மற்ற விக்கிரகங்களுக்குச் செல்லாதவகையில் திரையிட்டு மறைத்தாள். சில மாதங்களில் அவள் வைத்திருந்த விக்கிரகம் கறுத்துப்போயிற்று. மற்ற விக்கிரகங்கள் பிரகாசமாக இருந்தன.

குறுகிய மனம் உடையவர்களின் நிலையும் இது தான். அவர்கள் பிறர்களது நம்பிக்கையை மதிப்பதில்லை. தேங்கிக் கிடக்கும் நீர் பாழ்பட்டுப்போகிறது. இவர்களது நம்பிக்கையும் உறுதியின்றி பக்குவமின்றி மடிகிறது. ஒவ்வொருவரும் மற்றவர்களின் நம்பிக்கைகளையும் மதித்துப்போற்றக் கற்றுக் கொள்ளவேண்டும், அனைத்தையும் தன்வயப் படுத்திக்கொண்டு எதனையும் வெறுத்து ஒதுக்காமல் இருக்கிற மதம்தான் உண்மையான மதம். அத்தகைய மதம்தான் நீடித்திருக்கும். மற்றவை நீர்க்குமிழி போல மறைந்துவிடும். அவ்வாறு நீடித்திருக்கும் மதம் உண்மை, தூய்மை, அஹிம்ஸை, அன்பு ஆகியவற்றின் இருப்பிடம்.

---

## 5-வது அத்தியாயம்

# தொண்டு மார்க்கம்

### 47. கங்கையில் குளித்த யானை

ஒரு யானைப்பாகன் ஒரு யானையை கங்கைக்குக் கொண்டு சென்றான். ஒருமணி நேரம் அதைக் குளிப்பாட்டினான். பவுண்டு கணக்கில் சோப்புப் போட்டு யானையின் உடம்பைத் தேய்த்து அருமை யாகக் குளிப்பாட்டினான். அவனுக்குப் பரம திருப்தி. அவன் யானையை கரைக்குக் கொண்டு வந்து வீட்டுக்குப் புறப்பட்டான். யானை கங்கை யின் கரைமேல் வந்ததும் தனது துதிக்கையால் நிறைய மண்ணையும் தூசியையும் எடுத்து தனது உடல் முழுவதும் பூசிக்கொண்டது. யானைப்பாகன் தனது முயற்சி அனைத்தும் வீணாய்ப்போனதை உணர்ந்தான். அவன் யானையைக் காட்டுக்கு விரட்டினான். அங்கு மரத் துண்டுகளைத் தூக்கிச் செல்லும் வேலையில் அதனை ஈடுபடுத்தினான். அதற்குக் கடுமையான வேலை கொடுத்தான். அவன் இந்தத் துறையில் செய்த முயற்சி எதுவும் வீணாகவில்லை. யானை இந்த வேலைக்குத்தான் தகுதியுடையது என்று உணர்ந்தான். அதைக் குளிப்பாட்டுவதைவிட அதனிடம் வேலை வாங்கு வதே புத்திசாலித்தனம் என அவன் உணர்ந்தான்.

யானை தாமஸ குணம் உடைய ஜீவன். எல்லா தீய பழக்கங்களும் உடைய தமோ குணம் பெற்ற ஒரு மனிதன் இந்த யானையைப் போன்றவன். பாகன் ஒரு புனித ஆத்மா. ஞானி தீய மனிதனை நன்னெறிப்படுத்தி அவனைப் புனிதனாக்க முயற்சிக் கிறார். ஆன்மஞானம் என்னும் சோப்பைப் போட்டு ஜபம் மற்றும் கீர்த்தனையில் அவனைக்

குளிப்பாட்டுகிறார். ஆனால் சிறிதளவு வாய்ப்பு கிடைத்தாலும் தீய மனிதன் சேற்றை அள்ளிப் பூசிக்கொள்ளுகிறான். ஞானி இந்தத் தீய மனிதனின் இயல்பைப் புரிந்துகொள்ளுகிறார். அவனுக்குக் கடுமையான வேலை கொடுக்கிறார். உபயோகமான பல பணிகளில் அதிகமதிகமாக அவன் ஈடுபடுமாறு செய்கிறார். தீய மனிதன் யானையைப்போல வேலை செய்கிறான். பணி, நாளடைவில் அவனைத் தூய்மைப்படுத்துகிறது.

## 48. அன்னையின் தந்திரம்

அன்னை தனது குழந்தைக்கு கசப்பான மருந்தை ஒரு அவுன்ஸ் கொடுக்க முயற்சித்தாள். அன்னை எவ்வளவுதான் கெஞ்சினாலும் குழந்தை மருந்து உண்ணவில்லை. அவளுக்கு அற்புதமான ஒரு யோசனை தோன்றியது. குழந்தைக்கு முன் ஒரு லட்டுவைக் கொண்டு வந்து வைத்து ''நீ இந்த மருந்தை குடித்தால் உனக்கு லட்டு தருவேன்'' என்றாள். உடனே குழந்தை மருந்தைக் குடித்தது. நோயின் கடுமையை மருந்து தணித்ததும் குழந்தை அபாரமான சக்தியைப் பெற்றது. லட்டுவையும் மறந்து அங்குமிங்கும் ஓடி விளையாடியது.

நீங்கள் மனிதனைப் பார்த்து, ''இந்த வேள்வியைச் செய்'' என்று சொன்னால் அவன் செய்வதில்லை. ஏனெனில் ஒவ்வொரு செயலிலும் அவன் இன்பத்தை எதிர்பார்க்கிறான். ஆகவே வேள்வி செய்தால் ஸ்வர்க்கம் கிட்டும் என்று வேதங்கள் சொல்லுகின்றன. வேள்வியை மனிதன் முறையாகச் செய்கிறபோது அவன் மனம் தூய்மை அடைகிறது. படிப்படியாக அவன் அறிவு வளர்ச்சி பெறுகிறான். அவன் இப்போது ஸ்வர்க்கம் பற்றியும் ஒரு எல்லைக்கு உட்பட்ட மகிழ்ச்சியைப்

பற்றியும் பொருட்படுத்தாமல் உன்னதப் பேரானந் தத்தில் மூழ்கி முக்தி அடைகிறான்.

## 49. ஒரு ரூபாய்க்கு ஒரு கத்திரிக்காய் வாங்கிய ஒரு சிறுவன்

ஒரு மனிதனுக்கு இரு புதல்வர்கள். அவன் ஒரு நாள் இருவருக்கும் தனித்தனியே பத்து ரூபாய் கொடுத்துப் பின் வருமாறு கூறினான்: இந்த பத்து ரூபாயை உங்கள் விருப்பம்போலச் செலவு செய்யுங்கள். ''ஆனால் இரவுச் சமையலுக்கு கொஞ்சம் கத்தரிக்காய் வாங்கி வாருங்கள்''.

அவர்கள் இருவரும் கடைக்குச் சென்றனர். முட்டாள் சிறுவன் பத்து ரூபாயையும் கடைக் காரனிடம் கொடுத்து ''தயவு செய்து எனக்குப் பத்து கத்தரிக்காய் கொடுங்கள். இந்த பத்து ரூபாயையும் எடுத்துக்கொள்ளுங்கள். இன்று இரவு எனது தந்தை அருமையான விருந்து கொடுக்க விரும்புகிறார். ஆகவே கத்தரிக்காய் கொடுங்கள்'' என்று கேட்டான். கடைக்காரன் இந்தச் சிறு வனின் முட்டாள்தனத்தைப் புரிந்து கொண்டான். பத்து அழுகிய கத்தரிக்காய்களைக் கொடுத்து அவனை விரட்டிவிட்டான்.

புத்திசாலியான பையன் கடைக்காரனிடம் பத்து ரூபாய்களைக் கொடுத்துவிட்டு பின்வருமாறு கூறினான்:

''இங்கே பார், எனக்கு நல்ல கத்தரிக்காய்கள் மலிவான விலைக்கு வேண்டும். கத்தரிக்காய்க்கு உரிய தொகையை எடுத்துக் கொண்டு, மீதிப் பணத்தைக் கொடு''.

கடைக்காரன் நான்கு அணுவுக்கு கத்தரிக்காய் கொடுத்தான். சிறுவன் இரண்டு ரூபாய் கொடுத்து கோயிலில் வழிபாடு செய்து, பிரசாதம் பெற்றுக் கொண்டான். ஏழைச் சிறுவர்களுக்கு ஐந்து ரூபாயை தர்மம் செய்தான். அந்தச் சிறுவர்கள் புத்திசாலிப் பையனையும் அவனது குடும்பத் தாரையும் மனதார வாழ்த்தினர். மீதம் இருந்த தொகைக்கு புத்தகக் கடைக்குச் சென்று சில ஆன்மீகப் புத்தகங்களை வாங்கினான்.

அவர்கள் இருவரும் வீட்டுக்குத் திரும்பி தாம் கொண்டு வந்ததைத் தந்தையிடம் காட்டினர்.

''அப்பா, இங்கே பாருங்கள், நான் பத்து ரூபாய்க்கு பத்துக் கத்தரிக்காய் வாங்கி வந்திருக் கிறேன். அவை அற்புதமாக இருக்கும்'' என்று முட்டாள் சிறுவன் கூறினான். தான் கொண்டு வந்த அழுகிய கத்தரிக்காய்களைத் தந்தையிடம் கொடுத் தான். தந்தை மிகுந்த வெறுப்புடன் அந்தக் கத்தரிக் காய்களை வீசி எறிந்தார். ''நீ பணத்தை வீணாக்கி விட்டாய். அத்துடன் அழுகிய காய்களை வாங்கி வந்திருக்கிறாய். இவை மற்ற உணவுப் பண்டங் களையும் கெடுத்துவிடும். இப்படி முட்டாளாக இருக்கிறாயே!'' என்று கூறினார். மற்றொருவனை நோக்கி ''நீ என்ன கொண்டு வந்திருக்கிறாய்?'' என்று கேட்டார்.

புத்திசாலிப்பையன் தான்கொண்டுவந்திருந்த நல்ல கத்தரிக்காய்களையும், புனிதமான கோயில் பிரசாதத்தையும், ஆன்மீக நூல்களையும் தந்தை யிடம் கொடுத்து, ''அப்பா, இவற்றுக்கு நான் ஐந்து ரூபாய்தான் செலவு செய்தேன். மீதம் ஐந்து ரூபாயை தர்மம் செய்தேன். அந்தப் பணத்தைப் பெற்றுக்கொண்ட ஏழைச் சிறுவர்கள் எவ்வளவு

மகிழ்ச்சி அடைந்தார்கள் தெரியுமா! நமக்கு நல் ஆசி வழங்குமாறு அவர்கள் இறைவனைப் பிரார்த்தனை செய்தனர். நிச்சயமாக இறைவன் நம்மைக் குறித்து, மகிழ்ச்சி அடைவார்'' என்று கூறினான். தந்தை புத்திசாலிப்பையனைக் கட்டித் தழுவிக்கொண்டு அவனது புத்திசாலித்தனத்தைப் பாராட்டினார். ''நீ என் அருமை மகன். உன்னைக் குறித்து நான் மகிழ்ச்சி அடைகிறேன். எனது சொத்து அனைத்துக்கும் நீ மட்டுமே வாரிசாக இருந்து அனுபவிக்க ஏற்பாடு செய்கிறேன். நீயே நான்; நானே நீ'' என்றும் கூறினார்.

மக்கள் முறையாகப் பயன்படுத்துவார்கள் என்னும் நினைப்பில் இறைவன் அவர்களுக்குச் செல்வத்தைத் தருகிறார். பொருள்மூலம் இன்பத்தை மட்டும் அனுபவிக்கக்கூடாது, தர்மத்துக்கும், முக்திக்கும் அந்தச் செல்வத்தைப் பயன்படுத்தவேண்டும்.

முட்டாள் மனிதன் தனது செல்வம் அனைத்தையும், தனதுசக்தி மற்றும் நேரம் அனைத்தையும் புலன் இன்பத்தை அனுபவிப்பதிலேயே செலவிடுகிறான். இவ்வளவு செலவு செய்து அவன் பெறுகிற இன்பம் உண்மை இன்பமா ? அவை வேதனைதரக் கூடியவை; தரக்குறைவானவை, அவை பயனற்றவை.

புத்திசாலி மனிதன், இதற்குமாறாக தேவை அறிந்து செலவிடுகிறான். தர்மத்துக்கும், மோட்சத்தைத் தரும் செயல்களுக்கும் அதிகமாகப் பணத்தைச் செலவிடுகிறான். அவன் தர்மம் செய்கிறான். அவன் பூஜை செய்கிறான். அவன் தனது செல்வத்தின் மூலம் ஞானம் பெறுகிறான். அவன் மகாத்மாக்களுக்கும் சாதுக்களுக்கும் அன்னதானம்

செய்கிறுன். அவர்கள் உடல் நலத்துக்குத் தேவையான உதவிகளைச் செய்கிறுன். அவர்கள் இவனுக்கு ஞானத்தை அருளி ஆன்மீக முன்னேற்றத்துக்கு வழிகாட்டுகிறுர்கள்.

புத்திசாலியின் செயல்கண்டு இறைவன் மகிழ்ச்சி அடைகிறுர், அவனை இறைவன் அரவணைத்துக்கொள்ளுகிறுர். அவர்கள் ஒன்றிவிடுகின்றனர். அவன் தெய்வீகச் செல்வத்தைப் பெற்று உலகில் இறைவனின் வாரிசாக—ஒரு மகரிஷியாக, ஞானியாக, சித்தராக, ஜீவன் முக்தராக ஆகிறுன்.

## 50. தேனும் கொடியும்

காட்டில் ஒரு பெரிய மரம் இருந்தது. அதன் உச்சியில் இருந்த கிளையில் மிகப்பெரிய தேன்கூடு இருந்தது. மரத்தின் உச்சிக்கு ஏறிச்செல்வது கடினம். அப்படிச் செல்ல கிளைகளில் படிகள்போல வெட்டி அதில் காலைவைத்து பொறுமையுடனும் அறிவாற்றலுடனும் செய்ய வேண்டும்.

மரத்தில் ஒரு கொடி வளர்ந்திருந்தது. மரத்தைச் சுற்றி வளர்ந்து அது உயரே சென்றிருந்தது. அது ஆகாயத்தில் ஆபத்தான வகையில் தொங்கிக் கொண்டிருந்தாலும் வலுவானதுபோலத் தோன்றியது.

ஒரு பேராசையுள்ள மனிதன் தேனை எடுக்க விரும்பினுன். அதிக முயற்சியின்றி அதனைப்பெற விரும்பினுன். அந்தக் கொடியின் உதவியுடன் மரத்தில் ஏறினுன். மரத்தில் படிகள் வெட்டி மேலே ஏறிச்செல்ல அவனுக்கு சோம்பல். கொடி உறுதியாக இருப்பதாக எண்ணி அதன் மூலம் மரத்தின் உச்சியை அடைய முடியும் என்று

எண்ணினான். அவன் பூமியிலிருந்து சில அடி உயரம் மேலே ஏறிச்சென்றபோது புயற்காற்று வீசி கொடியை அறுத்து எறிந்தது. அந்த மனிதன் கீழே விழுந்தான். அவன் உடல் உறுப்புக்கள் முறிந்தன.

யாகம்போன்ற கர்மங்கள் என்னும் கொடியின் துணை கொண்டு மோட்சம் என்னும் தேனைக் குடிக்க தெய்வீகம் என்னும் மரத்தின்மேல் ஏறுகிறவர்களின் நிலையும் இதுபோல அமைகிறது. மோட்சத்தினை அடைய மரக்கிளையின் வழியாக ஏறிச்செல்ல வேண்டும். சாதனை என்னும் படிகளை மரத்தில் ஏற்படுத்திக்கொள்ள வேண்டும். நீங்கள் படிப்படியாக முன்னேறிச் செல்லவேண்டும். யமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்யாஹாரம், தாரணை, த்யானம் அதன்பின் உச்சகட்டமாக சமாதி—இப்படி படிப்படியாக உயர்ந்து செல்லவேண்டும். இதற்குக் குறுக்குவழி இல்லை. இந்தப் பொறுப்பை நீங்கள் தட்டிக்கழிக்க முடியாது. இதற்கு மாறாக, நீ காமிய கர்மங்களைப் பின்பற்றினால், அவை உறுதியானவையாகத் தோன்றினாலும், அவை உங்களை ஆன்மீகத் துறையின் உயரிய நிலைக்கு கொண்டு செல்லாது. சுயநல நோக்கம் கொண்ட ஆசைகள், இந்த உலகப் பொருட்களுக்காக ஆசைப்படுதல், ஸ்வர்கத்தின் இன்பம் என்னும் புயற்காற்று வீசுகிறபோது கர்மம் என்னும் கொடியும் ஒடிந்துவிழும். நீயும் பயங்கர மாகக் கீழே விழுந்துவிடுவாய்.

மனிதா! சுயநல நோக்குடன் செய்யப்படுகிற எந்தச் செயலும் ஆத்ம ஞானம் என்னும் லட்சியத்துக்கு அழைத்துச் செல்லாது. சுயநல நோக்கமில்லாத பணிதான் உனக்கு உதவமுடியும். சாதனை என்பது அதைவிட சற்றுக் கடுமையானது. கடுமையான உழைப்பின்மூலம் நீங்கள் உயர்ந்து

செல்லவேண்டும். நீங்கள் உச்சியை அடைந்ததும் அமரத்துவம் மற்றும் நிலையான பேரானந்தம் என்னும் அமுதத்தை நீங்கள் பருகுவீர்கள்.

## 51. நெய் தோற்றுவித்த அஜீரணம்

ஒருவன் விருந்து ஒன்றில் நிறைய நெய் சேர்த்து உண்டான். அதன்பின் அவன் உடல் நலம்குன்றினன். அவனுக்கு அஜீரணம் ஏற்பட்டது, அவன் ஒரு டாக்டரிடம் சென்றான். டாக்டர் அவனிடம் பின்வருமாறு கூறினர், ''ஒருதோலா நெய் கொண்டு வா, மருந்து தயாரித்துத் தரு கிறேன்.''

நோயாளி அதிர்ச்சி அடைந்தான். ''டாக்டர் நான் நெய்யை அதிகமாக உட்கொண்டதால்தான் அவதிப்படுகிறேன், நீங்கள் ஏன் எனக்கு மேலும் தொல்லைதர விரும்புகிறீர்கள்?'' என்று அவன் டாக்டரிடம் கேட்டான்.

''தம்பி தயவு செய்து நெய் கொண்டுவா, அதை என்ன செய்யவேண்டும் என்று நான் சொல்லுகிறேன். அதே நெய்தான் உன் நோய்க்கு மருந்து.''

நோயாளி நெய் கொண்டுவந்தான். டாக்டர் அத்துடன் சில மருந்துப் பொருட்களைக் கலந்து அவனுக்கு அன்புடன் கொடுத்தார். பிறகு அவனது நோய் குணமாயிற்று. மீண்டும் அவனுக்கு பசி எடுத்தது.

இதுபோல, மனிதன் கர்மாவின் மூலம் பிறப்பு —இறப்பு என்னும்சக்கரத்தில் தன்னைப்பிணைத்துக் கொண்டிருக்கிறான், பலனில் நாட்டம் கொண்டு

அகந்தையுடன் செய்யப்படுகிற செயல், மறுபிறப்பையும் அத்துடன் பல தொல்லைகளையும் வரவழைக்கிறது. மனிதன் ஒரு ஞானியைக்கண்டு இதிலிருந்து விடுப்பட வழிகோருகிறான். அந்த ஞானி தொண்டு, பணி அல்லது கர்மாவைசெய் என்கிறார். செயலிலிருந்து ஏற்படும் பந்தத்திலிருந்து மனிதனை செயலே விடுவிக்க முடியுமா? ஆம், சுயநலமின்மை, அகந்தையின்மை என்னும் மருந்துப் பொருட்கள், செயலுடன் இணைக்கப்பட்டால், நிகழ் காலத்துக்கோ அன்றி எதிர்காலத்துக்கோ பலனை எதிர்பாராமல், பிறப்பு—இறப்பு என்னும் நோயிலிருந்து விடுபடும் நோக்கத்துடன் செயலில் ஈடுபட்டால் மனிதன் கர்மபந்தத்திலிருந்து விடுபட முடியும். பயன்கருதாத தொண்டு, மனிதனை சம்ஸார சாகரத்திலிருந்து விடுவிக்கும்.

## 52. மண்ணை மண்ணால் கழுவிய மனிதன்

**"உஷ்ணம் உஷ்ணேன சம்யதி"** என்ற வாக்கை ஒரு இளைஞன் கேள்விப்பட்டிருந்தான். ஒரு நாள் அவன் சாலையில் நடந்து சென்றான். அப்போது அவன் களிமண் நிறைந்த கால்வாயை கடந்து செல்ல வேண்டியிருந்தது. அப்படிக் கடந்து சென்றபோது அவன் முழங்கால் வரை சேறு ஒட்டிக் கொண்டிருந்தது. அவன் உடனே இடுப்புவரை சேற்றைப் பூசிக்கொண்டான். அந்த வழியாகச் சென்ற அறிஞன், அவனைப் பார்த்து அவன் என்ன செய்து கொண்டிருக்கிறான் என்று வினவினான். ''நான் மண்ணை அகற்ற முயற்சிக்கிறேன்'' என்று இளைஞன் பதிலளித்தான். ''ஆனால் நீ மேலும் சேற்றைப் பூசிக்கொள்ளுகிறாயே!'' என்று அறிஞன் சொன்னான். முள்ளை முள்ளால் எடுப்பதுபோன்ற செயல் இது என இளைஞன் பதிலளித்தான்.

''முட்டாள்! அந்தப் பழமொழி இதற்குப் பொருந்தாது. அழுக்குடன் அழுக்கைச் சேர்த்த தால் நீ மேலும் அழுக்காகிவிடுவாய். தண்ணீரையும், சோப்பையும் பயன்படுத்தி மண்ணைக் கழுவி அகற்று'' என்று அறிஞன் சொன்னான்.

இளைஞன் அப்படியே செய்து உடலைத் தூய்மைப் படுத்திக்கொண்டான்.

இதுபோல, சம்ஸாரம் என்னும் மண் நிறைந்த குளத்தில் வீசி எறியப்பட்ட ஜீவன், அதிலேயே உழன்று பயன் கருதிப் பணி செய்து மென்மேலும் சேற்றைப் பூசிக்கொள்கிறது. அப்படிச் செய்வதன் மூலம், பெருமகிழ்ச்சி அடையலாம் என ஜீவன் எண்ணுகிறது. உண்மையில் விளைவு நேர்மாறாக இருக்கிறது. அஞ்ஞானம், காமம், கர்மம் இவற்றின்மூலம் ஜீவன் பிறப்பு - இறப்பு' என்னும் சக்கரத்தில் தன்னை மேலும் உறுதியாகப் பிணைத்துக் கொள்ளுகிறது. குருநாதர் வந்து ஜீவனுக்கு வழி காட்டுகிறார். ''மனிதா, நிலையான பேரானந்தம் அல்லது முக்தி என்னும் நிலையினை அடைய இது வழி அல்ல. இறை பக்தி என்னும் நீரையும், பற்றின்மை என்னும் சோப்பையும் கொண்டு உனக்கு இந்தப் பிறவியைத் தந்திருக்கிற கர்மா என்னும் அழுக்கைக் கழுவி அகற்று. உனது செயல்கள் அனைத்தையும் ஆன்மீக மயமாக ஆக்கு. அப்போது உன் ஆத்மாவை மூடியிருக்கும் அழுக்கு அகன்றுவிடும். நீ உனது உண்மை ஒளியுடன் பிரகாசிப்பாய்'' என்று அவர் கூறுகிறார். அன்றிலிருந்து சீடன் பக்தி, பயன் கருதாதத் தொண்டு ஆகியவற்றில் ஈடுபட்டு இறுதியில் முக்தி அடைகிறான்.

## 53. இரு பயணிகள்

ஒரு கிராமத்து சாலையில் இருவர் நடந்து சென்றனர். ஒருவன் திடீரென்று அலறினன். தன் பாதத்தைப் பிடித்துக்கொண்டு கீழே அமர்ந்தான். அவனுக்கு வலி எடுத்தது. பெரிய முள் ஒன்று அவன் பாதத்தில் குத்திவிட்டது. அவனால் தன் காலை நகர்த்தக்கூட முடியவில்லை. முன்னே போய்க் கொண்டிருந்த மற்றொருவன் திரும்பிப்பார்த்தான். உட்கார்ந்திருந்தவனைப் பார்த்து உரத்த குரலில், ''ஏ முட்டாள்! நேரமாகிறது. நீ ஓடி வராவிட்டால் நாம் சேர வேண்டிய இடத்தை இருட்டுவதற்குள் சென்று அடைய முடியாது'' என்று கூறினன். உட்கார்ந்திருந்தவன் பதிலளித்தான். ''இல்லை நண்பா; என் காலில் உள்ள முள்ளை எடுக்கிறவரை என்னால் ஒரு அங்குலம் கூட நகர முடியாது'' ''வழியில் ஏன் இப்படித் தொல்லைபடுத்துகிறய்? வா, எழுந்துவா; நீ வராவிட்டால் நான் போய் விடுவேன்'' என்று சொல்லிக்கொண்டே அந்த நண்பன் ஒரு பர்லாங் தூரம் நடந்து சென்று விட்டான். அப்போது அவன் காலிலும் ஒரு முள் தைத்துவிட்டது. அவனும் காலைப் பிடித்துக் கொண்டு உட்கார்ந்துவிட்டான். பாதத்தில் கையை வைத்தால்கூட வலி தாங்க முடியவில்லை. அவர்களால் தாமாக முள்ளை எடுத்துக்கொள்ள முடியவில்லை. இருவரும் ஒரே துன்பத்தை அனுபவித்துக் கொண்டிருந்தார்கள். கருணையின்மை காரணமாக வெவ்வேறு இடத்தில் உட்கார்ந்து அவதிப்பட்டுக்கொண்டு இருந்தார்கள். ஒருவருக்கொருவர் உதவிக்கொள்ள முடியவில்லை. மூன்றுவது நபர் ஒருவர் அங்கு வந்து அவர்கள் பாதத்தில் உள்ள முள்ளை அகற்றுகிற வரையில் அவர்கள் அங்கேயே உட்கார்ந்து இருந்தார்கள்.

மூன்றாவது நபர் முள்ளை அகற்றிவிட்டு பின்வருமாறு கூறினார். ''நண்பர்களே முதலில் ஒருவருக்கு முள் குத்தியபோது மற்றொருவர் அதனை அகற்றியிருந்தால் மற்றொருவருக்கு முள் குத்தியபோது முதல் நபர் முள்ளை அகற்றியிருப்பார். இவ்வாறு ஒருவர் வலியை மற்றொருவர் பொருட்படுத்தாமல் செல்லாது ஒருவருக்கொருவர் உதவி செய்து கொண்டு உங்கள் லட்சிய பயணத்தை விரைந்து தொடர்வீர்களாக!

இதுபோல, கல்மனம் படைத்த ஒருவன் தன்னுடன் பயணம் செய்கிற மனிதன், வாழ்க்கை என்னும் முள்நிறைந்த பாதையில் துன்பத்தையும் வேதனையையும் அனுபவிக்கிறபோது அவனைப் பார்த்து நகைத்துவிட்டு தன் வழியில் நடந்து செல்கிறான். வாழ்க்கையின் இயல்பான தன்மை காரணமாக விரைவிலேயே அவனும் துன்பத்தையும் வேதனையும் அனுபவிக்கிறான். பிறருடைய உதவியை பெறமுடியாத தொலைவில் இருந்து கொண்டு துன்பத்தில் துடிக்கிறான். அறிவிற் சிறந்து விளங்கும் ஆத்மஞானி அங்கு வருகிறார். ஒற்றுமையின் அவசியத்தை உணர்ந்து இருப்பவர். இந்த இருவரின் துன்பங்களையும் போக்குகிறார். இருவரின் உள்ளங்களிலும் அன்பு என்னும் விதையை ஊன்றுகிறார். மேலும் அவர் பின் வருமாறு உபதேசம் செய்கிறார்: ''மனிதா மற்றொருவருக்குத் தொண்டு செய்து அவர்கள் துன்பத்தை போக்க உனக்கு வாய்ப்பு அளிப்பதற்காகவே மற்றவர்கள் துன்பத்தை அனுபவிக்கிறார்கள். இவ்வாறு ஒருவருக்கொருவர் தொண்டு செய்து கொண்டு உங்கள் லட்சியத்தை அடைய விரைந்து பயணம் செய்வீர்களாக! மற்றவர்கள் துன்பப்படும்போது அவர்களைப் பார்த்து இது அவருடைய வினைப்பயன் என்று கூறி நீங்கள்

நகைக்கலாம். ஆனால் விரைவிலேயே அதேபோல் துன்பத்தை நீங்களும் அனுபவிக்க நேரிடுகிறது. உலகின் இயல்பை புரிந்து கொள்ளுங்கள். அனைவருக்கும் தொண்டு செய்யுங்கள். அனைவரிடத்திலும் அன்பு செலுத்துங்கள். அனைவரிடத்திலும் நிறைந்திருக்கும் ஆத்மாவை அறிந்துகொள்ளுங்கள்.

## 54. ஜமீன்தாரின் அரண்மனை

ஒரு பெரிய ஜமீன்தார் ஒரு அற்புதமான அரண்மனையைக் கட்டினார். அவர் செல்வச் செழிப்பை விளம்பரப்படுத்திக் கொள்வதற்காக நிறைய பணச்செலவில் தன்னுடைய அரண்மனையில் விலையுயர்ந்த கலைப்பொருட்களை இடம்பெறச் செய்தார். அந்தக்காலத்தில் கலைஞர்களும் கட்டிடக் கலை நிபுணர்களும் கண்டு அதிசயிக்கக் கூடிய அளவுக்கு அரண்மனையை கலை அம்சங்களுடன் கட்டினார். அரண்மனை கட்டி முடிக்கப்பட்டது. அது இணையற்றதாக விளங்கியது. மிக ஆடம்பரமாக கிரகப் பிரவேசத்திற்கு ஏற்பாடு செய்யப்பட்டது. ஜமீன்தார் விழாவிற்கு நிறையப்பேரை அழைத்திருந்தார். விழாவிற்கு வந்து இருந்தவர்களில் சிலர் சுவற்றில் வரையப்பட்டிருந்த ஓவியங்களைப் பார்த்து பாராட்டினர். சிலர் சுண்ணும்பின் மேல் எழுதப்பட்டிருந்த சித்திரங்களைக் கண்டு பாராட்டினர். சிலர் அருமையாகக் கட்டப்பட்டுள்ள மண்டபங்களை பாராட்டினர். மற்றவர்கள் எங்கும் கலை அழகு மிளிர்வதை பாராட்டினர். ஆனால் அந்த அரண்மனையை கட்டுவதற்கு பொறுப்பாளராக இருந்த பொறியியலாளர் மட்டும் மௌனமாக இருந்தார். ஜமீன்தார் அவரைப் பார்த்து பின்வருமாறு கேட்டார்; ''நண்பரே நீங்கள் மட்டும் ஏன் மௌனமாக இருக்கிறீர்கள் ?

இந்த அரண்மனையின் தோற்றத்துக்கு நான் காரண மாக இருந்திருக்கிறேன், இதனை தாங்கள் அற்புத மாக வடிவமைத்துக் கொடுத்திருக்கிறீர்கள். இதில் உங்களை அதிகமாகக் கவரும் அம்சம் எது ?''

''மகராஜ், மன்னிக்கவேண்டும். ஒரு கணம் சுற்றுப்புறச் சூழ்நிலைபற்றிய உணர்வே எனக்கு இல்லை. இந்த அரண்மனையின் அழகை நான் எண்ணிப்பார்க்கிறபோது என் கண் முன்னே இரண்டு காளைமாடுகள்தான் தென்பட்டன. இந்த அரண்மனை கட்டும்பொழுது தேவைப்பட்ட சுண்ணும்புக் கலவையை தயாரிக்க இந்த இரண்டு மாடுகளும் வட்டமாக சுற்றிச் சுற்றி வந்ததை நான் எண்ணிப் பார்க்கிறேன். அவற்றின் தொண்டு என்னை மிகவும் கவர்ந்து விட்டது. இந்த மாபெரும் கட்டிடத்தின் பெருமை அனைத்தும் அவைகளுக்கே சொந்தம். கட்டுமான வேலைக்குத் தேவையான மிகச் சிறந்த சுண்ணும்புக் கலவையை தயாரிப்பதற்கு இந்த இரண்டு மாடுகளும் பொறுமையாக வட்டத் தில் சுற்றிச் சுற்றி வந்திருக்காவிட்டால் கட்டிடக் கலை நிபுணர்களும், பொறியியல் வல்லுநர்களும், ஓவியர்களும் என்ன செய்திருப்பார்கள்? ஒவ்வொரு மகத்தான கட்டுமான பணியிலும் கண்ணைக் கவரும் அழகிய அம்சங்கள் இருக்கும். பல அம்சங்கள் உங்களை ஆச்சரியத்தில் ஆழ்த்தி யிருக்கின்றன. கண்ணுக்குத் தெரிகின்ற இந்த கலையம்சங்களை கண்டு பாராட்டுகிற நீங்கள் அமைதியாக ஆடம்பரமின்றி தன்னலமற்ற முறை யில் இந்தக் கட்டுமான பணிக்கு தொண்டு செய்த ஆற்றல்மிக்க ஊழியர்களை மறந்து விடுகிறீர்கள். அனைத்துப் புகழும் அவர்களையே சாரும்.''

---

## 6–வது அத்தியாயம்

# பக்தி மார்க்கம்

### 55. தையற்காரரின் ஊசி

ஒரு தையற்காரர் தமது பணியில் மூழ்கியிருந்தார். அவர் ஒரு துணியை எடுத்து பளபளப்பான விலை மதிப்புமிக்க கத்திரிக்கோலால் பல துண்டுகளாக கத்தரித்தார். பிறகு அந்த கத்திரிக்கோலை தனது காலடியில் போட்டார். பிறகு ஒரு சிறு ஊசியையும், நூலையும் எடுத்து, துண்டுத் துணிகளை அருமையான சட்டையாகத் தைத்தார். தைத்து முடிந்ததும் அவர் அந்த ஊசியை தனது தலைப் பாகையில் செருகிக்கொண்டார். அவருக்கு அருகில் அமர்ந்திருந்த அவரது மகன் இதைக் கவனித்துக் கொண்டிருந்தான். அவன் தனது தந்தையை நோக்கி பின் வருமாறு கேட்டான்:

''அப்பா, கத்திரிக்கோல் மிகவும் விலை உயர்ந்தது. அழகான தோற்றம் உடையது. ஆனால் அதை நீங்கள் உங்கள் காலடியில் போட்டுவிட்டீர்கள். இந்த ஊசிக்கு மதிப்பே இல்லை; ஓர் அணுவுக்கு ஒரு டஜன் ஊசி வாங்கலாம். ஆயினும் அந்த ஊசியை நீங்கள் கவனமாக தலையிலேயே வைத்துக் கொள்ளுகிறீர்கள். உங்களின் இந்த முரண்பட்ட செயலுக்கு ஏதாவது காரணம் உண்டா?''

''ஆம் மகனே, கத்திரிக்கோல் அதன் வேலையைச் செய்கிறது. இதில் ஐயம் இல்லை. ஆனால் அவை துணியை துண்டு துண்டாக வெட்டிப் போடுகிறது. இதற்கு மாறாக, ஊசி துண்டு துண்டாக இருக்கும் துணியை ஒன்று சேர்த்து அதன்

மதிப்பை உயர்த்துகிறது. ஆகவே என்னைப் பொறுத்தவரை ஊசிதான் அரிதானது. மதிப்பு மிக்கது. ஒரு பொருளின் மதிப்பு அது பயன் படுத்துகிற விதத்தில் இருக்கிறது. அதன் விலை அல்லது தோற்றத்தைக் கொண்டு அதனை மதிப் பிடக்கூடாது.

இதுபோல உலகில் இருவகைப்பட்ட மக்கள் வாழ்கிறார்கள். ஒரு வகையினர் பிளவு ஏற்படுத்தி வேற்றுமையைத் தோற்றுவித்து மனிதர்களைப் பிரிக்கின்றனர். மற்றொரு வகையினர் அமைதியை யும் ஒற்றுமையையும் தோற்றுவித்து மக்களை ஒன்று படுத்துகின்றனர். முதல் வகையைச் சேர்ந்த வர்கள் பொதுவாக பணக்காரர்களாகவும் சக்தி மிக்க அரசியல் வாதிகளாகவும், மன்னர்களாகவும் இருக்கின்றனர். இரண்டாம் வகையைச் சார்ந்த வர்கள் பொதுவாக பரம பக்தர்களாகவும், ஏழை களாகவும், கையில் பணமேதுமின்றி தேசமெங்கும் சுற்றித்திரிகின்ற துறவிகளாகவும், ஆண்டிகளாக வும் திரிகின்றனர். ஜீவாத்மாவின் வளர்ச்சிக்கான பணியில் இறைவன் இந்த இருவகையினரையும் பயன்படுத்திக் கொள்ளுகிறார். போர்களையும் ஒற்றுமையின்மையையும் தோற்றுவிக்கிற மாமன்னர்களையும், கோடீஸ்வரர்களையும் இறை வன் புழுதியில் வீசி எறிகிறார். ஏழையையும், பக்த னையும் தனது தலையில் வைத்துக் கொள்ளுகிறார். மனிதர்களை அவர் எடைபோடுகிற விதம் அலாதி யானது.

## 56. எறும்பும் பல்லியும்

சர்க்கரைத் தூளை ருசித்து உணவாக உட் கொண்டது ஒரு எறும்பு. எறும்பு இப்படி உண்பதை இரண்டு இளைஞர்கள் மெய் மறந்து

பார்த்துக் கொண்டிருந்தனர். ஒரு பல்லி அந்த எறும்பை விழுங்குவதற்கு விரைந்து வந்தது. எறும்பைக் குறிபார்த்து விழுங்குவதற்காக சற்றுத் தொலைவில் நின்றது.

ஒரு இளைஞன் பின் வருமாறு சொன்னான்; "பார்த்தாயா, பல்லி எறும்பைத்தின்ன விரும்புகிறது. இது இயற்கையின் சட்டம். எறும்பு பல்லிக்கு உணவாக வேண்டுமென்பது இயற்கையின் சட்டத்தில் எழுதப்பட்டிருப்பதாகும். கவனித்துப்பார்."

மற்றொரு இளைஞன் பின்வருமாறு கூறினான்; "இல்லை, எறும்பை பல்லி விழுங்கும்போது நாம் வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கக் கூடாது. நான் அதைத் தடுப்பேன்."

இப்படிச் சொல்லிக்கொண்டே அந்த இளைஞன் பல்லியின் வாலைப் பிடித்தான். வால் மட்டும் அவன் கையில் இருந்தது. வேறு எந்த வகையிலும் பாதிக்கப்படாமல் பல்லி தன் குறிக்கோளை நோக்கி முன்னேறியது. உடனே அந்த இளைஞன் தனது கைகளால் அந்த எறும்பை மூடிக்கொண்டான். பல்லியின் முயற்சி வீணாயிற்று. எறும்பு பாது காக்கப்பட்டிருப்பதை அறிந்து கொண்ட பல்லி அங்கிருந்து அகன்றது. இதுபோல ஒரு சாதகன் தியானம் செய்ய முயற்சிக்கிறபோது பழைய உலகியல் தொடர்புகள் சாதனையின் மூலம் பெறப்பட்ட சக்தியை விழுங்கத் துடிக்கின்றன. இறைவனைக் குறித்து தியானம் செய்கிறபோது ஏற்படுகிற மகிழ்ச்சியை ஒரு கணம் அனுபவித்துக் கொண்டிருக்கும்போது சக்திமிக்க எதிரி சாதகனுக்கு உள்ளே இருந்து எழுந்து தாக்குதல் செய்ய வருகிறது. சோம்பலும், முட்டாள்தனமும் உடைய ஒருவன் மனம்

தளர்ந்து முயற்சியைக் கைவிடுகிறுன். ஆனுல் புத்திசாலி அப்படிச் செய்வதில்லே. இருளின் சக்தியை அவன் குறைத்து மதிப்பிட்டு விடுகிறுன். எதிரியுடன் நேருக்கு நேர் மோத விரும்புகிறுன். தீய எண்ணம் அவன் பிடிக்குள் அகப்படுவதில்லே. அது தப்பிச்செல்லுகிறது. அவனுள்ளே ஞானம் ஒளிவிட்டுப் பிரகாசிக்கிறது. அவன் இறைவனின் திருப்பெயரை சக்திமிக்க கேடயமாக பயன்படுத்திக் கொண்டு, தியானத்தில் ஈடுபட்டு இறைவனிடத்தில் பரிபூரண சரணுகதி அடைந்து அந்தக் கரணத்தை விரைவாக மூடிக்கொள்ளுகிறது. சர்வ சக்தி வாய்ந்த இறைவனின் திருப்பெயரால் காக்கப் பட்டு அவன் பத்திரமாக இருக்கிறுன். அவனது தியானம் தடையின்றித் தொடர்கிறது. தீய எண்ணம் தனது சக்தியை முழுமையாக இழந்து மறைந்து விடுகிறது.

மனத்தளர்ச்சிக்கு இடம் கொடுக்காதீர்கள், தீய சக்தியுடன் போராடாதீர்கள். அதற்கு நேர் மாறுன நல்ல சக்தியை வளர்த்துக் கொள்ளுங்கள். இறைவனின் திருநாமத்தை ஜபம் செய்து இறைவனிடம் சரணுகதி அடையுங்கள். இப்படிச் செய்து அமரத்வம் வாய்ந்த பேரானந்தத்தை அனுபவியுங்கள்.

## 57. உறுதிமிக்க முதியவர்

இளமைக் காலத்தில் ஒரு மனிதர் நிறைய செல்வத்தை சேர்த்து வைத்தார். இதற்காக முறை கேடான நடவடிக்கைகளிலும் ஈடுபட்டார். மிகவும் சக்தி வாய்ந்தவராக விளங்கினுர். வயதும், அனுபவமும் அதிகரித்தது. ஆனுல் உடல் சக்தி இழந்தது. அவர் உடல் நலம் குன்றி இருக்கிறுர். ஆனுலும் அவருடைய வீட்டிற்குள் அவருடைய

நண்பர்களை மட்டுமே அனுமதிப்பார். வேறு யாரையும் உள்ளே விடுவதில்லை. சமயத்துறையில் ஈடுபாடுள்ள எவரையும் அவர் தன் வீட்டிற்குள் அனுமதிப்பதில்லை. அப்படி அவர்களை அனுமதித்தால் அவர்கள் மறு உலக சித்தாந்தங்களைப் பற்றி பேச ஆரம்பித்து விடுவார்கள்; தனது குடும்பத்தின் உலகியல் முன்னேற்றத்துக்கு இது ஒத்து வராது என்று அவர் கருதினார். அவர் கைத்தடியை கையில் வைத்துக்கொண்டு வீட்டின் நுழைவாயிலுக்கருகே அமர்ந்து கொள்ளுவார். வருகின்றவர்கள் யார் என்று அவரால் பார்க்க முடியாவிட்டாலும் ஒவ்வொருவரையும் நோக்கி ''யாரது?'' என்று கேட்பார். அவரது பழைய நண்பர்கள் மட்டுமே உள்ளே அனுமதிக்கப்படுவர். அந்த இல்லத்தினரை வாழ்த்த விரும்பும் பக்தர்கள் அந்தப் பக்கம் இன்னும் நெருங்க முடியவில்லை. ஒரு நாள் அந்த முதியவர் இறந்து விடுகிறார். அதன் பிறகு பக்தர்கள் அவர் வீட்டிற்குள் செல்லுகிறார்கள். பஜனை, சங்கீர்த்தனம் ஆகியவற்றில் ஈடுபட்டு அந்த இடத்தை வைகுந்தமாகவே மாற்றி விடுகின்றனர்.

தீய மனிதனின் இதயத்தில் ஆசை வலுவாகக் குடி கொண்டிருக்கிறது. இந்த உலகில் அடுத்தடுத்து சந்திக்கவேண்டியிருக்கிற தாக்குதல்கள், உயிர்ச்சக்தி இழப்பு, ஆகியவை காரணமாக ஆசை வலுவை இழக்கிறது. கணிசமான அளவுக்கு அது பலவீனம் அடைந்தாலும் கூட அது அந்தக்கரணத்தின் நுழைவாயிலில் அமர்ந்து கொண்டு இருக்கிறது. மனத்துக்குள் புனிதமான எண்ணங்கள் புகுவதற்கு அது ஒருபோதும் அனுமதிப்பதில்லை. புலன் இன்பங்களை அனுபவிக்க இயலாத நிலையிலும்கூட ஜீவனை சத்சங்கம் மற்றும் சங்கீர்த்தனத்தில் ஈடுபட அது அனுமதிப்பதில்லை. மாயை மற்றும் சந்தேகம் என்னும் கனமான தடிகொண்டு அது தெய்வீக

சக்திகளை விரட்டி அடிக்கிறது. ஆனால் இறைவன் அருள் ஜீவாத்மாவுக்கு கிடைக்கிறபோது ஆசை மடிகிறது. இதுவரை காத்துக்கொண்டிருந்த தெய்வீக இயல்புகள் ஜீவனை சூழ்ந்துகொண்டு அவன் தெய்வீக இயல்பினை அனுபவிக்குமாறு செய்கின்றன.

## 58. கொள்ளைக்காரன்

ஒரு சிறிய நகரத்தில் ஒரு லட்சாதிபதி வாழ்ந்து வந்தான். ஒருநாள் இரவு அவனும், அவனது குடும்ப உறுப்பினர்களும் ஆழ்ந்து உறங்கிக் கொண்டிருந்தபோது ஒரு சப்தம் கேட்டது. பலமும் சக்தியும் கொண்ட ஒரு கொள்ளைக்காரன் அவர்கள் வீட்டுச் சுவற்றில் துளைபோட்டுக்கொண்டு வீட்டுக்குள் நுழைந்துவிட்டான். அவன் பலசாலியாக இருந்ததால் லட்சாதிபதியும் அவரது குடும்பத்தினரும் எதுவும் செய்ய இயலவில்லை. கொள்ளைக்காரன் இரக்கமின்றி அவர்கள் அனைவரையும் கொன்றுவிட்டு அந்த வீட்டையும் அதிலிருந்த சொத்தையும் அபகரித்துக் கொண்டான். ஆயிரம்வகைப்பட்ட அபிமானங்களுடன் அகந்தை மனிதனுடைய இதயத்தில் வாழ்கிறது. ஒரு சப்தம் கேட்கிறது. சாதுக்களும், மகாத்மாக்களும், இறைவனின் திருநாமத்தை ஜபம் செய்கின்றனர். இதை மனிதன் கேட்கிறான். அவ்வளவுதான். மாபெரும் கொள்ளைக்காரனை இறைவன் மனிதனுடைய காதுகளின் வழியாக இதயத்தை அடைகிறான். அங்கு அகந்தையையும் காமம், குரோதம், லோபம், மோகம், மதமாச்சரியம் போன்ற அனைத்துவிதமான அபிமானங்கள் என்னும் குடும்ப உறுப்பினர்களையும் இறைவன் இரக்கமின்றி அழிக்கிறான். இறைவனே மனிதனின் இதயத்தை தன் வயப்படுத்திக் கொள்கிறான்.

மனத்தையும், அதன் புத்திசாலித்தனத்தையும் இறைவன் தன் வயப்படுத்திக் கொள்கிறான்.

## 59. இறையருளால் உயிர் தப்பிய எலி

ஒரு மலை அருவிக்கு அருகில் பாழடைந்த பங்களா ஒன்று இருந்தது. அந்த பங்களா முழுவதும் எலி வளைகள் இருந்தன. எலி வளைகளில் ஏராளமான எலிகள் இருந்தன. இரவில் அவை இரை தேடச் செல்லும். அருகிலிருந்த மளிகைக் கடையில் அவைகளுக்கு நிறைய உணவு கிடைத்தது. எலிகள் தாம் சேகரித்த உணவுப் பொருட்களை வளைகளுக்குள் வைத்துவிட்டு அமைதியாக இருந்தன. ஒரு நாள் மலை அருவி திடீரென்று பெருக்கெடுத்து ஓடியது. வளைகளில் வாழ்ந்த எலிகளை வெள்ளம் அடித்துச் சென்றது. அவை உடனே இறந்து தண்ணீரில் மிதந்தன. வெள்ளம் மீண்டும் பெருக்கெடுத்து வந்தபோது மற்றும் ஒரு எலியை அடித்துச் சென்றது. இந்த வெள்ளத்தில் மரக்கிளை ஒன்றும் அடித்துச் செல்லப்பட்டது. இந்த எலி தண்ணீரில் மிதந்து சென்ற அந்த மரத் துண்டின்மேல் அமர்ந்து கொண்டது. கொந் தளித்துச் செல்லும் நீரோட்டத்தில் எலி நிம்மதி யாகச் சென்று கொண்டிருந்தது. ஏனெனில் அது அமர்ந்திருந்த மரம் மிகப் பெரிய பருமனுள்ள மரக் கிளை. ஒரு மைலுக்கு அப்பால் அந்த மரக்கிளை கரையில் தள்ளப்பட்டது. அந்த எலியும் ஆற்றங் கரை மணல்மீது பத்திரமாக சேர்க்கப்பட்டது. மற்ற எலிகளெல்லாம் இறந்துபோயின. அதிர்ஷ்ட சாலியான இந்த ஒரு எலி மட்டும் இறையருளால் தப்பிப் பிழைத்தது.

மலை அருவியை சம்சார சாகரத்துக்கு ஒப்பிட லாம். அது விருப்பு வெறுப்புகள் என்னும் நீரோட் டம்தான். வேறு எதுவுமில்லை. பாழடைந்த

பங்களா என்பது பூமி என்னும் மண்மேடு. இதன் கூரை ஆகாயம். கடலால் இது பல பகுதிகளாக உடைக்கப்பட்டிருக்கிறது. இங்கும், அங்கும் ஓடும் நதிகள் இதை பிரித்திருக்கின்றன. மலைகளிருக்கும் இடத்தில் அது உயர்ந்திருக்கிறது. சமுத்திரங்கள் இருக்கும் இடத்தில் அது தாழ்ந்திருக்கிறது. இந்த பாழடைந்த வீட்டில் நகரங்கள், கிராமங்கள், மாநகரங்கள் என்னும் எலி வளைகளில் மனிதர்கள் வாழ்கிறார்கள். விருப்பு, வெறுப்பு என்னும் வெள்ளம் பாய்ந்தோடி வருவதைப் பற்றிய உணர்வே இல்லாமல் மக்கள் இந்த உலகிலுள்ள பொருட்களை பேராசையுடன் சேகரிப்பதில் ஈடுபடுகிறார்கள். அவர்கள் இந்த வெள்ளத்தில் சிக்கிக் கொண்டுள்ளனர். அவர்களை விருப்பு, வெறுப்பு என்னும் வெள்ளம் பயங்கரமாக அடித்துச் செல்லுகிறது. அவர்கள் இறந்துவிடுகிறார்கள். ஆனால் அதே வெள்ளத்தில் பக்தி என்னும் மரத்துண்டும் மிதந்து வருகிறது. அது வெள்ளத்துடன் சென்று கொண்டிருந்தாலும், அது விருப்பு என்பதாக இருந்தாலும் ஒரு வகையில் நல்லது. ஏனெனில் அது இறைவனிடத்தில் கொள்ளப்படுகிற தீவிர விருப்பமாகும். பக்தி என்னும் இந்த மரத் துண்டின்மீது அருட்பேறு பெற்ற ஆத்மா அமர்ந்து கொள்கிறது. வெள்ளம் அவனை விழுங்குவதில்லை. விருப்பு, வெறுப்பு என்னும் வெள்ளத்தால் அவன் பாதிக்கப்படுவதில்லை. நாளடைவில் அமர வாழ்வு என்னும் கரைக்கு அவன் அழைத்துச் செல்லப் படுகிறான்.

## 60. கோடீஸ்வரனும், மூன்று பிச்சைக்காரர்களும்.

ஒரு சமயம் நற்பண்பு கொண்ட ஒரு கோடீஸ்வரர் வாழ்ந்து வந்தார். மூன்று பிச்சைக்காரர்கள்

அவரை அணுகி உதவி பெற விரும்பினர். முதல் பிச்சைக்காரன் அவரை அணுகி பின்வருமாறு கூறினான்: ''பிரபு! எனக்கு ஐந்து ரூபாய் வேண்டும். தயவு செய்து கொடுங்கள்''. இந்த மனிதனின் அகம்பாவத்தைக் கண்டு கோடீஸ்வரர் அதிர்ச்சி அடைந்தார். ''என்ன! நான் உனக்குக் கடன்பட்டிருப்பதுபோல் அல்லவா நீ என்னிட மிருந்து ஐந்து ரூபாய் கேட்கிறாய்! உனக்கு என்ன துணிச்சல்! ஒரு பிச்சைக்காரனுக்கு ஐந்து ரூபாய் என்றால் எப்படிக் கொடுக்க முடியும்? இதோ இந்த இரண்டு ரூபாயை எடுத்துக்கொண்டு இங்கிருந்து சென்றுவிடு'' என்று சொல்லி இரண்டு ரூபாய் கொடுத்தார். அந்தப் பிச்சைக்காரன் அதை வாங்கிக்கொண்டு அங்கிருந்து நகன்றான்.

அடுத்த பிச்சைக்காரன் அங்குவந்து கோடீஸ்வரரிடம் பின்வருமாறு கூறினான்: ''மகராஜ் கடந்த பத்து நாட்களாக நான் ஒருவேளைகூட உணவு உட்கொள்ளவில்லை. தயவு செய்து எனக்கு உதவு செய்யுங்கள்.'' ''உனக்கு எவ்வளவு வேண்டும்?'' என்று அவர் கேட்டார். ''நீங்கள் கொடுப்பதைப் பெற்றுக்கொள்ளுகிறேன்'' என்றான் பிச்சைக்காரன். ''இந்தப் பத்து ரூபாயை வைத்துக் கொள். நீ மூன்று நாட்கள் திருப்தியாக உணவு உட்கொள்ளலாம்'' என்றார் கோடீஸ்வரர். பிச்சைக்காரன் பத்து ரூபாயை பெற்றுக்கொண்டு அங்கிருந்து அகன்றான்.

பிறகு மூன்றாவது பிச்சைக்காரன் வந்தான். அவன் பின்வருமாறு கூறினான்; ''மகராஜ், உங்களின் உயர்ந்த குணத்தைப்பற்றி நான் கேள்விப் பட்டிருக்கிறேன். ஆகவே உங்களை தரிசிக்க வந்தேன். அறவழியில் வாழ்கிறவர்கள், பூமியில் வாழும் மனித தெய்வங்கள்.''

கோடீஸ்வரர் அந்தப் பிச்சைக்காரனைப் பார்த்து, ''தயவு செய்து உட்காருங்கள். நீங்கள் மிகவும் களைப்பாக இருக்கிறீர்கள். தயவு செய்து உணவு உட்கொள்ளுங்கள்'' என்று சொல்லி, உணவு கொடுத்தார். மேலும் சொன்னார்; ''இப்போது நான் என்ன செய்யவேண்டும் என்று சொல்லுங்கள்''. பிச்சைக்காரர் பதிலளித்தார்: ''நீங்கள் குணசீலர் என்று கேள்விப்பட்டு உங்களை தரிசிக்க வந்தேன். நீங்கள் ஏற்கனவே அறுசுவை உணவு கொடுத்து விட்டீர் கள். உங்களிடமிருந்து எனக்கு வேறு என்ன வேண்டும்? தாங்கள் என்மீது அசாதாரணமாக அன்பு செலுத்தியிருக்கிறீர்கள். கடவுள் உங்களுக்கு அருள்புரியட்டும்''. ஆனால் கோடீஸ்வரர் அவரை விடுவதாக இல்லை. இந்தப் பிச்சைக்காரரின் பண்பு அவரைக் கவர்ந்திழுத்தது. அந்தப் பிச்சைக்காரரை தன்னுடன் இருக்குமாறு கேட்டுக்கொண்டார். அவர் தனது காம்பவுண்டில் இந்தப் பிச்சைக் காரனுக்கு ஒரு வீடு கட்டிக் கொடுத்தார். அவனது வாழ்நாளின் இறுதிவரை அவனைத் தன்னுடன் வைத்துக்கொண்டு அன்புடன் உபசரித்தார்.

கடவுள் கோடீஸ்வரனைப் போன்றவர், மூன்று வகையான மக்கள் மூன்று வகையான ஆசை களுடனும் பிரார்த்தனையுடனும் கடவுளை நோக்கி வருகின்றனர். ஒருவன் பேராசைக்காரன், அகந் தையும், அகம்பாவமும் உடையவன். அவன் உலகியல் இன்பந்தரும் பொருட்களைத் தமக்கு அளிக்குமாறு இறைவனை வேண்டுகிறான். இவனுடைய ஆசைகள் தரக்குறைவானவையாக இருந்தாலும் இறைவனை நாடி அதைப்பூர்த்தி செய்து கொள்ளவேண்டும் என்ற எண்ணம் இருந்தது. அது நல்லகுணம். அவன் விரும்பிய பொருட்களில் ஒரு பகுதி அவனுக்குக் கிடைக்க

இறைவன் அருள்புரிகிறார். (இரண்டு ரூபாய் வாங்கிய பிச்சைக்காரன் ஒரேநாளில் அதனை செலவு செய்து விடுவதுபோல இந்தப் பொருட்களும் விரைவில் தீர்ந்துபோகின்றன.) இரண்டாவது வகைப்பட்ட மனிதன் இந்த உலகில் தான் படும் துன்பங்களைப் போக்குமாறு இறைவனிடம் வேண்டுகிறான். முதல் நபரைவிட இந்த மனிதன் சற்று தரத்தில் உயர்ந்து நிற்கிறான். இறைவன் தருவதைப் பெற்றுக்கொள்ள அவன் ஆயத்தமாக இருக்கிறான். 'எனக்கு இது வேண்டும்' என்று எதனையும் அவன் கேட்கவில்லை. இறைவன் அவனுடைய துன்பத்தை முழுமையாகப் போக்குகிறார். அவனுக்கு நிறைய செல்வத்தையும் வளத்தையும் தருகிறார். மூன்றாவது நபர் ஒரு ஞானி. அவருக்கு இறைவனின் இயல்பு தெரியும். ''இறைவா, நீ சச்சிதானந்தப் பரம்பொருள். நீ எங்கும் இருக்கிறாய். அனைத்தையும் அறிந்திருக்கிறாய். பேரானந்தமயமாக இருக்கிறாய்'' என்று கூறி இறைவனைப் பிரார்த்தனை செய்கிறார். அவருக்கு என்ன வேண்டும்? எதுவும் தேவையில்லை. ஆனால் இறைவன் அவரது பற்றற்ற தன்மையையும் ஆத்ம சமர்ப்பணத்தையும் அறிந்து மகிழ்ச்சி அடைகிறான். தான் உண்ணும் உணவையே இந்த ஞானிக்கும் தருகிறான். இந்த ஞானி ஆழ்ந்த பக்தியுடன் தன்னை வணங்க அருள் புரிகிறான். இதற்கும் மேலாக அந்த பக்தன் வைகுந்தம் என்னும் தன் வீட்டிலேயே வாழ அருள் புரிகிறான். அதன் பிறகு இந்த பரமபக்தரான ஞானி முக்தி பெற்று இறைவன் இருக்கும் இடத்திலேயே இருந்து ஆனந்தம் அடைகிறார்.

## 61 விறகு வெட்டியும் யமனும்

ஒரு நாள், ஜனவரி மாத வெயிலில் ஒரு விறகு வெட்டி நிறைய விறகை வெட்டி ஒரு கட்டாகக்

கட்டி தலையில் சுமந்துகொண்டு வந்தான். அவனுக்கு களைப்பு ஏற்பட்டது. வெயிலில் நடக்க முடிய வில்லை. கால்களை பூமியில் வைத்து நடக்க முடிய வில்லை. வெயில் அவ்வளவு கடுமையாக இருந்தது.

களைப்பு அதிகமாகிவிட்டது. ஒரு இடத்தில் விறகுக் கட்டை தூக்கி எறிந்தான். "எமதர்ம ராஜா, உடனே வா, என்னை அழைத்துக்கொண்டு போய்விடு. இந்தத் துன்பத்திலிருந்து எனக்கு விடுதலை கொடு" என்று அவன் வேண்டினான். மரண தேவனாகிய யமன் உடனே அங்கு வந்தார். இந்த உலகில் அவன் படும் துன்பத்திலிருந்து அவனுக்கு விடுதலை அளிக்க அவர் விரைந்து வந்தார்.

"நான் வந்துவிட்டேன், என்னுடன் வரத் தயாராக இரு" என்றார் யமன். "இல்லை, இல்லை, உன்னை அதற்காக அழைக்கவில்லை. இந்த விறகுக் கட்டை என் தலையில் தூக்கிவைக்கவே உன்னை அழைத்தேன். இந்த விறகுக் கட்டை என் தலையில் தூக்கிவை" என்று விறகு வெட்டி கூறினான். வயதான அந்த விறகுவெட்டி தலையில் விறகுக் கட்டைச் சுமந்துகொண்டு மீண்டும் தன் பயணத்தைத் தொடர்ந்தான்.

உலக மக்களும் பொதுவாக இறைவனிடம் பக்தி செலுத்துகின்றனர். உலகில் தாம் அனுபவிக்கும் துன்பங்களிலிருந்து தம்மை விடுவிக்குமாறு பிரார்த்தனை செய்கின்றனர். ஆனால் அவர்களுடைய பக்தி அரைகுறை பக்தி. மனப்பூர்வமாக அவர்கள் பிரார்த்தனை செய்வதில்லை. துன்பங்களிலிருந்து விடுபடுவதைக் காட்டிலும் துன்பங்களைத் தொடரவே அவர்கள் விரும்புகின்றனர்.

ஆன்மீகத் துறையில் வேகமான வளர்ச்சிபெற ஒரு சாதகன் இறைவனைக்காண தீவிர ஆவல் கொள்ள வேண்டும். உங்கள் தலையில் தீப்பிடித்துக் கொண்டால் அதை அணைக்க எவ்வளவு முயற்சிகள் மேற்கொள்ளுவீர்கள்? குரு அல்லது கடவுளைக் காணவும் முக்தி பெறவும் நீங்கள் அந்த அளவுக்கு விரைவாகச் செயல்பட வேண்டும். யார் இறைவனைக் காண முடியும்? இறைவன் இன்றி ஒரு வினாடி கூட வாழ முடியாத நிலை எவரிடத்தில் உள்ளதோ அவர்தான் இறைவனைக் காண முடியும்.

## 62. புத்திசாலிப் பையன்

ஒரு பக்தர் ஒரு ஆலயத்துக்கு வெளியே இறைவனின் பிரசாதத்தை வினியோகித்துக்-கொண்டிருந்தார். அவரைச்சுற்றி நூற்றுக்கணக்கானவர்கள் திரண்டு நின்றனர். அங்கு கூச்சலும் குழப்பமுமாக இருந்தது. பிரசாதத்தை வினியோகிப்பது இயலாததாக இருந்தது. ஒரு சிறுவன் இந்தக் கூட்டத்தைக் கண்டான். தன் வீட்டுக்குள் சென்று ஒரு நீண்ட குச்சியை எடுத்து வந்தான். அதன் நுனியில் ஒரு சிறு கூடையைக் கட்டினான். கூட்டத்திலிருந்து சிறிது தொலைவில் நின்றிருந்த அந்த சிறுவன் பிரசாதம் வினியோகித்துக்கொண்டிருந்த பக்தருக்கு அருகில் கூடைகட்டப்பட்டிருந்த குச்சியை நீட்டினான். பக்தர் சிறுவனின் புத்திசாலித்தனத்தைக் கண்டு மகிழ்ச்சி அடைந்தார். உடனே அவனுக்கு நிறையப் பிரசாதம் கொடுத்தார். கூட்டத்தில் இருந்தவர்கள் பக்தருக்கு அருகில் சென்று பிரசாதம் வாங்க முடியாமல் திண்டாடிக்கொண்டிருந்தனர்!

மனித சமுதாயத்தின்மீது பொழிவதற்காக இறைவன் தன்னிடத்தில் அளவிலா அருட் சக்தியை

வைத்திருக்கிறான். ஆனால் மக்கள் முன்னே செல்ல இங்கும் அங்கும் ஓடுகின்றனர். ஆலயம் மற்றும் ஆஸ்ரமத்தைச் சுற்றி திரளாகக் கூடுகிற சாதகர்களும், பக்தர்களும் பதவிக்கும், அந்தஸ்துக்கும் ஆசைப்படுகின்றனர்! இதற்கிடையில் குழந்தை போன்ற சுபாவம் உடைய ஒரு மனிதன் மிகச் சிறப்பான விவேகத்துடன் தியானம் என்னும் குச்சியையும் பக்தி என்னும் கூடையையும் துணையாகக் கொண்டு இறைவனை அணுகுகிறான். பைத்தியம் பிடித்தவர்களைப்போலக் கூடியிருக்கிற மக்களிடமிருந்து அவன் விலகி நிற்கிறான். முதலில் அவன் இறைவனின் திருவடித் தாமரைகளை அடைகிறான். தியானம் மற்றும் பக்தியின்மூலம் இந்த நிலையை அடைகிறான். அவனுடைய விவேகத்தையும், கூட்டத்திலிருந்து விலகி நிற்பதையும், அவர்களை முந்திக்கொண்டு முதலில் நிற்பதையும் கண்டு இறைவன் மகிழ்ச்சி அடைகிறான். அவனுடைய தியானம், பக்தி இவற்றை அறிந்து மகிழ்ந்து அவனுக்கு விரைவாக அருள் புரிகிறார்.

## 63. கோடீஸ்வரர் செய்த தானம்

ஒரு கோடீஸ்வரர் ஒரு சிறு நகரம் ஒன்றில் வாழ்ந்து வந்தார். அவர் தாராள மனம் உடையவர். தன்னை நாடிவந்தவர்களுக்கு 'இல்லை' என்று சொல்லாது வாரி வழங்கிய வள்ளலாகத் திகழ்ந்த மகாபாரதத்தின் கர்ணனுடன் இந்த கோடீஸ்வரரை ஒப்பிட்டு மக்கள் பேசுவர். ஒருநாள் ஒரு ஏழை பிராமணன் அந்த கோடீஸ்வரரை அணுகி தனக்கு உதவுமாறு கேட்டார். அந்த அந்தணர் தனது துன்பங்களை எடுத்துச் சொல்லி உதவி செய்யக் கோரினார். ''என்னால் இயன்ற உதவியை நிச்சயமாகச் செய்கிறேன்'' என்று சொல்லி அந்த பணக்காரர் அந்தணரை அனுப்பிவைத்தார்.

அதன் பிறகு பணக்காரர் அந்தணர் இல்லத்துக்கு நிறைய தங்கம், அரிசி, மளிகைச் சாமான்கள், பட்டு ஆடைகள், மரச் சாமான்கள் ஆகியவற்றை அனுப்பிவைத்தார். ஏழை அந்தணர் பெரிதும் மகிழ்ச்சி அடைந்தார். பணக்காரர் இந்த அளவுக்கு உதவி செய்வார் என அவர் எதிர்பார்க்கவில்லை. அவர் எதிர்பார்த்ததெல்லாம் ஐந்து ரூபாய்தான். ஆனால் அவருக்கு ஆயிரம் ரூபாய்க்கு மேலான மதிப்புள்ள பொருட்கள் கிடைத்துள்ளன. இந்த அன்பளிப்பு பணக்காரருக்கு ஒரு பொருட்டல்ல. தான் அந்தணர் திருப்தி அடைகிற வகையில் தானம் செய்ய இயலாது என பணக்காரர் எண்ணினார். ஆதலால் அந்தணரிடம் நேரில் இந்தப் பொருட்களைக் கொடுக்காமல் தனது ஆட்கள்மூலம் அந்தணர் இல்லத்துக்கு அவற்றை அனுப்பி வைத்தார். அந்தணரோ இருமடங்காக மகிழ்ச்சி அடைந்தார். ''நான் இந்தப் பொருட்களைச் சுமந்துவரும் சிரமத்தைக்கூட பணக்காரர் எனக்குத் தரவில்லை'' என்று அந்தணர் நன்றியுடன் கூறினார். கோடீஸ்வரரிடம் இவர் வேலைக்கு அமர்ந்து தனது வாழ்நாள் முழுவதும் பணியாற்றினார்.

கோடீஸ்வரர் போன்றவர் கடவுள். ஏழை அந்தணர் போன்றவன் பக்தன். அளவிலா ஆசைகளும், ஏக்கங்களும் தொல்லை தரும் நிலையில், சாதகன் இறைவனின் பாதகமலங்களில் சரணடைந்து இவற்றிலிருந்து தன்னை விடுவிக்குமாறு பிரார்த்திக்கின்றான். பிரார்த்தனை மற்றும் தியானத்தின்மூலம் அவன் இறைவனை அணுகுகிறான்.

இறைவன் தனக்குள் இருப்பதை அவன் உணருகிறான். இறைவன் அவனுக்கு அருள் புரிய உறுதி

யளிக்கிறான். இறையருள் சாதகனின் தீய குணங் களையும், வாசனைகளையும், போக்கி, சாதகனின் அந்தக்கரணத்தில் பொன்னான நற்பண்புகளையும், அறிவு என்னும் உணவு தானியங்களையும், வைராக் கியம் என்னும் ஆடைகளையும் சாதன சதுஷ்டயம் என்ற மற்ற பொருட்களையும், சுகமாக அமர்ந்து ஓய்வெடுக்க சோபா, நாற்காலிபோன்ற மரச் சாமான்கள் என்னும் தியானத்தையும், சமாதி நிலை யையும் பூரணமாக நிரப்பிவைக்கிறது. இறை வனுக்கு இவை ஒரு பொருட்டல்ல. ஏனெனில் இறைவன் விரும்பினால் பக்தனுக்கு இந்திர பதவியும் பிரம்ம பதவியும் தரமுடியும். ஆனால் சாதகனைப் பொறுத்தவரையில் இவை கிடைத்தற்கரியவை. சாதகன் தன்னுடைய இருப்பிடத்துக்கு வந்து சேரும்வரை காத்திராமல் தனது அன்பளிப்பு அனைத்தையும் சாதகன் இருக்கும் இடமாகிய இந்த உலகத்துக்கே அனுப்பி வைத்திருப்பது குறித்து சாதகன் உளம் பூரித்துப்போகிறான். அதன் பிறகு சாதகன் பரம பக்தியுடன் இறைவனுக்குத் தொண்டு செய்கிறான். இறைவனின் பெருமையினையும் அவனது திருவிளையாடல்களையும் பிரசாரம் செய்யத் தன்னை அர்ப்பணித்துக்கொள்ளுகிறான்.

---

## 7-வது அத்தியாயம்

# மனத்தை வெற்றிகொள்ளுதல்

### 64. எறும்புகளும் சர்க்கரை மலையும்

உப்புக் குன்று ஒன்றில் ஆயிரக்கணக்கான எறும்புகள் வாழ்ந்து வந்தன. ஒரு நாள் ஒரு எறும்பு அருகிலே ஒரு சர்க்கரை மலை இருப்பதாகக் கூறியது. இதனைக் கேள்விப்பட்ட சில எறும்புகள் சர்க்கரையை வயிறுர உண்பதற்காக அந்தமலைக்குச் சென்றனர். அவைகளிற் பல அந்த மலையில் எங்கும் உப்பாக இருக்கக் கண்டன. காரணம், உப்புக் குன்றிலிருந்து வந்த அவை தன் வாயிலிருந்த உப்பை அகற்றுமலேயே சர்க்கரையை ருசி பார்த்ததுதான். சில எறும்புகள் வாயைத் துடைத்துவிட்டு சர்க்கரையை ருசித்துத் தின்றன. சர்க்கரை மலை முழுவதும் தன் வாய்க்குள் இருப்பது போல அவை எண்ணின.

உலகின் சாதாரண மனிதர்களின் நிலையும் இப்படித்தான் இருக்கிறது. அவர்களிடம் பேரானந்தம் மலையளவு இருக்கிறது என்று சொன்னுலும், அவர்கள் அந்த மலையின் மேலேயே நடந்து செல்லுகிருர்கள் என்று சொன்னுலும் அவர்களால் பேரானந்தத்தை உணர முடியவில்லை. ஏனெனில் அவர்களைப் பிடித்துக்கொண்டிருக்கிற பந்தம், சுய நலம் ஆகியவற்றிலிருந்து அவர்கள் விடுபட்டு வெளி வர அவர்கள் தயக்கம் காட்டுகின்றனர்.

பந்தத்துக்கும் முக்திக்கும் மனமே காரணம், பந்தம் என்னும் உப்புத்துகளை அகற்றுதவரை ஒருவர் உலகம் முழுவதும் தேடினுலும் அமைதி கிடைக்காது. சிலர் பற்றற்ற தன்மையைப் பெற ஓரளவுக்கு முயற்சிக்கின்றனர். இதன் மூலம் இவர்கள் ஓரளவுக்கு பேரின்பத்தை அனுபவிக்

கின்றனர். பேரானந்தப் பெருவாழ்வில் மூழ்கி பேரானந்த மயமாக ஆகிவிடுகிறவர்கள் அருட்பேறு பெற்றவர்கள். அனைத்து ஆசைகளையும் பந்தங்களையும் துறந்து விட்டவர்களுக்கு இந்தப் பேரானந்தப் பெருவாழ்வு கிட்டுகிறது.

## 65. போலீஸ்காரரையும் திருடனையும் நிறுத்தி வைத்த பெண்

ஊரறிந்த கொள்ளைக்காரன் ஒருவனை ஒரு போலீஸ்காரர் கிட்டத்தட்ட பிடித்துவிட்டார். தான் திருடிய பொருளைக் கையில் எடுத்துக்கொண்டு திருடன் ஓடினான். போலீஸ்காரரும் அவனைத் துரத்திக்கொண்டு வெகுவேகமாக ஓடினார். அவர்கள் இருவரும் ஓரிரு பர்லாங் தூரம் ஓடியிருப்பார்கள். சாலையில் நடந்து சென்றுகொண்டிருந்த ஒரு அழகிய பெண்ணை இருவரும் பார்த்தனர். போலீஸ்காரர் திருடனுக்கு மிக அருகில் வந்து விட்டார். ஆனால் அந்த அழகியைக்கண்டதும் அவர் சிலையைப்போல நின்றுவிட்டார். அந்தப் பெண்ணின் அழகில் மயங்கிய திருடனும் போலீஸ்காரருக்கு முன்பாக சற்றுத் தொலைவில் அசையாமல் நின்று விட்டான். அந்த அழகி அவர்கள் இருவரையும் ஒருமுறை பார்த்துவிட்டு அங்கிருந்து அகன்றாள். அவள் அங்கிருந்து சென்றதும்தான் போலீஸ் காரருக்கு சுயநினைவு வந்தது. தான் திருடனை விரட்டிக்கொண்டு வந்ததை அவர் அப்பொழுது தான் உணர்ந்தார். தன்னை போலீஸ்கார்ரர் விரட்டி வருகிறார் என்ற உணர்வு திருடனுக்கு அப்போது தான் வந்தது. அவர்கள் இருவரும் மீண்டும் ஓடத் துவங்கினர். போலீஸ்காரர் திருடனை விரட்டிக் கொண்டு ஓடினார். ஆனால் துரத்தி ஓடியதில் முன்பு இருந்த வேகம் இப்போது இல்லை. திருடன் தப்பி விட்டான்.

தூய்மையற்ற, கீழான இயல்பு உடைய மனம், திருடனைப் போன்றது, உயர்ந்த இயல்பு உடைய சத்துவகுணம் நிறைந்த மனம் போலீஸ்காரரைப் போன்றது. தன்னை அல்லற்படுத்தும் தூய்மையற்ற வாசனைகளை வேருடன் களைந்தெறிய சாதகன் தீர்மானம் செய்கிறான். உயரிய சத்துவகுணம் நிறைந்த மனம் பாவச் செயலில் ஆழ்த்தும் வாசனைகளை வெளியேற்றத் துவங்குகிறது. துரத்தும் பணி தொடங்குகிறது. சிறிது நேரத்தில் புலனுக்கு இன்பந்தரும் பொருள் ஒன்று சாதகனைக் கவர்ந்து இழுக்கிறது. மனப்போராட்டம் நின்றுவிடுகிறது. சத்துவகுணம் கொண்ட மனம் செயலற்று நிற்கிறது. உயரிய மனம் தனது கடமையை மறக்கிறது. கீழான இயல்புடைய மனம் ஆபத்தை அலட்சியப்படுத்துகிறது. இந்த ஆசை அலை ஓய்ந்த பின் மீண்டும் போராட்டம் தொடங்குகிறது, ஆனால் அதன் வேகம் குறைகிறது. சத்துவகுணம் கொண்ட மனத்தின் செயலற்ற தன்மையால் தீய மனம் தனது பலத்தை அதிகரித்துக்கொள்ளுகிறது. பிறகு அதனை அடக்குவது மென்மேலும் கஷ்டமானதாக ஆகிவிடுகிறது.

சாதகனே! எப்போதும் விழிப்புடன் இரு. கீழான இயல்பு கொண்ட மனம் என்னும் திருடனைப்பிடித்து வெளியேற்று.

## 66. ஒரு ஏழையும் அவனுக்குக் கிடைத்த புதையலும்

ஒரு கிராமத்தில் ஒரு ஏழை வாழ்ந்து வந்தான். அவன் பணக்காரனாகவேண்டும் என்பதற்காக ஆசைப்பட்டான். இறைவன் ஒரு சோதிடர்போல வந்து அந்த ஏழை மனிதனைப் பார்த்து ''மனிதா,

உனது வீட்டுக்குப் பின்னால் சுவற்றுக்கு அருகில் ஒரு குழிதோண்டு, அங்கே உனக்கு ஒரு புதையல் கிடைக்கும்'' என்று சொன்னார், ஏழை அப்படியே குழிதோண்டினான். புதையலும் கிடைத்தது, அவன் பெருமகிழ்ச்சி அடைந்தான். நிறையச் செல்வம் கிடைத்ததும் அதனைப் பாதுகாத்துப் பயன் படுத்தும் அக்கறை அவனுக்கு இல்லை. அவனுடைய அஜாக்கிரதையைப் புரிந்து கொண்ட ஒரு திருடன் அவன் வீட்டுக்குள் புகுந்து புதையலில் கிடைத்த செல்வத்தைக் கொள்ளையடித்துக்கொண்டு ஓடி விட்டான். தனது சொத்து திருடுபோனதை அறிந்த ஏழை அதிர்ச்சியுற்றான். அவன் அலறி அடித்துக்கொண்டு புதையலைத் தேடிப் பெற அங்கு மிங்கும் ஓடினான். இதற்கிடையில் அதே சோதிடர் திருடன் புதையலைத் திருடிக்கொண்டு ஓடுவதைக் கண்டு அதனைப் பறித்து ஏழையிடம் ஒப்படைத் தார். ஏழை பெருமகிழச்சி அடைந்தான். அது முதல் அவன் பூரணவிழிப்புணர்வுடன் இருந்தான். புதையல் மூலம் கிடைத்த சொத்தைப் பாதுகாத் தான். அத்துடன் மேலும் சொத்தைச் சேர்க்க முயற்சி செய்தான்.

இதுபோல, ஒரு நல்ல மனிதன் இறை அனுபவம் பெற விரும்புகிறான். அவன் தீவிர ஆவல் கொண்ட டிருந்ததால் இறைவன் அவன்மீது மிகச் சிறப்பாகக் கருணையும், இரக்கமும் கொண்டு அவனுக்கு ஒரு குருநாதரை அனுப்பிவைக்கிறார். அவர் அவனது இதயத்துக்குள் இறைவன் என்னும் உன்னதப் பேரானந்தம் உள்ளது என உணர்த்துகிறார். நல்ல மனிதன் சாதனை புரிந்து தனது முயற்சியில் ஓரளவு வெற்றி பெறுகிறான். முயற்சியில் ஓரளவுக்கு வெற்றி கண்டதும் அவனது முயற்சியில் தளர்ச்சி ஏற்பட்டது. மாயை அவனை ஆட்கொண்டு அவனது ஆன்மீக முன்னேற்றத்தை கொள்ளை

யடித்துச் செல்லுகிறது. சாதனை புரிவதற்கு முன்பு தான் இருந்த நிலைக்கு மனிதன் தள்ளப்படு கிறான். நிகழ்ந்ததை திடீரென்று அறிந்து உணர்ந்து தனது விதியை நினைத்து வருந்துகிறான். மீண்டும் அவனிடம் குரு வருகிறார். சாதனையின்மூலம் முன்பு அவன் பெற்ற ஆன்மீக அனுபவங்களை மீண்டும் அவன் பெற அருள் புரிகிறார். அவன் ஆன்மீக சாதனைக்கான முயற்சியில் தளர்ச்சி அடையக்கூடாது என்றும் அறிவுறுத்துகிறார். அந்த நல்ல மனிதன் அன்றிலிருந்து எப்போதும் விழிப்புடன் இருந்தான். அவன் பெற்ற ஆன்மீக அனுபவம் என்னும் புதையலை கவனமாகப் பாது காத்து வந்தான்; மேலும் ஒவ்வொரு நாளும் சொத்துக்களைச் சேர்த்தான். விழிப்பின்மையால் ஏற்பட்ட பெரும் இழப்பை அவன் உணர்ந்து மீண்டும் அவ்வாறு நிகழாமல் பார்த்துக்கொள்ளு வதில் மிகவும் கவனமாக இருக்கிறான்.

## 67. வயலில் முளைத்த வேண்டாத செடிகள்

ஒரு மனிதன் வயலில் நெல் பயிரிட்டிருந்தான். ஒருவாரம் கழித்து வயலில் நெற்பயிரும் விளைந் திருந்தது; அத்துடன் வேண்டாத சில செடி கொடிகளும் முளைத்திருந்தன. இதுகண்டு அந்த மனிதன் ஆச்சரியப்பட்டான். ''இந்தச் செடிகளுக்கு நான் விதைபோடவில்லையே'' என்று சொன்னான். இந்தச் செடிகள் பூமியில் வேரூன்றி இருக்கிறது. விவசாயி பயிருக்குத் தண்ணீர் ஊற்றியபோது அந்தத் தண்ணீர் இந்தச் செடி களுக்கும் பாய்ந்தது. ஆதலால் இந்தச் செடிகளும் ஏராளமாக வளர்ந்தன. விவசாயி இந்தச் செடிகளைப் பிடுங்கி எறிந்தான். அவை மீண்டும் வளர்ந்தன. அவன் இந்தச் செடிகளை வேருடன் பிடுங்கி எறிந்தான். அதே நேரத்தில் நெற்பயிரை

கவனமாக வளர்த்து வந்தான். இப்போது நெற் பயிர் வளர்ந்தது. தேவையற்ற செடிகள் வேருடன் களை எடுக்கப்பட்டதால் அவற்றின் வளர்ச்சிக்கு முற்றுப்புள்ளி வைக்கப்பட்டது. நெல் ஏராளமாக விளைந்தது. அறுவடைக்குப்பின் விவசாயி பெரு மகிழ்ச்சி அடைந்தான்.

இதுபோல, ஒரு சாதகன் ஜபம் செய்வதிலும், தியானம் செய்வதிலும் ஈடுபடுகிறான். ஆனால் அவன் வியப்பு அடையும் வகையில் தீய எண்ணங் கள் அவன் மனத்தைச் சூழ்ந்து கொள்ளுகின்றன. ''நான் தீய எண்ணங்கள்—வடிவங்கள் குறித்து தியானம் செய்யவில்லையே, அவை எப்படி என் மனத்தில் முளைக்கின்றன?'' என்று அவன் ஆச்சரியப்படுகிறான். ஆனால் அவை மனத்தின் அடித்தளத்தில் ஆழப்பதிந்து இருக்கின்றன. நாளடைவில், செயல்கள் இயல்பாக நிகழும்போது இவை வளரத் துவங்குகின்றன. அவன் தீய எண்ணங்களைக் கிள்ளி எறிகிறான். இனி அனைத்துத் தீமைகளிலிருந்தும் விடுபட்டு விட்டதாக அவன் எண்ணுகிறான். சிறிது காலம் சாதனை சீராக நடைபெற்று வருகிறது. இப்போது தீய எண்ணங்கள் மீண்டும் தலையெடுக்கின்றன. அவன் மேலும் ஆச்சரியமடைகிறான். சிறிதளவு கவனக் குறைவு இருந்தாலும் அது நற்பண்புகள் என்னும் பயிரை முழுமையாக அழித்துவிடும். சாதகன் தொடர்ந்து விழிப்புடன் இருந்தான். தீய எண்ணங்கள் முற்றிலுமாக அகற்றப்பட்டன. தக்க சமயத்தில் நற்பண்புகள் உறுதியாக வளர்கின்றன. அவற்றை இப்போது அழிக்க முடியாது. களை எடுக்கப்பட்ட தீய எண்ணங்கள் முழுமையாக மறைந்துவிடுகின்றன. சாதகன் சித்தி அடைந்து சமாதி நிலையில் அமர்ந்து ஆனந்தம் அடைகிறான்.

## 68. மோசடி செய்த அஞ்சலக அதிகாரி

நகரத்தில் வாழ்கிற தன்னுடைய மகனுக்கு ஒரு கிராமவாசி ஒரு கடிதம் எழுதினர், ''என்னுடைய செலவுக்காக மாதந்தோறும் 10 ரூபாய் அனுப்பு'' என்று அக்கடிதத்தில் அவர் எழுதியிருந்தார். இதில் தனக்கு நல்லதொரு வாய்ப்பு இருப்பதை உணர்ந்த கிராம அஞ்சலக அதிகாரி அந்தக் கடிதத்தில் 10க்கு அருகில் ஒரு 0ஐச் சேர்த்து அந்த எண்ணை நூருக ஆக்கினர். கிராமவாசிக்கு அவரது மகன் மாதந்தோறும் 100 ரூபாய் அனுப்பிக் கொண்டிருந்தான். அஞ்சலக அதிகாரி 90 ரூபாயை தான் எடுத்துக்கொண்டு 10 ரூபாயை கிராமவாசிக்குக் கொடுத்து வந்தார்.

அஞ்சலக அதிகாரிக்கு ஆசை அதிகமாயிற்று. அவர் இன்னும் அதிகமாகப் பணம் அனுப்பச் சொல்லி மகனுக்கு எழுதுமாறு கிராமவாசியைத் தூண்டினர். கிராமவாசியும் அப்படியே செய்தார். ''இனிமேல் 20 ரூபாய் அனுப்பு'' என்று மகனுக்கு எழுதினர். அஞ்சலக அதிகாரி அந்த எண்ணுடனும் ஒரு 0ஐச் சேர்த்து அதனை 200 ஆக ஆக்கினர். அவரது வருமானம் இரு மடங்கு அதிகரித்தது.

ஒரு நாள் அஞ்சலக இன்ஸ்பெக்டர் ஒருவர் திடீரென்று அந்த கிராம அஞ்சலகத்துக்கு வந்து சோதனை செய்தார். தபால் அதிகாரி நன்கு அனுபவிப்பதைக் கண்டு பிடித்தார். அவர் உள்ளூர்வாசிகளிடம் இது பற்றி விசாரணை செய்தார். சந்தேகம் எழுந்தது.

அவர் கிராமவாசியான முதியவரைப் பார்த்து, ''உங்கள் தேவை என்ன?'' என்று கேட்டார்.

''எனக்கு மாதம் 20 ரூபாய் தேவை'' என்று அவர் பதிலளித்தார்.

''உங்கள் தந்தை தனக்கு மாதம் 20 ரூபாய் போதும் என்கிறார். நீங்கள் ஏன் அவருக்கு மாதந்தோறும் 200 ரூபாய் அனுப்புகிறீர்கள்?'' என்று இன்ஸ்பெக்டர் மகனைப் பார்த்து கேட்டார்.

தபால் அதிகாரியின் திருட்டுத்தனம் விசாரணை யின் மூலம் வெளிப்பட்டது. அவர் பதவி நீக்கம் செய்யப்பட்டார். கடுமையாகத் தண்டிக்கப் பட்டார்; வயதான கிராமவாசி தனது வருமானத்தை இழக்காதிருக்க வகை செய்யப் பட்டது.

உடலைப் பாதுகாக்க பிராணனுக்கு உணவு தேவை. பிராணனின் தேவை சொற்பத்தேவை. ஆனால் நாக்கு இடையில் வருகிறது. உணவுக்கும் பிராணனுக்கும் இடையில் நின்று அதிக உணவு தனக்கு வேண்டும் என்று கேட்கிறது. அது சுவையான உணவைக் கேட்கிறது—இனிப்புப் பண்டங்கள், சட்னி, சாம்பார், ரசம் மற்றும் தோசை ஆகியவை தனக்கு வேண்டும் என்று கேட் கிறது. அதற்குத் தீனி போடப்போட அதன் ஆசையும் அதிகரிக்கிறது.

குருநாதர் வருகிறார். தவறு நிகழ்வதைச் சுட்டிக் காட்டுகிறார். சாதகன் உண்ணுகிற உணவு அத்தனையும் பிராணனுக்குத் தேவையில்லை என்று உணர்த்துகிறார். திருடன் பிடிபடுகிறான். பத்தியம், பட்டினியின் மூலம் தண்டனை தரப்படுகிறது. நாக்கிலிருந்து சாதகன் விடுபடுகிறான்; இந்திரியங் களை வெற்றிகண்டு ஜிதேந்திரியனாகத் திகழுகிறான்.

## 69. பசுவின் மடியை அறுத்த மனிதன்

ஒரு முட்டாள் மனிதன் ஒரு பசு வளர்த்து வந்தான். அது நிறையப் பால் கொடுத்தது. நாளுக்கு நாள் அது அதிகமாகப் பால் கொடுத்தது. காலையில் எட்டு படியும் மாலையில் எட்டு படியும் பால் தந்தது. இவ்வளவு பாலும் ஒரே மடியிலிருந்து வருவதை அவன் கவனித்தான். பசுவின் மடியில் இன்னும் நிறைய பால் இருக்கிறதென்றும் ஆனால் பசு அதனைத் தர மறுக்கிறதென்றும் அவன் முட்டாள்தனமாக எண்ணினான். அவன் பேராசை கொண்டான். ஒரே நேரத்தில் பாலை முழுமையாகப் பெற விரும்பினான். ஆகவே ஒருநாள் காலை கத்தியை எடுத்து பசுவின் மடியை அறுத்தான். இப்படிச் செய்வதன் மூலம் பசுவிடம் உள்ள பால் முழுவதையும் தான் பெற முடியும் என அவன் எண்ணினான். என்ன பரிதாபம்? அவனுக்குக் கிடைத்ததெல்லாம் ரத்தம் தான். மடியிலிருந்து ஒரு துளி பால்கூடக் கிடைக்க வில்லை. ரத்த வெள்ளத்தில் மூழ்கிய பசு உயிர் துறந்தது.

இதுபோல ஒரு முட்டாள் சாதகன் தவத்தின் மூலம் அற்புதமான மனோபலமும் ஆன்மீக முன்னேற்றமும் ஏற்படுகிறது என்று அறிகிறான். ஆனால் இந்த முன்னேற்றத்தை எப்போதும் படிப் படியாக, சீராக தொடர்ந்து பெற வேண்டும். இது அவனுக்கு திருப்தி அளிக்கவில்லை. மிகச் சிறப்பான ஆன்மீக அனுபவத்தை ஒரே நாளில் பெற விரும்பு கிறான். பிறகு அவன் அசுரத்தவம் செய்கிறான். மிகக் கடுமையான கட்டுப்பாடுகளைக் கடைப் பிடித்து தவத்தின் உயிர்க் கொள்கைக்கே ஊறு செய்கிறான். இதனால் அவன் பெறுவது என்ன? ஆன்மீக முன்னேற்றம் அடைவதற்கு மாறாக அவன் மரணத்தைத் தழுவுகிறான்.

மனிதா! சாத்வீகமாகத் தவம் செய். பொன்னான வழிமுறைகளைப் பின்பற்று. படிப் படியாக முன்னேறி உன்னதமான பேரானந்தத்தை அனுபவி.

## 70. வழக்கறிஞரின் தலைப்பாகை

வழக்கறிஞர் ஒருவர் நீதிமன்றம் செல்வதற்காக வீட்டைவிட்டுப் புறப்பட்டார். அவர் வீட்டைவிட்டுப் புறப்படும்போது தலைப்பாகை கலைந்திருப்பதை உணர்ந்தார். இன்னும் ஒரு அடி எடுத்து வைத்ததும் தலைப்பாகை முழுமையாக அவிழ்ந்துவிட்டது. தலைப்பாகைத் துணி முழுவதும் பூமியில் விழுந்துவிட்டது. அவர் மீண்டும் தலைப் பாகையைக் கட்ட ஆரம்பித்தார். ஆனால் அவரால் முடியவில்லை. அவர் முயன்று, முயன்று தோற்றார். தன்னைச் சுற்றிலும் பார்வையைச் செலுத்தினார். மாடிப்படியின் கீழ் ஒரு குவிந்த விளக்கு இருந்தது. அது அவர் தலையின் அளவில் இருந்தது. உடனே அவர் அதனருகில் ஓடினார். அந்த விளக்கைத் தன் தலையாக பாவனை செய்து கொண்டு அதன்மீது தலைப்பாகையைக் கட்டினார். அவர் இதனை வெற்றிகரமாகச் செய்து முடித்தார். இப்போது அழகாகக் கட்டப்பட்ட தலைப்பாகையை விளக்கிலிருந்து எடுத்துத் தன் தலையில் வைத்துக் கொண்டு நீதிமன்றத்துக்குச் சென்றார்.

வேதனை மற்றும் இறப்பு என்னும் உலகச் சூழ்நிலையிலிருந்து விடுபட்டு இறைவன் என்னும் மாமன்னரின் அவைக்குச் செல்ல மனிதன் விரும்பு கிறான். ஆனால் அவனுடைய மனம் என்னும் தலைப்பாகை கலைந்திருப்பதை அவன் உணருகிறான். அதனை ஒன்று திரட்டி அழகிய தலைப்பாகையாகக் கட்டிக்கொள்ள அவன் முயற்சிக்கிறான். அதாவது

மனதை ஒருநிலைப்படுத்தி சமாதி நிலை பெற்று தலையின் சிகரத்திலுள்ள சஹஸ்ராரத்தை அடைய மனிதன் விரும்புகிறான். முயற்சிக்கிற ஒவ்வொரு சமயத்திலும் அவன் தோற்றுப்போகிறான். சஹஸ் ராரத்தில் உள்ள விழிப்புணர்வு மிக நுட்பமானது. அதனை உணர்ந்து மனத்தை அதனுடன் ஒன்றிடச் செய்ய அவனுக்கு மிகவும் கஷ்டமாக இருக்கிறது. அவன் தன்னைச் சுற்றி பார்வையைச் செலுத்து கிறான். இறைவனின் விக்கிரகம் ஒன்றை அவன் காணுகிறான். இந்த விக்கிரகம் இறைவன் அல்லது உன்னத விழிப்புணர்வு நிலைக்குச் சமமானது என அவன் உணருகிறான். இந்த விக்கிரகத்துடன் தனது மனம் ஒன்றிவிடுமாறு செய்கிறான். மனம் முழுமையாக விக்கிரகத்தின்பால் ஒன்றியதும் இறைவன் அதனை உயர்த்தி, சஹஸ்ராரம் அல்லது உன்னத விழிப்பு நிலைக்கு அழைத்துச் செல்லுகிறான். இப்போது மனிதனுக்கு அனைத்தும் எளிதாகி விடுகிறது. பிறகு இறைவன் என்னும் மாமன்னரின் சபைக்கு அவன் மகிழ்ச்சியுடன் நடந்து செல்கிறான்.

## 71. நூறு குழந்தைகள்

ஒரு நகரத்தில் ராமன், கிருஷ்ணன் என்ற இரண்டு நண்பர்கள் வாழ்ந்து வந்தனர். அவர்கள் இருவரும் பக்கத்து வீட்டுக்காரர்கள். உரிய காலம் வந்ததும் ராமன் ஒரு அழகிய பெண்ணைத் திருமணம் செய்து கொண்டான். கிருஷ்ணன் வெகு நாட்களாக பிரம்மச்சாரியாக இருந்தான். இருவருக்கும் பெற்றோரிடமிருந்து ஏராளமான செல்வம் கிடைத்தது. ராமன் செல்வத்தை பன் மடங்காகப் பெருக்கி கோடீஸ்வரன் ஆனான். ஆனால் கிருஷ்ணன், தனது ஆன்மீகத்துறை நண் பரும் வழிகாட்டியுமான ஒருவரின் மகனை சுவீகாரம்

செய்து கொண்டான். தனது வரவுக்குத் தகுந்த செலவு செய்து அவன் மகிழ்ச்சியுடன் இருந்தான்.

ராமனிடத்தில் செல்வம் பெருகியிருந்தது. ஆனால் மகிழ்ச்சி இல்லை. அவனுக்குப் பல குழந்தைகள் பிறந்தன. அவை அவனுக்கும், அவனது மனைவிக்கும் எப்போதும் தொல்லைகள் தந்தன. அந்தக் குழந்தைகளிடத்தில் மூர்க்கத்தனமும், கீழ்ப் படியாத தன்மையும் குடிகொண்டிருந்தது. விரைவிலேயே அவர்கள் ராமனின் செல்வத்தைக் கரைத்தனர். ராமன் எவ்வளவுதான் பணம் சேகரித்தாலும் எப்போதும் பற்றாக்குறையாகவே இருந்தது.

ஒரு நாள் ராமன், கிருஷ்ணன் வீட்டுக்குச் சென்றான். கிருஷ்ணனுடைய மகிழ்ச்சிக்கும், அவனது இல்லம் ஸ்வர்க்கம்போல இருப்பதற்கும் காரணம் என்ன என்று ராமன் அறிந்துகொள்ள விரும்பினான். அப்போது கிருஷ்ணன் ''எனக்கு ஒரே ஒரு புதல்வன்தான் இருக்கிறான். ஆகவே நான் மகிழ்ச்சியாக இருக்கிறேன்'' என்று பதிலளித்தான்.

ராமனும், கிருஷ்ணனும் மனிதர்களின் இரு வகையான மனதை பிரதிபலிக்கின்றனர். ஒரு மனம் சில கற்பனைகளை வளர்த்துக்கொள்ளுகிறது. இதிலிருந்து ஆயிரம் ஆசைகள் பெருக்கெடுத்து வருகின்றன. சிறிதளவு தியானத்தின்மூலம் மனம் சேகரித்து வைத்திருக்கிற சக்தியை ஆசைகள் விரைவாக வீணாக்கிவிடுகின்றன. அளவற்ற ஆசைகளின் காரணமாக மனம் பலவீனம் அடைகிறது. இதன் காரணமாக அது ஒருநிலைப்படுவதில்லை; நினைத்ததை சாதித்துக்கொள்ளுவதில்லை.

கிருஷ்ணன் குருவின் மகனை சுவீகாரம் செய்து கொண்டதுபோல, ஒருவனின் மனம் அவனது குருநாதரிடமிருந்து ஒரு குறிப்பிட்ட எண்ணத்தைப் பெற்றுக்கொண்டு அதனை வளர்த்து பலப்படுத்துகிறது.

ஆசைகளை ஆயிரக்கணக்கில் வளர்த்துக் கொண்டால் மனஅமைதி இருக்காது; மனத்தை பலப்படுத்தி பாதுகாக்க இயலாது. ஒரே ஒரு ஆசை மட்டும் இருந்தால் மனத்தை ஒருமுகப்படுத்தி அதனை நிறைவேற்றிக்கொள்ளத் தீவிரமாக முயற்சி செய்யலாம்.

ஆசைகள் அதிகரிக்க அதிகரிக்க மனஅமைதியும் மகிழ்ச்சியும் படிப்படியாகக் குறைகிறது. ஆசைகள் குறையக் குறைய மனஅமைதி பெருகுகிறது.

ஆசைகளின் எண்ணிக்கையைக் குறைத்துக் கொள்ள கற்றுக்கொள்ளுங்கள். ஒரே ஒரு பற்றை வளர்த்துக்கொள்ளுங்கள். அது தெய்வீகமானதாக இருக்கட்டும். அந்த ஆசையைப் பூர்த்தி செய்வதற்காக மனதை ஒருமுகப்படுத்தி முயற்சி செய்யுங்கள். இப்படிச் செய்தால் நீங்கள் அமைதியும் பேரானந்தமும் பெற்று விரைவிலேயே உங்கள் லட்சியத்தை அடைவீர்கள்.

---

## 8-வது அத்தியாயம்

# ஞான மார்க்கம்

### 72. நெல்லும் வைக்கோலும்

ஒரு விவசாயியின் மகன் தந்தையுடன் வயலுக்குச் சென்றான். அங்கு அறுவடை நடைபெறுவதைக் கண்டான். தந்தை நெற்கதிர்களை அறுத்துத் திரட்டி அவற்றை வீட்டின் புறக் கடையில் (backyard) கொண்டு வந்து போட்டார். அங்கு அவர் கதிர்களை தரையில் அடித்து நெல்லையும் வைக்கோலையும் தனித்தனியே பிரித்தார். நெல்லை மட்டும் வீட்டுக்குள் எடுத்துச் சென்று பாதுகாப்பாக சேமித்து வைத்தார்.

''அப்பா, வைக்கோலை மட்டும் ஏன் புறக் கடையிலேயே விட்டு விட்டீர்கள்? நீங்கள் அதை வயலிலிருந்து வீடுவரை கொண்டு வந்தீர்கள். ஏன் அதை வீட்டுக்குள் கொண்டு செல்லவில்லை'' என்று மகன் தந்தையிடம் கேட்டான்.

''மகனே, வைக்கோலின் பணி முடிந்து விட்டது. நாம் நெல்லைக் கதிரிலிருந்து பிரித்து எடுத்துக்கொள்ளுகிறவரை அது நெல்லைச் சுமந்து வரவேண்டியிருந்தது. இப்போது நாம் நெல்லை எடுத்துக்கொண்டோம். வைக்கோல் நமக்குப் பயன்படாது. இப்போது நமது வீட்டுக் கால்நடைகள் தின்பதற்காக அவற்றைச் சேமித்து வைக்கிறோம்'' என்று தந்தை பதிலளித்தார். அனைத்தையும் முழுமையாகத் தெரிந்து கொண்ட மகன் மகிழ்ச்சி அடைந்தான்.

இதுபோல சாதகர்கள் ஆத்மஞானம் பெற சாஸ்திரங்கள் உதவுகின்றன. ஆத்மஞானம்

பெற்றவர்களுக்கு சாஸ்திரங்கள் தேவையில்லை. ஆத்மஞானம் பெற்றவர்கள் அந்த ஞானத்தை இதயத்தில் வைத்துப் பாதுகாக்கின்றனர். சாஸ்திர அறிவை இன்னும் உலக வாழ்வைப் பின் பற்றும் மனிதர்களின் நன்மைக்காகப் பயன்படுத்து கிறார்கள்.

## 73. நான்கு அறிஞர்கள்

ஒரு சமயம் நான்கு அறிஞர்கள் — ஒரு ஆயுர் வேத டாக்டர், ஒரு சோதிடர், ஒரு சங்கீத வித்வான் மற்றும் ஒரு தர்க்கசாஸ்திர வல்லுனர் — ஒரு கிராமத்தில் ஒரு நாள் முழுவதும் தங்கியிருக்க நேர்ந்தது. அவர்களில் ஒவ்வொருவரும் தாம் சம்பந்தப்பட்ட துறையில் வல்லுனராகத் திகழ்ந்த னர். ஆனால் நடைமுறை வாழ்க்கையைப் பற்றிய அறிவு அவர்களுக்குச் சிறிதும் இல்லை.

அவர்கள் தமக்குத் தேவையான உணவுப் பொருட்களை சேகரிப்பதில் ஈடுபட்டனர். ஆயுர் வேத டாக்டர் காய்கறி வாங்கிவரச் சென்றார். ஆனால் காய்கறி எதுவும் வாங்காமல் விரைவில் திரும்பி வந்தார். அவரது மருத்துவ அறிவு காரணமாக அவர் எந்தக் காயையும் வாங்க விரும்ப வில்லை. உருளைக் கிழங்கு ஊறுவிளைவிக்கும் என்றும் அது வாயு சம்பந்தமான நோயை உண்டாக்கும் என்றும் அவர் கருதினார். வெங்காயம் தமோ குணத்தை தோற்றுவிக்கும் என எண்ணினார். இப் படியாக எல்லாக் காய்கறிகளும் அவரது பார் வையில் குறையுடையவையாகவே இருந்தன.

சமையலுக்குத் தேங்காய் கொண்டு வரச் சென்ற சோதிடர் தென்னை மரத்தில் ஏறினார். அவர் இறங்கி வரும் போது அருகே ஒரு வீட்டில்

நின்று கொண்டிருந்த கழுதை கத்தியது. சோதிடர் மரத்தின் பாதியிலே நின்றுவிட்டார். கழுதை கத்தியதையடுத்து ஏற்படக்கூடிய விளைவுகளை சோதிட சாஸ்திரத்தின் அடிப்படையில் ஆராயத் தொடங்கினார். அவர் அப்படியே மரத்தின் நடுவில் தங்கிவிட்டார்.

சங்கீத மேதையின் கதை இதைவிடப் பரிதாப கரமானது, ஏளனத்துக்குரியது. அடுப்பில் சாதம் சமைக்கப்பட்ட பாத்திரம் இருந்தது. அதை அவர் கவனித்துக் கொண்டிருந்தார். பானையில் சாதம் வெந்து கொண்டிருந்தது. அப்போது இவர் தாளம் போடத் துவங்கினார். இவர் தாளத்திற்கு தகுந்தாற்போல் சாதத்தில் நீர் கொதிக்கவில்லை. ஆகவே சங்கீத மேதை கோபமுற்று கரண்டியால் பானையை உடைத்தார். சாதம் முழுவதும் தரையில் சிதறி வீணாயிற்று.

தர்க்க சாஸ்த்திர நிபுணரும் இவர்களுக்கு சளைத்தவராயில்லை. அவர் ஒரு கிண்ணம் நிறைய நெய் வாங்கிக் கொண்டு வந்தார். அவர் வழியில் திடீரென்று சிந்திக்கத் துவங்கினார். நெய்க்குக் கிண்ணம் ஆதாரமா ? கிண்ணத்திற்கு நெய் ஆதாரமா ? என்று அவர் ஆராயத் துவங்கினார். இந்த ஆராய்ச்சியில் அவர் கிண்ணத்தைத் தலை குப்புறக் கவிழ்த்தார். அந்தோ பரிதாபம்! நெய் முழுவதும் தரையில் கொட்டியது. நெய்யை இழந்ததற்காக அவர் வருந்தினார். ஆயினும் அவர் நிகழ்த்திய ஆராய்ச்சியில் அவருக்கு ஏற்பட்ட தெளிவு குறித்து அவர் மகிழ்ச்சி அடைந்தார். இந்த மகிழ்ச்சியுடன் அவர் வீடு திரும்பினார்.

நீங்கள் படித்தால் மட்டும் போதாது, உண்மை ஞானம் பெற வேண்டும். எவ்வளவு

தான் கற்றாலும் உங்களிடத்திலே அது உண்மை யான மகிழ்ச்சியை ஏற்படுத்தாது. ஞானம் தான் பேரானந்தம். புத்தக அறிவு உயிரற்ற அறிவு. ஒரு குருவுக்குத் தொண்டு செய்து அவரிடம் கல்வி பயின்று அவரது உபதேசங்களை மனப்பூர்வமாகப் பின்பற்றி அனுபவமும் உண்மை ஞானமும் பெற வேண்டும்.

## 74. சிறுவனும் மெழுகுவர்த்தியும்

ஒரு தந்தையும் சிறுவனாகிய அவருடைய மகனும் ஒரு இருட்டறையில் அமர்ந்திருந்தனர்.

மகன் தந்தையிடம், ''அப்பா, இந்த இருட்டில் எனக்கு பயமாக இருக்கிறது. இந்த இருட்டை எப்படிப் போக்குவது?'' என்று கேட்டான்.

''மகனே மெழுகுவர்த்தியை ஏற்று''.

சிறுவன் மெழுகுவர்த்தியை ஏற்றினான். ''ஓ! இப்போது இருட்டு அகன்று விட்டது இல்லையா அப்பா?''

''ஆம் மகனே'' என்று தந்தை பதிலளித்தார். பிறகு மகன் மெழுகுவர்த்தியை அணைத்து விட்டான்.

''ஓ, மீண்டும் இருட்டிவிட்டதே, அப்பா! எனக்குப் பயமாக இருக்கிறது.''

''மகனே மெழுகுவர்த்தியை கொளுத்து'' என்று தந்தை சொன்னார். சிறுவன் மெழுகுவர்த்தியைக் கொளுத்தினான். ''ஆ, இப்போது இருள் அகன்று விட்டது'' என்று அவன் மகிழ்ந்தான்.

இவ்வாறு அந்தச் சிறுவன் பலமுறை மெழுகு வர்த்தியை ஏற்றி அணைத்தான்.

பிறகு தந்தை பின்வருமாறு மகனிடம் கூறினர்: ''மகனே, இருள் இருக்கும்போதெல்லாம் நீ மெழுகுவர்த்தியை எரியுமாறு செய்யவேண்டும். எரியும் மெழுகுவர்த்தியை நீ அணைத்துவிட்டால் உடனே இருள் சூழ்ந்துவிடும். ஆனல் சூரியன் உதயமான பிறகு மெழுகுவர்த்தி தேவைப்படாது. பிறகு, உலகின் தலையாய விளக்காகத் திகழும் சூரியன் பகல் முழுவதும் ஒளி தருகிறது.

அதுபோல, ஒரு சீடன் குருவை அணுகி யோகம் பற்றிய உபதேசங்களைக் கேட்கிருன். தீக்ஷை பெறுகிருன். சீடன் சிறிது காலம் ஆன்ம சாதனையில் ஈடுபட்டு ஓரளவுக்கு ஆன்மீகத் துறையில் முன்னேற்றம் பெறுகிருன் இப்போது ஆன்மீகத் துறையில் தான் மிகச் சிறப்பாக சாதனை புரிந்து மாயையை வென்றுவிட்டதாக சீடன் நினைக்கிருன். ஆன்மீகப் பயிற்சிகளில் ஈடுபடுவதை நிறுத்துகிருன். மீண்டும் அவனை இருள் கவ்விக் கொள்ளுகிறது! ஆன்ம சாதனையில் சீடனுக்கு உறுதி ஏற்படுகிற வரையில் யோக சாதனையில் பயனும் இழப்பும் மாறிமாறி ஏற்படுகிறது. பிறகு ஆத்ம ஞானம் என்னும் ஆதவனின் ஒளி தோன்றுகிறவரை மாயை என்னும் இருளை அவன் அகற்றி வருகிருன். ஆதவன் என்னும் ஆத்ம ஞானம் ஏற்படுகிறபோது அறியாமை என்னும் இருள் நிரந்தரமாக விலகி விடுகிறது. பிறகு அவன் சஹஜ சமாதி என்னும் சூரிய ஒளியின் சுகத்தை அனுபவிக்கிருன்.

## 75. அச்சத்தால் இறந்த மனிதர்கள்

மத்தியக் கிழக்கு நாடு ஒன்றில் ஒருவன் பயணம் செய்து கொண்டிருந்தான்.

அப்போது ஒரு அதிசய மனிதனைச் சந்தித்தான்.

''நீ யார்? எங்கே செல்கிறாய்'' என்று கேட்டான்.

''நான் காலரா, எகிப்து நாட்டில் ஐயாயிரம் பேரைக் கொல்லப் போகிறேன்'' என்று அந்த அதிசய மனிதன் பதிலளித்துவிட்டு தன் பயணத்தைத் தொடர்ந்தான்.

சில ஆண்டுகளுக்குப் பின்னர் அவர்கள் இருவரும் சந்திக்க நேர்ந்தது.

''நீ ஐயாயிரம் பேரைக் கொல்வதாகத்தான் என்னிடம் கூறினாய். ஆனால் ஐம்பதாயிரம் பேரைக் கொன்றிருக்கிறாயே'' என்று முதல் நபர் மற்றவனிடம் கேட்டான்.

''இல்லை, இல்லை, நான் ஐந்தாயிரம் பேரைத்தான் கொன்றேன், மற்றவர்கள் அச்சத்தால் இறந்தனர்'' என்று அதிசய மனிதன் பதிலளித்தான்.

அச்சம்தான் மனிதனின் கொடிய எதிரி என்பதை இந்தக் கதை உணர்த்துகிறது. நமது கவலைகள் மற்றும் துன்பங்களுக்கு தொண்ணூறு சதவிகிதம் நமது அச்சமும் தவறான கற்பனைகளுமே காரணம். மனிதன் அஞ்சியதுபோல எதுவும் நிகழாவிட்டாலும் அந்த அச்சமே மனிதனின் உயிர்ச் சக்தியை உறிஞ்சிவிடுகிறது. பிரம்மவித்தாக உள்ள மனிதன்தான் அச்சத்திலிருந்து முழுமையாக விடுபட்டிருக்கிறான்.

அறியாமையின் குழந்தை அச்சம். ஆத்மாவின் உண்மை இயல்பு, அச்சமற்றது, நோயற்றது, பந்த மற்றது. ஒவ்வொருவரும் ஆத்மஞானம் பெற்று அச்சம், நோய், துன்பம் என்னும் கடலைக் கடக்க வேண்டும்.

---

## 9-வது அத்தியாயம்

# ஜீவன் முக்தரின் இயல்பு

### 76. வேடனின் கனவு

ஒரு வேடன் இரவில் உறங்கச் சென்றான். உறக்கத்தில் கனவு கண்டான். ஒரு கொடிய சிங்கம் ஒன்று தன்னை விரட்டி வருவதாகவும், தன் மீது பாய்வதற்கு அது தாவிக் குதிப்பதாக வும் கனவில் அவனுக்குத் தோன்றியது. அவன் அஞ்சி பயங்கரமாக அலறினான். அவன் வில்லை யும், அம்பையும் எடுக்க ஓடுவதுபோலவும் ''அம் பையும், வில்லையும் எடு'' என்று தன் தோழனிடம் கூறுவது போலவும் அவன் கனவு கண்டான். உண்மையில் அவன் கட்டிலிலிருந்து உருண்டு கீழே விழுந்தான். வில்லும், அம்பும் எடுக்கவில்லை. உடனே அவன் விழித்துக்கொண்டான், அருகில் உள்ள அறையில் வேடனின் மகன் உறங்கிக் கொண்டிருந்தான். ''வில்லையும், அம்பையும் எடு'' என்று வேடன் அலறியதை மகன் கேட்டான். நிகழ்ந்தது என்னவென்று மகனுக்குத் தெரியாது, ஆதலால் அவன் வில்லையும், அம்பையும் எடுத்துக் கொண்டு ஓடிவந்தான். தந்தை மகனைப் பார்த்துப் புன்முறுவலுடன் பின்வருமாறு கூறினான்: ''இல்லை

இப்போது அவை எனக்குத் தேவையில்லை. நான் கனவு கண்டேன். அது கனவு என்பதை இப்போது உணர்கிறேன். ஆதலால் வில்லுக்கும் அம்புக்கும் வேலை இல்லை. அது என்ன அற்புதமான கனவு! நான் உறக்கத்திலிருந்து விழித்து, கண்டது கனவு என உணருகிறேன். ஆயினும் அந்தக் கனவு எனக்குத் தெளிவாக நினைவிருக்கிறது; மகிழ்ச்சி யாக இருக்கிறது''.

அதுபோல ஜீவன், உடல் என்னும் படுக்கையில் உறங்குகிறது. இந்த உலகு என்னும் காட்டில் அலைந்து திரிவதாக அது கனவு காணுகிறது; அல்லது கற்பனை செய்கிறது. நோய், வறுமை, முதுமை ஆகியவற்றின் வடிவில் கொடுந் துன்பம் ஜீவனைத் தாக்குகிறது. அவன் அழுகிறான்; அலறுகிறான். துன்பம் என்னும் எதிரியைத் தாக்கும் வீண்முயற்சியில் அப்போது ஈடுபடுகிறான். அதற்காகப் புலன் இன்பம் என்னும் ஆயுதத்தை அப்போது பயன்படுத்த விரும்புகிறான்; ஆனால் இயலவில்லை. இறையருளால் ஜீவன் உடல் உணர்விலிருந்து விடுபடுகிறான். அவன் ஞானம் பெறுகிறான். அவனது நண்பர்களும் உறவினர் களும் முன்புபோலவே இப்பொழுதும் பழகு கின்றனர். ஆனால் அவன் புலன்வழிச் செல்ல புன்முறுவலுடன் மறுத்துவிடுகிறான். இப்போது அவன் விழிப்புற்ற ஆத்மா. அவனது கடந்தகால வாழ்க்கையை ஒரு நீண்ட கனவு என அவன் அறிந்து கொள்ளுகிறான். அவன் ஆத்ம விழிப் புணர்வு பெற்றிருப்பதால் அவனுக்குத் துன்பமே இல்லை. ஆகவே புலன் இன்பத்தை அவன் விரும்ப வில்லை. அறியாமை என்னும் கடந்தகால நினைவு அவனுக்கு வந்தாலும் அது ஒரு நீண்ட கனவு என நினைத்து, சிரித்து ஒதுக்கினான்.

## 77. இருட்டறையில் ஒரு கை விளக்கு

ஒரு மனிதன் இருளில் மூழ்கியிருந்த தனது அறைக்குள் நுழைந்தான். அந்த அறையிலிருந்த கைவிளக்கை (torch light) அவன் எடுத்துக்கொள்ள விரும்பினான். அவன் பல பொருட்கள் மீது தடுமாறி விழுந்தான். இங்கும் அங்கும் தலையை மோதிக்கொண்டான். ஆ! கைவிளக்கு இப்போது கைக்கு அகப்பட்டுவிட்டது. உடனே விளக்கு தந்த ஒளியில் இருள் அகன்றது. அவன் விளக்கில் சுகமாக, சுதந்திரமாக அறையில் நடமாடினான்.

ஒரு சாதகன், இருள் நிறைந்திருக்கும் அந்தராத்மாவுக்குள் நுழைகிறான். அங்கு ஆன்ம ஒளி இருப்பது அவனுக்குத் தெரியும். இதனைத் தேடுகிறபோது அவன் தடுமாறுகிறான். அங்கும் இங்கும் தலையை மோதிக்கொள்ளுகிறான். இறுதியாக தகுந்த நேரம் வந்துவிட்டது. அந்த ஒளியினை அவன் பெறுகிறான். உடனே அறியாமை அகன்று விடுகிறது. ஆத்ம ஒளி ஆத்மாவின் மேல் சுடர் விடுகிறது. இனிப் போராட்டமில்லை, இனித் தொல்லை இல்லை. அவன் ஜீவன்முக்தனாக சுதந்திரமாக நடமாடுகிறான்.

## 78. குழந்தையும், நிழலும்

ஒருவன் குழந்தையாகிய தனது தம்பி சமையலறைக்கு அருகில் உள்ள ஒரு அறையில் தனியாக இருப்பதை எண்ணிப் பார்த்தான். திடீரென்று குழந்தை சிரித்தான், விளையாடினான், பேசினான். அண்ணன் இந்தக் குரல் கேட்டான். திருடன் ஒருவன் குழந்தை இருக்கும் அறைக்குள் நுழைந்து குழந்தைக்கு மிட்டாய் கொடுத்து அதன் கழுத்தி

விருக்கும் தங்க நகையைத் திருடிச் செல்ல முயற்சிப்பதாக அண்ணன் கற்பனை செய்து கொண்டான். அவன் குழந்தை இருந்த அறைக்கு அச்சத்துடன் ஓடினன். அங்கு அவன் கண்டது என்ன? குழந்தை சுவற்றில் விழுந்த தனது நிழலுடன் விளையாடிக் கொண்டிருந்தது. அண்ணன் ஆறுதல் அடைந்து மிகுந்த அன்புடன் குழந்தையைக் கட்டித் தழுவிக்கொண்டான்.

அதுபோல வயிற்றைப்பற்றிக் கவலைப்படுகிற மனிதன் ஒரு சாதுவைப்பற்றியும் கவலைப்படுகிருன். இறைவன் படைத்துள்ள மாளிகையின் மற்ெருரு பகுதியில் சாது தனிமையில் இருப்பதாக அவன் அறிகிருன். சாது இருக்கும் இடத்திலிருந்து திடீரென்று சிரிப்பொலி கேட்கிறது. அந்தச் சூழ்நிலையில் 'உயிரோட்டம்' இருக்கிறது. அறியாமையில் உழலும் மனிதன், சாதுவின் அறைக்குள் மாயை என்னும் திருடன் புகுந்துவிட்டதாகக் கற்பனை செய்து கொள்ளுகிருன். சாதுவுக்கு சில வசதிகளைச் செய்து கொடுக்கிருன். சாதுவிடமிருந்து வைராக்கியம், விவேகம் ஆன்மீக விழிப்புணர்வு ஆகிய செல்வத்தை திருடன் கொள்ளையிட்டுச் சென்றதாக மனிதன் கற்பனை செய்து கொள்ளுகிருன். இந்தக் கற்பனைகளுடன் மனிதன் சாதுவை நெருங்கிச் செல்கிருன். ஜீவன் முக்தராகிய சாது தனது நிழலுடன் விளையாடிக்கொண்டிருப்பதைக் கண்டான். ஜீவன் முக்தரின் பார்வையில் உலகில் உள்ள உயிர்கள் அனைத்தும் தனது நிழல்கள் ஆகும். அவற்றுடன் விளையாடுவதில் அவர் பேரானந்தம் அடைகிருர். இதன் மூலம் அவருக்கு லாபமும் இல்லை; நஷ்டமும் இல்லை; ஆனல் உலகியலில் வாழும் மனிதன்தான் சாதுவின் வாழ்வில் இன்ப துன்பங்கள் இருப்பதாகக் கற்பனை செய்துகொள்ளுகிருன்.

# 79. அசுத்தப்பட்ட தீ

ஒரு மனிதன் உணவு உட்கொண்டான். அவன் பயங்கரமான நோயினுல் அவதிப்பட்டுக் கொண்டிருந்தான். சமுதாயத்தை அசுத்தப்படுத்திவிடக் கூடாது என்ற ஆசையில் அவன் தனது எச்சில் இலையை எடுத்துத் தீயில் போட்டான். இதனைப் பார்த்துக் கொண்டிருந்த ஒரு வைதீக அந்தணருக்கு கடுங்கோபம் வந்தது. எச்சில் இலையைப் போட்டதால் தீ அசுத்தமாகிவிட்டது என்று அவர் கருதினுர். அவருக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. ஆனுல் ஏதாவது செய்தாக வேண்டும் என அவர் எண்ணினுர். மனிதனின் தூய்மை கெடுகிறபோது அவன் என்ன செய்கிருன்? அவன் தலையில் தண்ணீரை ஊற்றிக் கொள்ளுகிருன். சிந்திக்காமல் வைதீக அந்தணர் தீயில் தண்ணீரை ஊற்றினுர். அதைத் தூய்மைபடுத்தும் நோக்கத்திலேயே இப்படிச் செய்தார். தீ அணைக்கப் பட்டது; இலை எரிந்து சாம்பலாகக் கிடந்தது. அறிவுக் கூர்மையுடைய மற்ருெரு பிராமணன், வைதீக பிராமணரின் முட்டாள்தனத்தைச் சுட்டிக் காட்டினுர்; ''என்ன தீங்கு செய்துவிட்டாய்! தூய்மைக்குத் தூய்மையாய்த் திகழும் தீ எப்படி அசுத்தமாகும்? எச்சில் இலையைத் தீயில் எறிந்த மனிதன் செய்தது சரியே. அவன் அப்படி செய்யாவிட்டால் சமுதாயம் முழுவதையும் கொடியநோய் பற்றிக்கொள்ளும். நோய்க் கிருமிகள் அனைத்தும் தீயில் எரிந்துவிடும். தீ அசுத்தமாகிவிட்டதாகக் கருதி, தீயில் தண்ணீரை ஊற்றி அணைத்ததால் எங்களுக்கெல்லாம் தொல்லை தந்திருக்கிருய். தீயின் தூய்மையாக்கும் பணி தடைப்பட்டுவிட்டது?'' பிறகு அவன் மீண்டும் தீ மூட்டினுன். குப்பைகளை அதில் போட்டு எரித்துச் சாம்பலாக்கினுன்.

தீ ஒரு ஜீவன் முக்தர் போன்றது. அனைத்து உயிர்களிடத்திலும் உள்ள பாவங்களையும், தீமைகளையும் அவர் எரித்துவிடுகிறார். பாவிகளும், தீயவர்களும் இருக்கும் இடத்தில் அவர் சுடர் விட்டுப் பிரகாசிக்கிறார். அவர் அவர்களது பாவங்களை எரித்து அவற்றைத் தூய சாம்பலாக மாற்றி விடுகிறார். ஊரெல்லாம் தீயவன் என்று பெயர்எடுத்த ஒருவன் ஜீவன் முக்தரிடம் வருகிறான். அவரது அருளைப் பெறுவதற்காக தன்னுடைய செல்வத்தையும், வீட்டையும், அவருக்கு அர்பணம் செய்கிறான். வைதீக பிராமணன் போன்ற உலகியல் மனிதன் இதனைப் பார்க்கிறான். அவன் வியப்படைகிறான். இந்த வில்லனின் பாவங்களால் ஜீவன் முக்தர் களங்கப்பட்டுவிட்டதாக அவன் எண்ணுகிறான். ஜீவன் முக்தரும் தீயவர் என அவன் எண்ணுகிறான். இவ்வாறு எண்ணிய அவன் ஜீவன் முக்தரை அவமதித்து அந்த இடத்திலிருந்து துரத்திவிடுகிறான். ஜீவன்முக்தர் இருக்கும்போது திருந்தியவர்கள் இப்போது மீண்டும் தீயவர்களாக மாறினர். சூழ்நிலை முழுவதும் அதர்ம மயமாக இருந்தது. அப்போது ஒரு அறிஞன் வருகிறான். முட்டாள் மனிதனுக்கு அறிவுரை கூறுகிறான். ''தீயவர்கள் தமது தீய குணத்தால் ஜீவன்முக்தரை களங்கப் படுத்திவிட முடியும் என்ற உனது நினைப்பு எவ்வளவு முட்டாள்தனமானது. அனைத்தையும் தூய்மைப் படுத்தும் ஜீவன்முக்தரின் இயல்பு பற்றி உனக்கு என்ன தெரியும்? எதுவும் அவரை களங்கப்படுத்த முடியாது. எவருக்கும் அருளாசி வழங்க அவர் மறுத்ததில்லை. அனைவரின் பாவங்களையும் அவர் மகிழ்ச்சியுடன் தன் வயப்படுத்திக்கொள்ளுகிறார். தீய மனிதன் ஜீவன்முக்தரின் திருவடித்தாமரைகளில் தனது செல்வம் மற்றும் கட்டிடத்தை சமர்ப்பித்தது முற்றிலும் சரியானதாகும். ஜீவன்முக்தர்

அனைத்தையும் தூய்மைப்படுத்துகிறார். ஆனால், அவரை விரட்டியதன்மூலம் நீங்கள் சமுதாயத்துக்கு அளவிலாத் தீமையைக் கொண்டு வந்திருக்கிறீர்கள்''. பிறகு அறிஞன், ஜீவன்முக்தரை அழைத்து வருகிறான். அவர் தீயவர்களின் ஆன்மாக்களைத் தூய்மைப்படுத்தும் பணியை மீண்டும் தொடங்குகிறார்.

## 80. பசுக்களும். கல் தூணும்

ஒவ்வொரு நாளும் பசுக்கள் மேய்வதற்கு ஓட்டிச் செல்லப்படுவது வழக்கம். மாடுகள் ஒரு சில மணி நேரம் மேய்ந்த பின்னர் தமது கழுத்தைத் தேய்த்துக்கொள்ள மாடு மேய்ப்பவனைச் சுற்றி நிற்கும். இதற்கு அவன் ஒரு வழி கண்டுபிடித்தான். மேல்பாகம் சொரசொரப்பாக உள்ள கல்தூணில் மாடுகள் தமது கழுத்தைத் தேய்த்துக்கொள்ளுமாறு செய்தான். மாடுகள் அப்படியே செய்து திருப்தி அடைந்தன. மாட்டு இடையன் இதை மகிழ்ச்சியுடனும், திருப்தியுடனும் பார்த்துக் கொண்டிருந்தான்.

இதுபோல, ஜீவன்முக்தர் ஆத்மஞானம் பெறுவதற்கான வழியில் உயிர்களைப் பயிற்றுவிக்கிறார். சாதகர்களால் 24 மணி நேரமும் தியானத்தில் அமர்ந்திருக்க இயலவில்லை. ரஜோ குணம் தலையெடுக்கிறது. அவர்கள் அமைதி இழக்கின்றனர். உடல் அரிப்பெடுக்கிறது. அதனை திருப்திப்படுத்த சாதகர்கள் முயற்சிக்கின்றனர். ஆகவே ஜீவன்முக்தர் ஒரு நிறுவனத்தைத் தோற்றுவிக்கிறார். சாதகர்கள் இந்த நிறுவனத்தின் பணியில் தீவிர ஈடுபாடு கொள்ளுகின்றனர். அவர்கள் பெருமளவுக்கு திருப்தி அடைகின்றனர். ஜீவன்முக்தர்

இதனை மகிழ்ச்சியுடனும், திருப்தியுடனும் பார்த்துக்கொண்டிருக்கிறார். இந்த விளையாட்டினை பேரானந்தம் கொண்ட சாக்ஷியாக இருந்து காணுகிறார். சாதகர்களுக்காகவே இந்த நிறுவனம் தோற்றுவிக்கப்பட்டது. ஜீவன்முக்தருக்கு இதில் எந்தவிதப் பற்றும் இல்லை.

## பகுதி இரண்டு : மற்ற சிறுகதைகள்

## 81. மன்னன் ஜனகனும் பண்டிதர்களும்

சில பண்டிதர்கள் மன்னன் ஜனகனைக் குறை கூறினர்:

''மன்னன் ஜனகன் ஒரு உலகியல் மனிதன். அவன் எப்படி ஒரு ஞானியாக அல்லது ஒரு ரிஷியாக ஆக முடியும்?''

மன்னன் ஜனகன் அவர்களுக்குப் பாடம் புகட்ட விரும்பினான். எல்லாப் பண்டிதர்களையும் அவன் வரவழைத்தான். அவர்களுக்கு நல்ல விருந்து அளித்தான். ருசியான பண்டங்கள் பரிமாறப் பட்டன. பண்டிதர்கள் அனைவரும் மகிழ்ச்சியாக இருந்தனர். ஆனால் அவர்கள் ஆச்சரியப்படும் வகையில் அவர்கள் தலைக்குமேல் ஒரு வாள் தொங்குவதையும் அது ஒரு தலை முடியில் கட்டப் பட்டிருப்பதையும் கண்டனர். அவர்கள் அஞ்சி நடுங்கினர்.

அவர்கள் அனைத்தையும் கலந்து வேகமாக உணவு உட்கொண்டனர்.

விருந்து முடிந்ததும் அவர்கள் மன்னரின் அவைக்கு வந்தனர். மன்னன் ஜனகன் பேசினான்:

''பண்டிதர்களே, இன்று எந்தெந்த உணவுப் பண்டங்களை உட்கொண்டீர்கள்? அவை நன்ருக, ருசியாக இருந்ததா?

பண்டிதர்கள் பதிலளித்தார்கள்:

''எங்கள் மனமெல்லாம் தலைமுடியில்தான் இருந்தது, எங்களுக்கு எதுவும் தெரியாது''.

ஜனகன் பதிலளித்தான்,

''பண்டிதர்களே, என் மனநிலையும் இப்படிப் பட்டதாகவே உள்ளது; என் மனம் பிரம்மாவிடத்தில் லயித்திருக்கிறது. எனக்கு இந்த உலக சம்பந்தமான எதைப்பற்றியும் தெரியாது''.

பண்டிதர்கள் வெட்கித் தலை குனிந்தனர்.

ஜீவன்முக்தரின் நிலையை அவர்கள் உணர்ந்து கொண்டனர். ஜீவன் முக்தர்கள் வாழ்வின் சாதாரணக் கடமைகளை நிறைவேற்றிக் கொண்டிருப்பதுபோலத் தோன்றும் ஆனுல் அவரது மனம் உலகில் இல்லை. அது பரம்பொருளுடன் ஒன்றி விட்டது.

## 82. கிழவியும் ஊசியும்

ஒரு கிழவி வீட்டுக்குள் ஊசியைத் தொலைத்து விட்டாள். ஆனுல் அவள் அதனை வாசலில் தேடினுள். அதுவும் நிலவொளியில் தேடினுள். ஒருவன் அவளிடம் பின்வருமாறு கேட்டான்:

''பாட்டி!, நீ எதனைத் தேடிக்கொண்டிருக்கிருய்?''

அவள் பதிலளித்தாள்;

''நான் வீட்டுக்குள் ஒரு ஊசியைத் தொலைத்து விட்டேன், உள்ளே இருட்டாக இருக்கிறது; ஆகவே, அதை நான் வெளியில் தேடுகிறேன்''.

உலகியல் வாழ்வில் உழலுபவர்கள் இந்தக் கிழவியைப் போலவே உள்ளனர்.

அவர்கள் எந்தப் பொருளிடம் உண்மை இன்பம் இல்லையோ, அந்தப் பொருளையே தேடு கின்றனர் ஆத்ம பரிசோதனை செய்யுங்கள். மனத்தைக் கட்டுப்படுத்துங்கள். உங்கள் தாகத்தைத் தணிக்கும் பொருளை உங்கள் சொந்த ஆத்மாவில் காண்பீர்கள்.

## 89. மாமியாரும் பிச்சைக்காரனும்

ஒரு வீட்டிற்கு ஒரு பிச்சைக்காரன் வந்தான். வீட்டில் மாமியார் இல்லை; மருமகள் இருந்தாள். பிச்சைபோட மருமகள் மறுத்து விட்டாள், பிச்சைக்காரன் அங்கிருந்து போய்விட்டான். மாமி யார் அவனை வழியில் கண்டாள். அவளது மரு மகள் பிச்சைபோட மறுத்துவிட்டது பற்றி அவளிடம் பிச்சைக்காரன் கூறினான். ''அப்படிச் சொல்ல அவளுக்கு என்ன உரிமை இருக்கிறது?'' என்று மாமியார் கர்ஜித்தாள். ''என்னுடன் வா'' பிச்சைக்காரன் மீண்டும் அந்த வீட்டுக்கு வந்தான். நிறைய உணவு கிடைக்கும் என்ற ஆவலுடன் அவன் வந்தான். அவள் வீடு சேர்ந்ததும் திரும்பி நின்று பிச்சைக்காரனைப் பார்த்து, ''போ, போ உனக்கு நான் பிச்சை இடமாட்டேன். ஆனால் இப்படி மறுப்பதற்குக்கூட, இந்த வீட்டில் எனக்குத் தான் உரிமை இருக்கிறது -எனது மருமகளுக்கு அந்த உரிமை இல்லை'' என்று கூறினாள்.

இதுபோல ஒரு மனிதன் வெறுப்பின் காரண மாக உலகப் பொருட்களில் நாட்டமின்றி இருக் கின்றான். பிறகு குரு அவனைப் பார்த்து. ''நீ செயலற்றிருக்கக் கூடாது; உலகைத் துறக்கக் கூடாது'' என்று சொல்லுகிறார். உலகில் தீவிரமாகச் செயல்பட வேண்டும் என்றும், உலகம் என்பது உண்மை என்றும் அவர் உபதேசம் செய்கிறார். ''நீ எல்லோருக்காகவும் பணி செய். அனைவரிடத்திலும் அன்பு செலுத்து. அனைவருக்கும் தொண்டு செய்'' என்று அவர் உபதேசிக்கிறார். 'பலர்' இருப்பது போன்ற எண்ணத்தில் அவர் இப்படிப் பேசுகிறார், காலப் போக்கில் சாதகன் ஆத்ம ஞானம் பெறுகிறான். பிறகு, உலகியல் பந்தங்களை விடுத்து உண்மை யிலேயே உலகைத் துறக்கிறான். ஒரே பரம் பொருளைப்பற்றிய விழிப்புணர்வில் அவன் மூழ்கி விடுகிறான். இங்கு துறவு, ஆத்ம ஞானத்தினால் ஏற்பட்டது. இப்போது உலகைத் துறக்க அவனுக்கு அதிகாரம் இருக்கிறது, அவனால்தான் உலகையும், அனைத்துச் செயல்களையும் துறக்க முடியும். அனைவரிடத்திலும் ஒரே ஆத்மா இருப் பதை அவன் உணருகிறான். சாதகனுக்கு அஞ்ஞான வைராக்கியம் ஏற்படுகிறது. உலகின் துன்பமய மான இயல்பு இத்தகைய வைராக்கியத்தைத் தோற்றுவிக்கிறது. துறவி ஞான வைராக்கியம் உடையவராக இருக்கிறார். ஆத்மாவின் உண்மைத் தன்மையை உணர்ந்து கொள்ளுவதன் மூலம் இந்த ஞான வைராக்கியம் ஏற்படுகிறது. ஆத்மா ஒன்றே. அது பிளக்க முடியாதது. அது எங்கும் பரந்திருக்கும் விழிப்புணர்வு; அகத்தே உறையும் பரம்பொருள். இதனை உணர்ந்துகொண்ட துறவி வேறு எதனையும் விரும்புவதில்லை.

# 84. இளைஞன் பெற்ற வரம்

ஒருமுறை இளைஞன் ஒருவன் ஒரு கோயிலுக்கு அருகில் வசித்து வந்தான். ஆலயத்தில் பிரசாதம் பெறுவதற்காகவும், ஆலய மணியை அடிப்பதற்காகவும் அவன் இறைவனிடம் அன்பு செலுத்தினான். அந்த அன்பு கள்ளங்கபடமற்ற அன்பு; இனம் புரியாத அன்பு. சிற்பமாகச் செதுக்கப்பட்ட கல்லைத்தான் அவன் இறைவன் என்று எண்ணிக் கொண்டிருந்தான், ''இறைவா நான் விரும்புவதையெல்லாம் எனக்குக்கொடு, நான் விரும்பும் போதெல்லாம் எனக்குக் கொடு, நான் எப்போதும் மகிழ்ச்சியுடன் உன்னையே நினைத்துக்கொண்டிருப்பேன்'' என்று அவன் இறைவனிடம் பிரார்த்தனை செய்வான். வேறு எந்த முறையிலும் பிரார்த்தனை செய்ய அவனுக்குத் தெரியாது.

இளைஞனின் குற்றமற்ற, திறந்த மனதுடன் செய்யப்படுகிற பக்தி குறித்து இறைவன் மகிழ்ச்சி அடைந்தார். ஒரு நாள் கடவுள் இளைஞனின் கனவில் தோன்றினார், "இளைஞனே, உனக்கு என்ன வரம் வேண்டும்? பணியிலிருந்து ஓய்வுபெறுகிற வரை உன் விருப்பம்போல வாழ விரும்புகிறாயா? அப்படிச் செய்தால் உன் ஓய்வுக்கால வாழ்க்கையில் உனக்கு யாரும் உதவமாட்டார்கள், இத்தகைய வாழ்க்கை வேண்டுமா? அல்லது ஒரு நாளைக்கு ஒரு கவளம் உணவு, போதிய அளவுக்கு ஆடைகள் மற்றும் தங்குமிடம், இவற்றுடன் ஆண்டியாக வாழ விரும்புகிறாயா?'' என்று கேட்டார். இளமையின் இயல்பு அவன் கண்ணை மறைத்தது ''பிரபு, முதலில் சொன்னதையே எனக்குத் தந்து அருள்புரியுங்கள்.'' என்று இளைஞன் சொன்னான். இறைவனும் அப்படியே வரம் அளித்தார். இளைஞன் அளவிலா மகிழ்ச்சி அடைந்தான்.

தேவைப்படும்போது தேவையான அனைத்தையும் பெற்று ஆனந்தமாக இருக்கலாம் என்று அவன் எண்ணினான். அப்பாவி? அவன் ஒரு நாள் இறைவனிடம், ''பிரபு எனக்குத் தடைகள் ஏதுமின்றி நல்ல கல்வி அறிவைக் கொடுங்கள்'' என்று கேட்டான். இறைவன் அப்படியே தந்து அருளினார்.

மீண்டும் அவன் இறைவனை அழைத்தான். ''பகவான்! எனக்கு தினமும் மைசூர் பாக், வங்காள ரசகுல்லா, சந்தில்லா லட்டு, ரிஷிகேஷ் கீர், மசூலா ஜிலேபி ஆகியவற்றில் வகைக்கு அரை கிலோ எனக்குக் கிடைக்குமாறு செய்ய வேண்டுகிறேன்'' என்றான். ''அப்படியே ஆகட்டும். இந்த வினாடியே அவை உனக்குக் கிடைக்கும்'' என்று இறைவன் அருள் புரிந்தார். இளைஞன் மூன்றும் முறையாக இறைவனை அழைத்தான். ''இறைவா, நான் மனைவி மக்களுடன் இல்லற இன்பத்தை அனுபவிக்க விரும்புகிறேன். நான் அவசியமாகத் திருமணம் செய்துகொள்ள விரும்புகிறேன். எனது உடல் இன்பத்தை அனுபவிக்க அருள்புரிய வேண்டும்'' என்று கேட்டான். இறைவன் அதையும் தந்து அருளினார்.

சிறிது காலம் கழித்து, ''இனிய இறைவா! நான் பத்ரிநாத் செல்ல விரும்புகிறேன் தயவு செய்து அதற்குத் தேவையான அனைத்தும் தந்தருளப் பிரார்த்திக்கின்றேன்'' என்று இளைஞன் கேட்டான். இறைவன் பதிலளித்தார்: ''அப்படியே ஆகட்டும். பாத்திரங்கள், ஆடைகள், பணம் மற்றும் உனக்குத் தேவைப்படும் அனைத்தையும் இதோ தருகிறேன், எடுத்துக் கொள்''.

பக்தன் கர்வம் கொண்டான். இப்போது இறைவனுக்கே அவன் கட்டளையிடத் துவங்கினான், ''தேவதேவா! என்னை உனது எஜமானனாக ஆக்கு'' என்றான் இளைஞன். இதை முன்பே அறிந்து கொண்ட இறைவன் இளைஞனுக்குக் காட்சி தர வில்லை. அவனுக்கு இந்த வரத்தைத் தராமல் தட்டிக் கழிக்கவே இப்படிச் செய்தார்.

ஆண்டுகள் இவ்வாறு உருண்டு ஓடின. அவனது ஆசைகள் எந்த அளவுக்குப் பூர்த்தி செய்யப் பட்டனவோ அந்த அளவுக்கு அவன் மேலும் பல ஆசைகளைத் தெரிவித்தான். ஓய்வுக்காலம் நெருங் கியது. அவன் மனதைத் தன்பால் இழுக்க இறைவன் விரும்பினார். அவன் முன்பு பெற்ற வரத்தை மறக்குமாறு செய்தார். ''இறைவா, என் ஆயுள் குறைகிறது, என் மனைவி மூப்பு அடைந்து, மெலிந்து போய்விட்டாள். அவளால் நடமாட முடியவில்லை. காது சரியாகக் கேட்க வில்லை. எனது குழந்தைகள் வெளிநாடு சென் றிருக்கின்றனர். ஆயினும், எனக்கு இன்னும் சில ஆண்டுகளே மீதம் இருக்கிறபடியால் வாழ்க்கையை அனுபவிப்பதில் மனம் ஈடுபடுகிறது. இந்த உடலை விட்டுப் போவதற்கு முன்பாக வாழ்க்கையை நன்கு அனுபவிக்க நான் விரும்புகிறேன்'' என்று அவன் கூறினான். இறைவன் அப்படியே ஆகட்டும்'' என்று அருள் புரிந்தார். மீதமுள்ள வாழ்க்கை வீணாகிவிடக்கூடாது என்ற நோக்கத்துடன் அவன் விழிப்புணர்வற்ற வீணான வாழ்க்கை வாழ்ந்தான். புலன் இன்பத்தை அனுபவிக்கும் அவனுக்கு இரவு பகல் தெரியவில்லை. புலன் இன்பத்தை அனுபவிப்பதற்காகவே அவன் வாழ்க்கையை விரும் பினான். ஆனால், விரைவிலேயே, குணப்படுத்தப் படமுடியாத நோய் அவனைப் பற்றிக்கொண்டது. அழுது, புலம்பி ஓலமிடுவது அவனுடைய தினசரி

நடவடிக்கைகளாக ஆகிவிட்டன. எவரும் அவனுக்கு அருகில் வரவில்லை. அவனுக்கு உதவி செய்யவில்லை, முதுமையின் காரணமாக அவனுக்கு மறதி ஏற்பட்டது; மனவலிமை குன்றியது. அந்தக் கொடிய நாட்கள் நெருங்கி வந்தன.

அவன் அழுது புலம்பினான். இறுதியில் தனது கிராமத்திலிருந்து சற்றுத் தொலைவில் உள்ள ஆற்றுப் பாலத்திலிருந்து குதித்து பாலத்துக்கு அடியில் ஓடும் ஆற்றில் மூழ்கித் தற்கொலை செய்து கொள்ள அவன் தீர்மானித்தான். நள்ளிரவில் ஆற்றுப் பாலத்துக்குப் புறப்பட்டான். இருளில் தடுமாறிக்கொண்டு சென்றான். கனவில் வந்த இறைவன் அருளுவதாகச் சொன்ன மற்றொரு வகைப்பட்ட வாழ்க்கையைப் பின்பற்றாமல் போனேனே என்று நினைத்து அவன் வருந்தினான். இறைவனை இதயப் பூர்வமாக வணங்கிவிட்டு ஆற்றில் குதிக்கப் போனான். அப்போது யாரோ தன்னைப்பிடித்து இழுப்பது போலத் தோன்றியது. அவன் பின்னே பார்த்தான். யாருமில்லை. வலது பக்கமும், இடதுபக்கமும் பார்த்தான். யாருமில்லை. வெறியுடனும், வெறுப்புடனும், கவலை மற்றும் ஏமாற்றத்தின் பிரளயத்துடனும் அவன் சுற்றிலும் பார்வையைச் செலுத்தினான். சற்றுத் தொலைவில் பெரும் ஜோதி தெரிந்தது. அந்த ஜோதியில் அவன் தன்னை ஐக்கியப்படுத்தும் வகையில் அது அவனை காந்தம்போல ஈர்த்தது. ஏன் இப்படி நிகழுகிறது என்பது அவனுக்குத் தெரியாது. யாரோ அழைப்பதுபோல அவனுக்குத் தெரிந்தது. அவன் இப்போது அந்த ஜோதியை நோக்கி நடக்கத் தொடங்கினான். அவன் தன்னை மறந்து வேகமாகச் சென்றான். அவன் முன்னே செல்லச் செல்ல ஜோதியின் வெளிச்சம் மென்மேலும் பிரகாசமாகத் தெரிந்தது. அவன் எவ்வளவு

நடந்தபோதிலும் ஜோதி தொலேவிலேயே தெரி கிறது. வழியில் காலில் ஏதோ வளைந்து நெளிந்து தென்பட்டது. அவன் பாம்பு என்று நினைத்தான், தீக்குச்சியைக் கொளுத்திப் பார்த்தான். அது பாம்பு அல்ல கயிறு, அந்தோ! இறப்பதற்குக் கிடைத்த மற்ெருரு வாய்ப்பும் வீணுயிற்றே என்று அவன் தன்னையும் இறைவனையும் நொந்துகொண் டான். அவன் தொடர்ந்து நடந்தான். பொழுது விடியும் நேரம் நெருங்கிக் கொண்டிருந்தது. அருகில் ஒரு கிணறு தெரிந்தது. அதில் விழுந்து தற்கொலை செய்து கொள்ள எண்ணினுன். அப்போது ஜோதி மறைந்தது. அங்கே ஒரு குடிசைக்கு உள்ளேயிருந்து ஒரு துறவி வந்தார். அவர் முகத்தில் தேஜஸ் நிரம்பியிருந்தது. அவர் சொன்னுர்; ''வாழ்க்கை தற்கொலை செய்து கொள்வதற்காக அல்ல. உன் வாழ்வை முடித்துக் கொள்ளத் துணிந்த உனது அறியாமையை எப்படி வர்ணிப்பது? இத்தகைய எண்ணத்தைக் கைவிடு. விரும்பியதையெல்லாம் பெற்று வயதான காலத்தில் உதவி எதுவும் பெறமுடியாத வாழ்க்கை வேண்டுமா? ஆசைகள் இல்லாத துறவு வாழ்க்கை வேண்டுமா என்று ஒரு நாள் இரவு உன்னிடம் கேட்டேன். நினைவிருக்கிறதா? இப்போதாவது மனந்திருந்து. ஆசை உடைய மனிதன் என்றும் அமைதி பெறுவதில்லை. காலம் செல்லச்செல்ல ஆசையின் அளவு அதிகரித்துக் கொண்டே செல்லுகிறது, ஆசைகளைப் பூர்த்தி செய்வது என்பது துறவின் மூலமே சாத்தியமாகும். நான் உன்னைக்கண்டு பரிதாபப்படுகிறேன். அதோ சற்று தொலைவில் தெரிகிற ஆற்றில் குளித்துவிட்டு வா, இது பிரம்மமுகூர்த்தம் விரைந்து வா. பிரம்ம ஞானத்தை நான் உனக்கு உபதேசம் செய்கிறேன். அப்போது ஆசைகள் மற்றும் நோயிலிருந்து விடுபட்டு நீ என்னுடன் ஒன்றிவிடுவாய். என்

அருகில் அமர்ந்து பிரார்த்தனை செய். பேரானந்தப் பரம் பொருளாகச் சுடர்விட்டு ஒளி பரப்பு''.

இப்படிச் சொல்லி அவனை ஆற்றுக்கு அனுப்பிய சாது அங்கிருந்து மறைந்தார். ஆற்றில் குளித்து விட்டு வந்த மனிதன், குடிசையையோ, துறவியையோ காணவில்லை. அந்த இடத்தில் ஒரு ஹம்ஸ தண்டம், ஒரு கமண்டலம், ஒரு கௌபீணம் மற்றும் ஒரு மான்தோல் ஆகியவை ஒரு தீக்குழிக்கு அருகில் வைக்கப்பட்டிருந்தன. அவன் சாதுவை தேடித் தேடி அலைந்தான். ஆனால் சாது கிடைக்கவில்லை. அவன் விரக்தி அடைந்தான். அவனுக்கு என்ன செய்வதென்று புரியவில்லை. திடீரென்று ஆகாயத்திலிருந்து அசரீரி கேட்டது: இனிய அன்புக்குரிய ஆத்மாவே, துன்பப்படுகிறவர்கள் எங்கிருந்தாலும் நான் அவர்களுக்கு எனது ஜோதி ஸ்வரூபத்தின் மூலம் உதவி செய்கிறேன். பாலத்திலிருந்து நீ பார்த்த ஜோதி நான்தான். நானே நீ. ஆனால் நீ நானல்ல. நான் உன்னில் இருக்கிறேன், நான் உன்னுடன் இருக்கிறேன். நான் உன்னைச் சுற்றிலும் இருக்கிறேன். அஞ்சாதே, என்னை எப்போதும் நினைவுபடுத்திக்கொள். நீ என்னை நோக்கிவர நான் உனக்கு வழி காட்டுவேன். நீ கூனிக் குறுகுவதற்குக் காரணம் எதுவுமில்லை. உனது மனநிலைபற்றி எனக்குத் தெரியும் உன்னை என்னுடன் இணைத்துக்கொள்ள விரும்புகிறேன். நீ கண்ட ஜோதி ஸ்வரூபம் நான்தான்.

அங்கிருந்த பொருள்களைப்பார்த்து அவன் இறைவனுடைய விருப்பத்தை உணர்ந்துகொண்டு துறவு பூண்டான். ஓம் என்னும் பிரணவ மந்திரத்தை ஜபம் செய்து இறைவனுடன் இரண்டறக் கலந்தான்.

## 85. சாதுவும் வாளும்

ஒரு மன்னன் ஒரு காட்டின் வழியாகப் போய்க் கொண்டிருந்தான். வெய்யிலில் அவனுக்குக் கடுமை யான தாகம் எடுத்தது. மன்னன் குளிக்கவும் விரும்பினான். அருகில் ஒரு ஆசிரமம் இருந்தது. அங்கு ஒரு துறவி தவம் செய்து கொண்டிருந்தார். அந்த துறவியைப் பார்த்து, ''மகராஜ் அருகில் ஆறு ஏதாவது இருக்கிறதா? நான் குளிக்க விரும்புகிறேன்'' என்று மன்னன் கேட்டான்.

''ஆம், ஒரு நூறு கெஜ தூரத்தில் இந்த ஆசிரமத்திற்கு கிழக்கே ஒரு ஆறு ஓடுகிறது—அதன் தண்ணீர் குளிர்ச்சியாக இருக்கும்; களைப்பைப் போக்கும். தயவு செய்து அங்கே சென்று குளித்து விட்டு வாருங்கள். அந்த ஆறு புனித நதி. உங்களை அது தூய்மைப்படுத்தும்''.

''மகராஜ் அப்படியானால் என்னுடைய பொருட்களை இங்கு வைத்துவிட்டு செல்லவா? இவற்றைச் சுமந்து செல்வது தேவையற்றது அல்லவா?''

''சரி உங்களுடைய பொருட்களை இங்கே விட்டுச் செல்லுங்கள். ஆமாம், அது என்ன மின்னுகிறது. அது என்ன?'' என்று தங்கமுலாம் பூசப்பட்ட உடைவாளைப் பார்த்து அவர் கேட்டார்.

''மன்னன் உறையிலிருந்து உடைவாளை உருவி துறவியிடம் காட்டினான். துறவி குழந்தை மனத் துடன் அதை ஆச்சரியத்துடன் பார்த்தார், துறவி தனது ஆயுள் காலத்தில் வாளைப் பார்த்திருக்க மாட்டார் என்று மன்னனுக்குத் தோன்றியது, வாளை துறவியிடம் கொடுத்து ஜாக்கிரதையாக வைத்திருங்கள் என்று சொல்லிவிட்டுச் சென்றான்.

அந்தத் தவசீலர் வாளைப் பற்றிய ஆராய்ச்சியில் ஈடுபட்டார். வாளை உறையிலிருந்து எடுத்துத் தரையில் வைத்தார். அவர் உட்கார்ந்திருந்த புல் படுக்கையை வாள் வெட்டியது. தவசீலருக்கு ஆவல் அதிகமாயிற்று, வாளைக் கையில் எடுத்து அவருக்கு எதிரில் இருந்த முலாம்பழம் ஒன்றை வெட்டினார். அது இரண்டாகப் பிளந்தது, ஆஸ்ரமத்துக்கு முன்பாக இரு மான்கள் விளையாடிக் கொண்டிருந்தன. இந்தத் தவசீலர் வாளை அவற்றின் மீது எறிந்தார். அது ஒரு மானைத் தாக்கியது. அந்த மான் அந்த இடத்திலேயே இறந்தது. இந்த நேரத்தில் மன்னன் ஆற்றில் குளித்துவிட்டு வந்தான். தவசீலர் வாளைத் தவருகப் பயன்படுத்தியதற்காக அவன் கோபமுற்றான். மன்னன் தனது க்ஷத்திரிய குல இயல் பின்படி சில கடுமையான வார்த்தைகளால் துறவியைக் கடிந்து கொண்டான். துறவி, வாளேந்திய கையுடன் மன்னனை நோக்கி ஓடினார், ஆனால் மதிநுட்பம் உடைய மன்னன் துறவியின் வாளேந்திய கையை அம்பு எய்து துண்டித்துவிட்டான். பிறகு துறவி தான் செய்த பெருந்தவறை உணர்ந்தார்.

ஒரு யோகி தியானத்தில் தீவிரமாக ஈடுபடுகிறார். அவர் ராஜயோகத்தில் வளர்ச்சி பெறுகிறார், சிறிது பயிற்சிக்குப் பிறகு ராஜயோகம் அவருக்கு அற்புதமான சக்திகளைத் தருகிறது. மிகச் சிறிய, ஆபத்தில்லாத பணிகளுக்கு இந்த சக்திகளை அவர் பயன்படுத்துகிறார். சிறிய நோய்களிலிருந்து யோக சக்தியின் மூலம் விடுபடலாம் என அவர் கண்டுபிடிக்கிறார். கொடிய விலங்குகள் தனக்குத் தொல்லை தராத அளவில் அவற்றைத் தமது கட்டுப்பாட்டில் வைத்திருக்கிறார். சில மனிதர்களை அவர் தன்வயப்படுத்திக் கொள்ளுகிறார். தன் சொற்படி

நடக்குமாறு செய்கிறார். ஆத்ம சக்தியால் அவர் ஒரு அனுபவத்திலிருந்து மற்றொரு அனுபவத்துக்கு முன்னேறிச் செல்லுகிறார். ஆத்ம சக்தி அளவிடற்கரியது என்பதை அவர் உணருகிறபோது அவர் ஆத்ம சாதனையை நிறுத்துகிறார்; தவம் செய்வதை விட்டுவிடுகிறார். மாயையில் மூழ்குகிறார் இப்போது யோகத்தின் கழுத்தையும் வெட்டி எறிய அவர் ஆயத்தமாக இருக்கிறார். அவர் தனக்கு ஆத்ம சக்தியைத் தந்த ஆன்மீகப் பயிற்சியையே வெறுத்து ஒதுக்குகிறார். ஆனால் உரிய நேரத்தில் இறையருள் அவருக்குள்ளே பாய்ந்து வந்து ஆத்ம சக்தியைப் பயன்படுத்தும் தீய குணங்களைப் போக்குகிறது. யோகி தான் செய்த பெருந் தவறை உணர்கிறார். அதற்குப் பிறகு ஆத்ம சக்தியைப் பயன்படுத்துவதில் அவர் நாட்டம் கொள்ளுவதில்லை. பிறகு அவர் உன்னத அமைதியினை அடைகிறார்.

## 86. மணி பார்க்கத் தெரியாத சிறுவன்

ஒரு மனிதன் ஒரு சிறுவனைப் பார்த்து ''தம்பி, இப்போது மணி என்ன? சொல் பார்க்கலாம்'' என்று கேட்கிறார்.

''மாமா, எனக்கு மணி பார்க்கத்தெரியாது.''

''அப்படியா, எவ்வளவு நாட்களாக நீ இந்த அறியாமையில் மூழ்கியிருக்கிறாய்?''

சிறுவன் மௌனமாக இருந்தான். அவனால் பதிலளிக்க முடியவில்லை, ''கடவுளுக்குத்தான் தெரியும்'' என்று சொல்லிவிட்டு அவன் மௌனமாக இருந்தான்.

அறிவிற் சிறந்தவர்கள் என்று தம்மைக் கருதிக் கொண்டிருக்கும் சிலர் மிக எளிய தோற்றமுடைய

துறவிகளைப் பார்த்து, ''எவ்வளவு காலமாக பொய் உண்மையை மறைத்துக்கொண்டிருக்கிறது? அல்லது எவ்வளவு காலமாக அஞ்ஞானம் குடி கொண்டிருக்கிறது?'' என்று கேட்கின்றனர். இந்தக் கேள்விகளுக்கு பதில்சொல்ல முடியாது. அவை பதில்களுக்கு அப்பாற்பட்டவை. சிறிய மனம் இவற்றுக்கு பதில் சொல்ல முடியாது மௌனமே பதில், ''கடவுளுக்கே தெரியும்.''

## 87. பறவையும் பருத்திப் பழமும்

ஒரு பருத்திச் செடியின் கிளை ஒன்றில் ஒரு பறவை கூடு கட்டியிருந்தது. அதன் கூட்டுக்கு அருகில் ஒரு கனியாத பழம் ஒன்று இருந்தது. பறவை ஒவ்வொரு நாளும் அதைப் பார்க்கும். ''அது பழுக்கட்டும், பிறகு தின்கிறேன்'' என்று சொல்லும். பல நாட்கள் இவ்வாறு காத் திருந்தது. ஒருநாள் அது ஆவலுடன் பழத்தைப் பார்த்துக் கொண்டிருக்கும்போது அது திடீரென்று வெடித்தது. அதனுள் இருந்தவை சிதறிப் போயின. பறவை பரிதாபமாக ஏமாந்தது.

ஒரு இளைஞன் முதுமைப் பருவத்தில் ஆன்மீகப் பயிற்சியில் ஈடுபடலாம் என எண்ணுகிறான். நாட்கள் உருண்டோடுகின்றன திடீரென்று ஒருநாள் உயிர் உடலைவிட்டுப் பிரிகிறது. அவன் வாழ்க்கையை வீணாக்கி விட்டான்.

ஆகவே, செய்யவேண்டியதை இப்போதே செய்.

## 88. மலைப்பாம்பின் வாயில் அகப்பட்ட மனிதன்

இரு மனிதர்கள் காட்டு வழியில் நடந்து போனார்கள். ஒருவன் மற்றொருவனைவிட

ஒரு பர்லாங் தூரம் முன்னே சென்றான். அப்படிச் சென்றுகொண்டிருந்தவனை திடீரென்று மலைப் பாம்பு ஒன்று விழுங்கியது. அவனது உடலில் பாதி பாம்பின் வயிற்றுக்குள் இருக்கிறது. பின்னால் வந்த மனிதன் தயங்கியவாறு நின்று விட்டான். பாம்பினால் விழுங்கப்பட்ட மனிதன் மற்றொருவனைப் பார்த்து, ''ஏ முட்டாள்! ஏன் தயங்கிக்கொண்டு நிற்கிறாய்? வா, உனக்கு வழிகாட்டவும் உன்னைப் பாதுகாக்கவும் நான் இருக்கிறேன்'' என்று கூறினான்.

இதுபோல, மனிதனை மாயை என்னும் மலைப் பாம்பு பிடித்துக்கொண்டிருக்கிறது. அவனை அது விழுங்கிக்கொண்டிருக்கிறது. ஆயினும் அவன் தன்னால் மற்றவர்களைக் காப்பாற்ற முடியும் என்றும் மற்றவர்களுக்கு வழிகாட்டி பாதுகாப்பு மற்றும் மகிழ்ச்சியின் இருப்பிடத்துக்கு அழைத்துச் செல்ல முடியும் என்றும் கூறுகிறான். அந்த அளவுக்கு மாயை அவனை வசப்படுத்தியிருக்கிறது.

## 89. சிறுவனும், தேவதூதனும்

ஒரு சமயம் நல்ல மாணவன் ஒருவன் இருந்தான். அவன் கடுமையாக உழைத்துப் படிப்பான். அவன் நள்ளிரவுவரை படிப்பான். அவன் ஒரு ஏழை. புத்தகம் வாங்கவும், இரவில் படிப்பதற்கு எண்ணெய் வாங்கவும் அவன் கடுமையாக உழைக்க வேண்டியிருந்தது. ஒரு நாள் அவன் அதிகக் களைப்புற்றிருந்தான். ஆகவே, இரவில் படித்துக்கொண்டிருக்கும்போதே உறங்கிவிட்டான். அவன் கனவில் ஒரு அதிசயமான காட்சியைக் கண்டான். ஒரு தேவதூதன் அவன் முன்வந்து நின்று, ''தம்பி, உன்னுடைய வாயைத்திற. உலகின் அனைத்து அறிவையும் உள்ளடக்கிய ஒரு மாத்திரையை உன்

வாய்க்குள் போடுகிறேன். இதன்மூலம் நீ எல்லா துன்பங்களிலிருந்தும் விடுபட்டு அமைதி அடைவாய்'' என்று சொன்ஞன். ஆனுல் அந்தப் பையன் பின்வருமாறு பதிலளித்தான்: ''உலகின் அனைத்து அறிவையும் என் வாய்க்குள் போடுவதை நான் விரும்பவில்லை. எனது படிப்புக்குத் தேவையான எண்ணெய் கிடைக்க அருள் புரியுங்கள்'' என்ருன். அந்தக் காட்சி மறைந்தது. அந்தச் சிறுவன் தன் சுய உழைப்பால் அக்காலத்தின் மிகப் பெரிய மனிதர்களில் ஒருவஞக உயர்ந்தான்.

ஒரு சாதகனிடத்திலும் இந்த மாதிரி சுயமாக உழைத்து முன்னேறும் ஆர்வம் இருக்க வேண்டும். அத்தகைய சாதகர்கள் மட்டுமே விரைவாக வளர்ச்சி பெற்று ஞானத்தின் சிகரத்தை அடைவார்கள், தாய் மகனுக்கு உணவு தரலாம், ஆனுல் அந்த உணவை தாய் ஜீரணிக்க முடியாது. மகன் தான் ஜீரணிக்க வேண்டும். ஒரு குரு அல்லது வழி காட்டி சரியான பாதையைக் காட்ட முடியும். ஆனுல் அந்தப் பாதையில் செல்ல விரும்புகிற ஒருவர்தான் நடக்க வேண்டும்.

நீங்கள் எந்த வகையிலும் உழைக்காமல் ஞானம் பெறலாம் என்று எதிர்பார்க்காதீர்கள். ஏனெனில் அப்படிப் பெறும் ஞானம் கனவுக்குச் சமம். உண்மையான உழைப்பின் மூலம்தான் நீங்கள் குரு அல்லது இறைவனின் கருணையைப் பெறமுடியும், துன்பங்களிலிருந்து தப்பிச் செல்லுகிறவன் அவற்றிலிருந்து ஒருபோதும் விடுபடுவதில்லை. ஆனுல் அவற்றைத் துணிவுடன் எதிர்த்துப் போராடுகிற ஒருவன், நாளடைவில் அவற்றைக் கடந்து சென்று உன்னத அமைதி, பேரானந்தம் ஆகியவற்றை இந்த வாழ்க்கையிலேயே அடைந்துவிடுவான்.

## 90. நீரும் நெருப்பும்

ஒருநாள் கங்கைக் கரையில் நெருப்பு தண்ணீரைச் சந்தித்தது. தமக்குள் யார் சக்திமிக்கவர் என்பதில் காலங்காலமாக இருந்துவரும் தகராறைத் தீர்த்துக்கொள்ள அவர்கள் சந்தித்தனர். மிகப்பெரிய தீயையும் அணைக்கும் சக்தி தனக்கு உள்ளது என்பதை நிரூபிக்க பல உதாரணங்களைத் தண்ணீர் சுட்டிக்காட்டியது. சிறிய பாத்திரங்களில் உள்ள தண்ணீரைத் தவிர மற்ற நிலைகளில் உள்ள தண்ணீரை நெருப்பு எதுவும் செய்ய முடியவில்லை என்றும் அது கூறியது.

இந்தச் சிறு குறிப்பு நெருப்புக்குப் போதுமானதாக இருந்தது. தண்ணீருடன் நேரடியாக மோதி வெற்றிபெற முடியாது என்று நெருப்புக்குத் தெரியும். ஆகவே அது தண்ணீரின் நலன்பற்றிப் பேசத் துவங்கியது; "தண்ணீர், தண்ணீர்! உன்னைச் சுற்றி எவ்வளவு அசுத்தம் இருக்கிறது பார்த்தாயா, நீ ஏன் இந்தத் தங்கக் குடத்துக்குள் இருந்துக்கொள்ளக் கூடாது? அப்படி இருந்தால் நீ எப்போதும் தூய்மையாகவும், சுத்தமாகவும் இருப்பாய்?". தண்ணீருக்கு ஆசை வந்தது. தண்ணீர் குடத்துக்குள் சென்றது; உடனே நெருப்பு அதற்குச் சூடேற்றியது தனது சக்தி முழுவதையும் பயன்படுத்தி தண்ணீரை அது கொதிக்க வைத்தது, சிறிதளவு சூடேறிய பின் தண்ணீருக்கு இதமாக இருந்தது. தண்ணீர் சுடுநீராகி அது கொதிநிலையை அடைந்ததும் அது மிகவும் துன்பம் அனுபவித்தது. தனது தவறுக்கு வருந்தியது.

இது ஒரு நீதிக் கதை.

சிவானந்தர் கூறுகிறுர்.

உங்களது தூய எண்ணங்கள், உங்களது விவேகம், உங்களது பகுத்தறிவு, ஏன் உங்களது முமுக்ஷுத்வம் மற்றும் ஆத்மாவின்பால் கொள்ளும் அன்பு ஆகியவை தண்ணீருக்குச் சமம்.

அது தன் வழியில் செல்லும்வரை அதை யாரும் அசுத்தமாக்க முடியாது. அது எப்போதும் தூய்மையாகவும், சுத்தமாகவும் இருக்கிறது. அனைத்தையும் தூய்மையாக்கும் ஆற்றல் அதற்கு இருக்கிறது.

நீங்கள் சதையின்மீது வைத்திருக்கிற அன்பு நெருப்பைப் போன்றது.

நெருப்பு தீவிரத்தன்மை உடையது. சதையின் மீது வைத்திருக்கிற பற்றும் அப்படித்தான்.

அது தண்ணீரைப்போல சக்தி வாய்ந்தது. ஒன்று மற்றொன்றை உடனே அழித்தால் பின்னது முன்னதைத் துன்புறுத்தும் சக்தி உடையது.

மனிதா! நீ முமுக்ஷுத்வம், பகுத்தறிவு, விவேகம் ஆகியவற்றைப் பாதுகாத்துக்கொள். அது எப்போதும் சக்தி வாய்ந்தது.

சதையில் உனக்கு உள்ள பற்று சிறுசிறு வசதிகளை நாடுகிறது. நீங்கள் வசதியாக இருப்பதாக உணருகிறீர்கள். அதே நேரத்தில் வசதியில் பிடிப்பு இல்லாதது போலவும் இருக்கிறீர்கள். தண்ணீர் சிறிது சிறிதாகச் சூடேறியதுபோல வசதிகளும் படிப்படியாக அதிகரிக்கின்றன. உங்களுக்கு அது சுகமாக இருக்கிறது. ஆனால் அது கொதி நிலைக்கு வந்ததும் நீங்கள் உண்மை நிலையினை உணருகிறீர்கள். உங்கள் தவறுக்கு வருந்துகிறீர்கள்.

ஆடம்பரப் பொருட்களுக்கு நீங்கள் முழுமையாக அடிமையாகி விடுகிறீர்கள். காமம், பேராசை என்னும் தீயை அணைக்கும் உங்களது ஆற்றலை நீங்கள் இழந்து விடுகிறீர்கள்.

சுருங்கச் சொன்னால் நீங்கள் உங்களை இழந்து விட்டீர்கள்.

சதையின்மீது நீங்கள் கொண்டுள்ள பற்று, சிறுசிறு வசதிகளை நீங்கள் தேடிக்கொள்ளுமாறு செய்கிறது. ஒவ்வொரு விநாடியும் அது உங்கள் மனத்தையும், புத்தியையும் வேண்டுகிறது, தூண்டு கிறது. ஒருபோதும் அதன் சொல் கேளாதீர், விழிப்புடன் இருங்கள். ஆத்மாவின்மீது உங்க ளுக்கு உள்ள உன்னத சக்தியை உறுதிப்படுத்துங் கள். நீங்கள் பத்திரமாக பாதிக்கப்படாமல் இருப் பீர்கள். பழைய தீய வாசனைகளாகிய கீழான இயல்புகொண்ட நெருப்பு உங்களைச் சுடாது.

## 91. அபினி புகைப்பவர்களும் சந்திரனின் பிரதிபிம்பமும்

பௌர்ணமி அன்று சந்திரோதய வேளையில் அபினி புகைக்கும் மூவர் சிகரெட் பற்றவைக்க நெருப்புக்கு அலைந்தனர். அப்படி அலையும்போது அவர்கள் ஒரு ஆற்றுக்கு அருகில் வந்தனர். சந்திரனின் பிரதிபிம்பம் ஆற்றின் அலைகளுடன் விளையாடிக்கொண்டிருந்தது. அது தீ போலப் பிரகாசித்தது அதனை நெருப்பு எனக் கருதிய மூவரும் கரித்துண்டு ஒன்றை அந்த நெருப்பில் பற்றவைக்க தம்மில் ஒருவனை அனுப்பினர். அவன் ஆற்றின் அருகில் சென்று கரித்துண்டை அலையின் மீது வைத்தான் குளிர்ச்சியாக இருப்பதை உணர்ந்தான். அவன் தோல்வியைத் தழுவிக் கொண்டு திரும்பினான். அவனைப் பார்த்து

மற்ற இருவரும் கடிந்து கொண்டனர். நீ இன்னும் கொஞ்சம் உள்ளே சென்றிருக்க வேண்டும். அங்கேதான் நெருப்பு இருக்கிறது என்றனர். மற்றொருவன் கரித்துண்டைப் பற்ற வைக்கக் கிளம்பினான். அவன் ஆற்றில் இன்னும் கொஞ்சம் உள்ளே சென்றான். அவனும் தோல்வியுடன் வந்தான். மூன்றாவது நபர் ஆற்றின் நடுப் பகுதிவரை சென்றான். தன்னை புத்திசாலி என்று நினைத்துக்கொண்டு அவன் சென்றான். ஆனால் நெருப்பு அங்கு இல்லை. அவனது முயற்சியும் தோற்றது.

இல்வாழ்க்கையின் இயல்பும் இப்படித்தான். மாயைத் தோற்றம் கொண்ட நெருப்பு போன்று இருக்கிறது. அறியாமை என்னும் இருட்டில் அபினி போன்ற ஆசைகளால் தூண்டப்பட்டவர்கள் கணப்பொழுது இன்பத்துக்காக அலைகிறார்கள். ஆசைதான் வினைகளுக்குக் காரணம். அந்த வினையை அனுபவிக்க ஜீவாத்மா உலகில் பந்தப்படுகிறது. புலன் இன்பம் சச்சிதானந்தத்தின் பிரதிபிம்பம். மர்மம் புரியாதவரை ஜீவாத்மா நிழலை நிஜம் என்று நம்பிக்கொண்டு ஓடுகிறது. உலக விஷயங்களை ஒருவன் எவ்வளவோ அறிந்திருக்க லாம்; அது பற்றிய தகவல்களை நிறையச் சேகரித்து வைத்திருக்கலாம். தனது முன்னோர்களைவிடத் தனக்கு நிறையத் தெரியும் என்று பெருமைப் பட்டுக் கொள்ளலாம். ஆனால் அப்படிப் பெருமைப் பட்டுக் கொள்வது வீணானது. கரியில் நெருப்பைப் பற்றவைக்க ஆற்றின் நடுப்பகுதிவரை செல்லு கிறவன் கரையில் இருப்பவனைப் போலவே முட்டாள்தான்.

சந்திரனை அறிந்து கொண்டவன்தான் அறிஞன். பிரதிபிம்பத்தை நிஜம் என்று நினைப்பவன்

அறிஞனல்ல. புலன் இன்பத்தின் பயனற்ற தன்மையும், உலகின் தவருன இயல்பினேயும் நன்கு உணர்ந்திருப்பவனே அறிஞன். அனைத்தும் சச்சிதானந்த மயமானது. அறியாமைதான் வேற்றுமை படுத்துகிறது. அறியாமையைக் கடந்துவருகிற ஒருவன் பிரம்மமாகவே ஆகிவிடுகிருன்.

## 92. கணவனும் மனைவியும்

ஒரு சிறு கிராமத்தில் ஒரு ஏழைத் தம்பதியர் வாழ்ந்து வந்தனர். தமது ஏழ்மைநிலை குறித்து வருந்தும் மனைவி, மற்றவர்களுக்குச் சமமாக வாழ்வதற்குத் தேவையான பொருட்களை சம்பாதித்து வருமாறு கணவனிடம் கூறுவாள். ஆனால் கணவன், ''கடவுள் நம்மை மிகவும் நேசிக்கிருர். ஆகவேதான் வறுமையைத் தந்திருக்கிருர்'' என்று பதிலளிப்பான். காலப்போக்கில் பெண்களுக்கு இயல்பான முகஸ்துதி, மினிக்கிக் குலுக்கல், முதலைக் கண்ணீர் இவற்ருல் மனைவி தன் கணவனை ஒரு அடிமையாக ஆக்கிவிட்டாள். ஒருநாள் ஒரு தாராள மனம் உடைய அவனது நண்பனைப் பார்த்து வருமாறு மனைவி கட்டளையிட்டாள். அன்பளிப்பாகக் கையில் கையளவு நீரை எடுத்துச் செல்லச் சொன்னுள். வேறுவழியின்றி அவனும் அப்படியே செய்தான். இந்த பக்தனின் ஏழ்மையை நன்கு அறிந்த அந்த நண்பன் அன்புடனும் பக்தியுடனும் தீர்த்தம் கொடுத்த கைகளில் நிறையப் பணம் தந்தான். ஆனால் ஏழை மனிதன் தெய்வீகத் தன்மையை மறந்து விட்டான். ''கையளவு தண்ணீர் கொடுத்தால் கையளவு பணம் கிடைக்கும் என்ருல் பானை நிறையத் தண்ணீர் கொடுத்திருந்தால் எனக்கு எவ்வளவு பணம் கிடைத்திருக்கும்?'' என்று எண்ணத் தொடங்கினுன்.

சிவானந்தர் கூறுகிறார்.

இந்த நீதிக்கதையைப்பற்றிச் சிந்தியுங்கள்.

புத்தி, கணவனைப்போல. உடல், மனைவியைப் போல. அவர்கள் இருவரும் ஆணும், பெண்ணு மாய் மகிழ்ச்சியாக வாழத் தீர்மானிக்கின்றனர்.

வீட்டுக்குத் தேவையான சிறு சிறு பொருட்களை சேகரிப்பது மனைவியின் கடமை. அவள் உலகம் அவற்றைச் சுற்றியே அமைகிறது. அவளை முறை யாக வழி நடத்திச் செல்லவேண்டியது கணவனின் கடமை ஆகிறது. மனைவி முதலைக்கண்ணீர் வடிக் கிறபோது கணவன் அறிவிழந்து அவளைத் திருப்திப் படுத்த முயற்சிக்கிறான். இப்போது அவன் தனது கடமையையும், நேர்மையையும் மறந்து விடுகிறான்.

உடல் சில வசதிக்களுக்காக ஏங்குகிறது. அவை பயனற்றவை என உங்கள் விவேகம் சொல்லு கிறது. ஆனால் உடல் அழுது புலம்பும்போது நீங்கள் அதற்குச் சிறிது சுதந்திரம் கொடுத்து விரும்பியதைத் தேடிக்கொள்ளச் சொல்லுகிறீர் கள். அதைக் கட்டுப்படுத்துவதற்கு பதிலாக அதனை திருப்திப்படுத்துகிறீர்கள். இப்படிச் செய் வதன்மூலம் நீங்கள் அதன் வலையில் சிக்கிக்கொள்ளு கிறீர்கள்.

மனிதா, விழித்தெழு. உனது சுதை, உனது உடல் மீது தோன்றும் பற்றுக்கு விவேகம் அடிமையாக அனுமதிக்காதே. சிறு சிறு சுகங்களுக்காக உடல் விடுக்கும் கோரிக்கைகளை ஈவிரக்கமின்றிப் புறக் கணித்துவிடு. அற்ப சுகங்களை அனுபவிக்க உடலை நீ அனுமதித்துவிட்டால், உனக்கும் அதில் ருசி ஏற்பட்டுவிட்டால், கீழான இயல்பிலிருந்து

விவேகம் உயர்ந்து இருக்குமாறு செய்ய மிகவும் கஷ்டப்படுவாய்.

உடலை நீ விவாகரத்து செய்ய முடியாது. விவேகமும், சிந்தனையும் மனித உடலில்தான் ஏற்படும்.

மனைவி, கணவனுக்கு உடல் இன்பத்தை மட்டும் தருகிற பெண் அல்ல. அவள் இறைவனின் படைப்பில் சிறந்து விளங்குபவள். இறைவனை நீ அறிந்துகொள்ள உனக்கு உதவி செய்பவள்.

இறைவனை அனுபவிக்க இந்த உடலைப் பயன் படுத்திக்கொள். ஆனால் இதற்கு அடிமையாகி விடாதே. நீ விழிப்புடன் இருக்காவிட்டால் உன்னை நீ இழந்துவிடுவாய். கணவன் மனைவி ஆகியோரின் கதையை மீண்டும் படித்துப் பார்.

## 93. செல்லக் குழந்தை

ஒரு தாயாருக்கு ஒரு செல்லக் குழந்தை இருந்தான். அவன் மிகவும் குறும்புக்காரன். ஒரு ஆசிரியரை நியமித்து அவனுக்கு பாடம் சொல்லிக் கொடுக்க தாயார் ஏற்பாடு செய்தாள். அந்த ஆசிரியர் தனது மகனிடம் கடிந்து பேசுவதை அந்தத் தாயார் விரும்பவில்லை. ஆகவே வேறொரு ஆசிரியரை ஏற்பாடு செய்தாள். மாணவன் நலன் கருதி புதிய ஆசிரியர் அவனை அடித்துப் பாடம் சொல்லிக் கொடுத்தார். தனது மகனுடைய பழக்க வழக்கங்கள் நல்லவையாக அமைய வேண்டும் என்றும், அவன் பண்பட வேண்டும் என்றும் அவள் விரும்பினாள். ஆனால் அதற்காக மகனுக்கு தண்டனை கொடுத்துத் துன்புறுத்துவதை அவளால் சகித்துக்கொள்ள முடியவில்லை. மகனைப் பள்ளிக் கூடத்துக்கு அனுப்பவும் அவள் விரும்பவில்லை.

பகலில் சில மணி நேரம் மகனை விட்டுப் பிரிந்திருக்க அவளுக்கு மனம் இல்லை. பையனை ஒரு அழகனாக ஆக்குவதில் அவள் தன் நேரத்தைச் செலவிட்டாள்.

நாட்கள் கடந்தன. ஆண்டுகள் உருண்டோடின. ஒரு ஆசிரியர் மாறி மற்றொரு ஆசிரியர் வந்து போய்க்கொண்டிருந்தனர். ஆனால் பையனின் மூளை மட்டும் அவன் பிறக்கும்போது எப்படி இருந்ததோ அப்படியே இருந்தது. ஆயினும் பையன் அழகிய இளைஞனாக வளர்ந்தான். பிறகு ஒரு மனிதனாகவும் வளர்ச்சி அடைந்தான். அவனால் இந்த உலகில் வாழ முடியவில்லை. ஏனெனில் அதற்குத் தேவையான அறிவோ பணமோ அவனிடம் இல்லை, வேலை செய்யும் சக்தி அவனுக்கு இல்லை. குடும்பம் மற்றும் சமுதாய உறுப்பினர் களுடன் கலந்து பழகும் ஆற்றலும் அவனுக்கு இல்லை. மக்கள் அவனைப் பரிகசித்தனர்; கண்டித் தனர். அவனால் தனக்கும் நஷ்டம்; உலகுக்கும் நஷ்டம்.

சிவானந்தர் கூறுகிறார் :

தாயைப்போல உனது விருப்பம் உள்ளது. உனது உடல் மற்றும் வெளிப் பழக்க வழக்கங்கள் குறும்புத்தனம் உடைய மகனைப் போன்றவை.

மக்கள் மத்தியில் உன்னை ஒரு மகத்தான ஆன்மீக வீரனாகக் காட்டிக்கொள்ள நீ விரும்பு கிறாய். ஒரு குருவிடம் இருந்து பொறுமையாக ஆன்மீகப் பயிற்சி பெற உன்னால் இயலவில்லை. ஆதலால் நீ பல குருநாதர்களை நாடிச் செல்லு கிறாய். உடலை வருத்திக்கொள்ள நீ விரும்பு வதில்லை. தலைமுடியை முடித்துக்கொண்டு தாடியை

வளர்த்துக்கொண்டு, உடல் நன்கு திடகாத்திரமாக வைத்துக்கொண்டு புற அழகைப் பேணினால் நீ நல்லவனாக ஆகிவிடலாம் என நினைக்கிறாய். உடலை மறந்து சில நிமிடங்கள்கூட நீ தியானத்தில் அமர முடியாது. உடலின்மீது கொண்டிருக்கிற பற்று அத்தகையது. ஒரு குருவிடமிருந்து மற்றொரு குருவுக்கு நீ மாறி மாறிச் சென்றதால் நீ எதனையும் உருப்படியாகக் கற்க முடியவில்லை. நினைவில் கொள், ''உருளும் கல்லில் பாசி படர்வதில்லை''.

புத்திசாலித்தனமோ திறமையோ இல்லாமல் இந்த உலகத்திற்குள் நுழைகிறாய். எத்தகைய சமுதாயத்திலும் நீ உன்னைச் சரிசெய்துகொள்ள முடியவில்லை. நீ உன்னை இழந்துவிட்டாய். உன்னால் இந்த உலகுக்கும் நஷ்டம்.

மனிதா! நீ இளைஞனாக இருக்கும்போதே சாதனையில் ஈடுபடு. உடலின்மீது வைத்திருக்கும் பற்றை விட்டுவிடு. துவக்கத்தில் சிறிதளவு கஷ்டப்படு. பேரானந்தத்தை நீ அறுவடை செய்வதை இதனுடன் ஒப்பிடும்போது இது கஷ்டமேயல்ல.

## 94. ஒரு மனிதனும் அவனது மண் குதிரையும்

ஒரு சிறந்த அறிவுடைய இளைஞன் ஒரு சைக்கிள் வைத்திருந்தான். அவன் அந்த சைக்கிளை குதிரையாக மாற்றினான். அதற்கு மண்ணைப் பயன்படுத்தினான். அவன் சைக்கிளை ஓட்டும்போது அவன் மண் குதிரையின் மீது சவாரி செய்வது போலத் தோன்றியது. அந்தக் குதிரை மர்மமான சக்திகளைக் கொண்டது என்றும், மற்ற குதிரைகளைப் போலவே அதுவும் செயல்படும் என்றும்

அந்த இளைஞன் பாசாங்கு செய்தான். உண்மை யான குதிரைகள் மீது சவாரி செய்த நண்பர் களுடன் இந்த இளைஞனும் தனது குதிரையில் சவாரி சென்றான். ஒரு நாள் அவர்கள் ஒரு நீரோடையைக் கடக்க வேண்டியிருந்தது. மண் குதிரையில் சென்றவன் பின்வருமாறு எண்ணினான்: ''பானையைத் தண்ணீரில் அமிழ்த்தினால், பானை அப்படியே இருக்கிறது; அதுபோல எனது மண் குதிரையும் நீரில் அப்படியே இருக்கும். நான் இந்த நீரோடையைக் கடந்து செல்லலாம்'' என்று அவன் நீரோடைக்குள் சென்றான், நீரோடையின் நடுவில் இருக்கும்போது மண்குதிரை கரைந்தது. சவாரி செய்த இளைஞன் தண்ணீரில் மூழ்கி ஒரு வழியாகக் கரை சேர்ந்தான். அந்தக் குதிரை களிமண்ணால் செய்யப்பட்டது என்று மற்றவர்கள் புரிந்து கொண்டனர். அவர்கள் தமது பயணத்தைத் தொடர்ந்தனர்.

சிறிதளவு புத்திசாலித்தனத்துடன் ஒரு சாதகன் சில நூல்களையும் உரைகளையும், மனப்பாடம் செய்து விடுகின்றான். தன்னிடத்தில் சக்தியும் மர்மமான ஞானமும் இருப்பதாக அவன் பாசாங்கு செய் கிறான். அவன் எப்போதும் பிரம்மஞானிகளுடன் உலவி வருகிறான். அவர்களுக்குச் சமமாக நின்று பேசுகிறான். பாதையில் பல சோதனைகளும் ஆபத்துக்களும் காத்திருக்கின்றன. பாசாங்கு செய்கிற மனிதன் ஒரு சோதனையில் கூட தேற முடியாது. முக்கியமான நேரத்தில் அவனது புத்தி மறைந்துவிடுகிறது. அவனது அறிவு அவனை நட்டாற்றில் விடுகிறது. வைராக்கியம் தளர்ந்து போகிறது. அவனது வைராக்கியம், விவேகம் மற்றும் முமுக்ஷுத்வம் என்னும் தீயில் இட்டு பக்குவப்படுத்தப்படவில்லை. அவன் பரிதாபமாக அழிந்துபோகிறான். உண்மை ஞானிகளும் யோகி களும் அச்சமின்றி மகிழ்ச்சியுடன் அனைத்துத்

தடைகளையும், ஆபத்துக்களையும் கடந்து செல்லுகின்றனர்.

## 95. தத்துவமேதையும், உடைந்த கண்ணாடியும்.

ஒரு சமயம் இரண்டு நண்பர்கள் வாழ்ந்து வந்தனர். ராம், கோபால் என்ற பெயருடைய அந்த இரண்டு நண்பர்களும் தத்துவமேதைகள். பல்வேறு தத்துவ சிந்தனைகளின் காரணமாக உலகிலும், உலகின் மூலமாகவும் பரம்பொருளின் சிறப்பான நிலையினைக் காணும் பயிற்சியினை ராம் பெற்றிருந்தார். ஆனால் கோபாலின் தத்துவ ஞானமெல்லாம் ஏட்டளவிலேயே இருந்தது. அவன் இந்த உலகை மாயை என்றான். கனவு என்றான். இங்கு தீமையே நிறைந்திருக்கிறது என்றான்.

நீண்ட நாட்களுக்குப் பிறகு ஒரு நாள் ராம் தனது நண்பனை அவனது இல்லத்தில் சந்தித்தான். கோபால் வழக்கம்போல உலகத்திலுள்ள தீமைகளைப் பற்றி வெகுநேரம் விவாதித்தான். இறுதியில் நண்பனுக்கு அன்பளிப்பு என்ன கொண்டு வந்திருக்கிறாய் என்று கேட்டான். ராம் சிறிது யோசித்த பிறகு தனது பையில் கையை விட்டு உடைந்த கண்ணாடித் துண்டு ஒன்றை எடுத்து அதைக் கோபாலிடம் கொடுத்துவிட்டுப் பின்வருமாறு கூறினான்.

''இது எனது சிறிய பணிவான அன்பளிப்பு. இது உனது அழகை நீ நன்கு தெரிந்து கொள்ள உதவும். நீ வேறு எங்கும் உனது அழகைக் காண முடியாது''.

கோபால் அதிலிருந்து பாடம் கற்றுக்கொண் டான். அந்த விநாடி முதல் பரம்பொருள் உலக மெங்கும் வியாபித்திருப்பதைப் அவன் புரிந்து கொண்டான்.

இந்த உலகில் உபயோகமற்றது என்று எதுவு மில்லை.

ஆத்மா அல்லாத ஒன்று ஆத்மாவைப் பிரதி பலித்து சிறப்பிக்க இருக்கிறது. இல்லையெனில் ஆத்மா இருப்பதை நீங்கள் எப்படித் தெரிந்து கொள்ள முடியும்.

உண்மையில் ஆத்மா அல்லாத கண்ணாடிதான் ஆத்மாவை உண்மையில் பிரதிபலித்து நாம் அதை உணருமாறு செய்கிறது.

அது போலவே தீமை நற்குணத்துக்கு கண் ணாடியாக அமைகிறது. அஞ்ஞானிகள் பலர் கூடி யிருக்கிற இடத்தில் ஞானிகளையும், ரிஷிகளையும்; நாம் எளிதில் கண்டு கொள்ளலாம்.

தீமை பிரதிபலிக்கிற நன்மையை உணரக் கற்றுக் கொள்ளுங்கள். "நல்லதை எனக்கு உணர்த்த தீமை இருக்கிறது. அழியாத பொருள் ஒன்று இருப்பதை உணர்த்த அழியும் பொருள் இருக் கிறது" என்று சொல்லுங்கள்.

உண்மையில் இறைவன் இருப்பதை நமக்கு உணர்த்தும் கண்ணாடி உலகம். உலகத் தைக் கண்டிக்கவும் அது மாயை மற்றும் கனவு என்று சொல்லவும் கற்றுக் கொள்ளாதீர்கள். ஆனால் இறைவன் இருப்பதை நாம் உணர்வதற்கு அதைப் பயன்படுத்திக் கொள்ளக் கற்றுக் கொள்ளுங்கள்.

## 96. மழைக்குத் தப்பிய பிராமணன்

ஒரு பிராமணன் சாலையில் நடந்து சென்று கொண்டிருந்தான். அப்போது திடீரென்று மழை வந்துவிட்டது. அவனிடம் குடை இல்லை, தனக்கு ஜலதோஷம் பிடித்துவிடுமே என்று அவன் அஞ்சினான். மழைக்கு ஒதுங்குவதற்கு அங்கு இடமே இல்லை. சற்றுத் தொலைவில் இரண்டு கூலியாட்கள் ஒரு மரக்கட்டிலை தூக்கிக்கொண்டு சென்றனர். அவன் முன்னே ஓடினான். அவன் கூலியாட்களை விடக் குட்டையானவன். அவன் அந்த இரண்டு கூலியாட்களுக்கும் நடுவில் நடந்து சென்றான். அவன் தலைக்கு மேலே அகலமான கட்டில் இருந்தது. ஒரு துளி தண்ணீர்கூட அவன்மீது விழவில்லை. கட்டிலைத் தூக்கிவர கூலியாட்களுக்கு அவனும் உதவினான். ஆனால் அவன் கொடுத்த உழைப்பைவிட பெற்ற பலன் அதிகம்.

பல சாதகர்கள் இறையனுபவம் என்னும் லட்சியத்தை நோக்கி நடந்து செல்லும்போது உலகியல் கவர்ச்சி என்னும் மழையில் நனைந்து விடுகின்றனர். புத்திசாலியான சாதகர்கள் இந்தக் கவர்ச்சிகளின் தீய விளைவுகளிலிருந்து தந்திரமாக தப்பித்துக் கொள்ள வழி கண்டுபிடிக்கிறார்கள். அவர்கள் வசிக்குமிடத்திற்கு அருகில் ஆசிரமங்கள் அல்லது ஆன்மீக நிலையங்கள் இருப்பதைக் காணுகிறார்கள். ஆன்மீகத் துறையில் பெருமளவுக்கு முன்னேறிச் சென்ற ஆத்மாக்களும், பெருமளவுக்கு வளர்ச்சி பெற்றுள்ள சாதகர்களும், துறவிகளும் அவற்றை நிர்வகித்து வருவதை அறிகின்றனர். அத்தகைய ஆசிரமங்கள் அல்லது ஆன்மீக நிலையங்களில் சேருவதன்மூலம் அவர்கள் கவர்ச்சிகள் மற்றும் சோதனைகளிலிருந்து தப்பித்துக்கொள்கின்றனர். ஆன்மீகத் துறையில் முன்னேறிய

ஆத்மாக்கள் கொண்டு செல்லுகின்ற கவசங்கள், ஆன்மீகத் துறையில் முன்னேற வேண்டிய ஆத்மாக்களை வீழ்ச்சியிலிருந்து காப்பாற்றுகின்றன. சாதகர்கள் ஆன்மீக நிலையங்களுக்கு நன்கொடைகளும் கொடுக்கின்றனர். ஆனால் நாளடைவில் அவர்கள் பெறுகின்ற பலன், ஆன்மீக நிலையங்களுக்காக அவர்கள் தந்திருக்கிற உழைப்புடன் ஒப்பிடும் போது மிகவும் மகத்தானது. ஆன்மீக நிலையங்களின் பெருமை அத்தகையது.

## 97. பேருந்திலிருந்து கீழே விழுந்த நடத்துனர்

பேருந்து புறப்பட்டுவிட்டது. நடத்துனர் பேருந்தின் வாசற்படியில் நின்று கொண்டிருந்தார். பேருந்தை நோக்கி ஒருவர் ஓடி வந்தார். நடத்துனர், ''கருணை'' உள்ளத்துடன், கம்பியைப் பிடித்திருந்த கையை கம்பியிலிருந்து எடுத்தார். ஓடி வந்தவர் கம்பியை பிடிப்பதற்குப் பதிலாக நடத்துனரை பிடித்துக்கொண்டார். ஓடி வந்தவர் நடத்துனரைவிட கனத்த சரீரமுடையவர். ஆகவே ஓடி வந்தவரும், நடத்துனரும் பேருந்திலிருந்து சாலையில் விழுந்தனர். இப்போது இருவரும் பேருந்தின் பின்னால் ஓடத் தொடங்கினர். பேருந்தில் அமர்ந்திருந்த வாட்டசாட்டமான ஒரு பயணி பேருந்துக்கு வெளியே கையை நீட்டினார். அவர் கையைப் பிடித்துக்கொண்டு இருவரும் பேருந்துக்குள் ஏறினர்.

சாதகனின் லட்சியப் பயணத்திலும் இதுபோல் அடிக்கடி நிகழுகிறது. அவன் ஆன்மீகப் பயிற்சியில் ஈடுபட்ட சிறிது காலத்திலேயே பெருமளவுக்கு ஆன்ம பலம் பெற்றுவிட்டதாக எண்ணி மற்றவர்களைக் காப்பாற்றப் புறப்படுகின்றான். விளைவு

வெளிப்படையானது. சாதகனும் உலக வாழ்வு என்னும் சாலையில் விழுந்து விடுகிருன். சாதனையின் ஆரம்ப கட்டத்தில் இருப்பவன் தீயவர்களைத் திருத்தப் புறப்படக்கூடாது. அவன் தனது சாதனையிலேயே கண்ணும் கருத்துமாக இருக்க வேண்டும். ஆரம்ப நிலையில் அவன் பிறர் விஷயத்தில் தலையிடத் தொடங்கினுல் சாதகனும் உலகியல் மதி படைத்தவஞக மாறிவிடுகிருன். பிறகு அவனும் சாதனை எனும் பேருந்தின் பின்ஞல் ஓட வேண்டும். ஆன்ம சாதனையில் முன்னேறிய நிலையில் இருக்கும் ஒருவர் ஆரம்ப சாதகனைக் காப் பாற்ற முன்வருகிருர். அவர் சாதனையில் நிலைத் திருக்கிருர். மற்ற சாதகர்களைக் காப்பதற்காக அவர் சாதனை என்னும் கோட்டையிலிருந்து வெளியே வராமல் இருக்கிருர். அவர் சாதனையில் நிலைத்து நின்று தொண்டு என்னும் கரத்தை ஜன்னலுக்கு வெளியே நீட்டுகிருர். இதன் உதவி கொண்டு மற்ற சாதகர்கள் சாதனை என்னும் பேருந்துக்குள் ஏறிக்கொள்ளுகின்றனர். இதுவே சிறந்த செயல் முறை.

## 98. கெடிகார முட்களை அகற்றிய நிர்வாகி

ஒரு அலுவலகத்தின் பணியாளர்கள் மணி 5 அடிக்க வேண்டும் என்றும் மேலும் ஒரு நாள் உழைப்பின்றி ஊதியம் பெறவேண்டும் என்றும் விரும்பினர். 4 மணிக்குமேல் சில நிமிடங்களுக்கு ஒரு முறை நிர்வாகி கெடிகாரத்தையே பார்த்துக் கொண்டு இருந்தார். மற்ற பணியாளர்கள் அனைவரும் 5 மணி எப்போது அடிக்கும் என்று எதிர்பார்த்து மீண்டும் மீண்டும் கெடிகாரத்தைப் பார்த்துக் கொண்டிருந்தனர். நிர்வாகி கெடி காரத்தின் அருகில் சென்று இரு முட்களையும் ஒடித்துவிட்டார். அதன் பிறகு அவர்கள்

நிமிடத்தையோ மணியையோ எண்ணவில்லை. அவர்களால் எவ்வளவு வேலை செய்ய இயலும் என்று எண்ணிப் பார்த்தனர்.

உலகில் சுயநலத்தில் நாட்டம் கொண்ட மனிதன், தான் நற்பணிகளில் ஈடுபட்டிருந்தாலும், ஈடுபடாவிட்டாலும், தனக்குப் பரிசும் பாராட்டும் கிடைக்கவேண்டும் என்று எதிர்பார்க்கிறான். அவன் ஒருவருக்கு ஒரு டம்ளர் தண்ணீர் கொடுத்தால் அதற்குப் பரிசாக எதையேனும் எதிர்பார்க்கிறான். குறைந்தபட்சம் 'நன்றி' என்ற சொல்லையாவது எதிர்பார்க்கிறான். இதனை குரு கவனிக்கிறார். சுயநலம், செயலிலும், அதன் பலனிலும் பற்றுக்கொள்ளல் ஆகிய கெடிகாரத்தின் இரு கைகளையும் அவர் அகற்றிவிடுகிறார். அதன் பிறகு செயலுக்காகவே செயலைச் செய்கிறான். வெகுமதி எதனையும் எதிர்பார்ப்பதில்லை; கடமை உணர்வுடன் பணியாற்றுகிறான்.

## 99. சிறுவனும் அவனது காலணியும்

ஒரு சிறுவனைப் பார்த்து நாய் குரைத்தது. அவன் ஓடினான். நாய் அவனைத் துரத்த ஆரம்பித்தது. தன் காலில் உள்ள காலணிகள் தன் வேகத்தைக் குறைப்பதாக சிறுவன் உணர்ந்தான். காலணிகளைக் காலிலிருந்து கழற்றி எறிந்தான். நாய் அந்த காலணிகளில் ஒன்றைக் கவ்விக்கொண்டு ஓடியது. சிறுவன் சுகமாக வீடு சேர்ந்தான்.

மனிதனிடம் 'நான்' 'எனது' என்ற இரண்டும் இருக்கிறவரை உலகம் மனிதனை ஒவ்வொரு வகையிலும் துன்புறுத்துகிறது. அகந்தை, சுயநலம் இவற்றுடன் அவன் எங்கு ஓடினாலும் உலகியல் வாழ்க்கைத் துன்பங்கள் அவனை விரட்டுகின்றன.

அவற்றிலிருந்து அவனால் தப்பிக்க முடியவில்லை. அவன் தனது லட்சியத்தை நோக்கி விரைந்து ஓடவும் இயலவில்லை. ஆகவே அவன் தனது லட்சியத்தை நோக்கி விரைந்து ஓட 'நான்' 'எனது' என்பதைத் துறந்துவிடுகிறான். மனிதன் சுயநலத்தை உதறி எறிந்ததும் உலகம் அவனைத் துரத்துவதில்லை. உலகியல் வாழ்வின் துன்பங்கள் அதன் பிறகு அவனை நெருங்குவதேயில்லை. துறவின் மூலம் இருவித பலன் இருக்கிறது. அது உங்கள் சுமைகளை அகற்றுகிறது; இதயத்தை மென்மையாக்குகிறது. இதன் மூலம் நீங்கள் ஆன்மீக வாழ்வில் உயர்ந்திட வழி ஏற்படுகிறது. மேலும் உங்கள் உறவினர்கள் மற்றும் நண்பர்கள் தரும் தொல்லைகளிலிருந்தும் நீங்கள் விடுபட முடிகிறது. ஆகவே, உலகத்தைத் துறந்து உன்னதமான பேரானந்தத்தை அனுபவியுங்கள்.

## 100. முகமூடி அணிந்த சிறுவனும் சுண்டெலியும்

ஒரு சிறுவன் ஒரு பயங்கர அரக்கன்போல முகமூடி அணிந்துகொண்டு மற்ற சிறுவர்கள் விளையாடும் இடத்துக்குச் சென்றான். அவன் அச்சுறுத்தும் குரல் கொடுத்தான். இந்த அரக்கனைக் கண்டு மற்ற சிறுவர்கள் அஞ்சி ஓடினார். திடீரென்று முகமூடி அணிந்த சிறுவன் அலறினான். கீழே விழுந்து புரண்டான். முகமூடியைக் கழற்றி எறிந்தான். முகமூடிக்குள் ஒரு சுண்டெலி இருந்தது. முகமூடி அணிந்த சிறுவன் பயந்து நடுங்கினான்.

ஒரு சாதகன் ஆத்ம ஞானம் பெற்ற ஞானியை போல நடிக்கிறான். அவரது முகமூடியை அணிந்து கொள்ளுகிறான். மக்களின் வாழ்க்கையை மாற்றி

அமைப்பதாக இடிமுழக்கம் செய்கிறுன். மக்கள் அதிசயப்படுகின்றனர். விரைவில் சாதகன் வீழ்ச்சி அடைகிறுன், போலி ஞானியின் வேடம் கலேகிறது. ஏனெனில் உள்ளே காமம், கோபம், பேராசை, கபட நாடகம் என்னும் எலி இருக்கிறது. அது அவனது பலவீனத்தை வெளிப் படுத்துகிறது. அவனது கோழைத்தனமான முட்டாள்தனமான உண்மை இயல்பையும் அது வெளிப்படுத்துகிறது. சாதகனே! வேஷதாரிகள் இடத்தில் எச்சரிக்கையாக இரு. சிரத்தையாக செயல்பட்டு லட்சியத்தை அடைய முயற்சி செய்.

## 101. மண் வீடுகளுக்காகச் சண்டையிட்டுக்கொண்ட குழந்தைகள்

ஒரு கிராமத் தெருவில் பல குழந்தைகள் மண் வீடு கட்டி, குடும்பம் நடத்துவதுபோல் விளே யாடினர். ஒரு குழந்தை மற்ருெரு குழந்தையின் மீது கோபப்பட்டு அந்தக் குழந்தை கட்டிய மண் வீட்டை காலால் எட்டி உதைத்து உடைத்து விட்டது. இரு குழந்தைகளும் சண்டையிட்டுக் கொள்ளத் துவங்கின. ''நீ என்னுடைய வீட்டை அழித்துவிட்டாய், என்ன தைரியம் உனக்கு?'' என்றெல்லாம் அந்தக் குழந்தைகள் பேசிக் கொண்டன. குழந்தைகள் இப்படி சண்டையிட்டுக் கொள்ளுவதை வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்த இளேஞன் சிரித்தான். ''விளேயாடி முடித்தபின் அழித்துவிடப்படும் இந்த மண்வீடுகள் கையளவு மண்ணுல் கட்டப்பட்டவை. இதற்காக இந்தக் குழந்தைகள் இப்படிச் சண்டையிட்டுக் கொள்ளு கிறுர்களே!'' என்று எண்ணி அந்த இளேஞன் சிரித்தான். அவனேப் பார்த்துக்கொண்டிருந்த ஒரு முதியவர், ''தம்பி, நீ சிறுவனுக இருந்தபோது

நீயும் இப்படித்தான் சண்டையிட்டுக் கொண்டாய். நீ இப்போது வளர்ந்துவிட்டாய். இப்போது இந்த விஷயங்களில் அக்கறை காட்டுவதில்லை. ஒவ்வொன்றையும் தரம் பார்த்து மதிக்க நீ இப்போது கற்றுக்கொண்டிருக்கிறாய். வா, எப்படியாவது அந்தக் குழந்தைகளை சமாதானப் படுத்துவோம். அவர்களின் செயலைக்கண்டு நீ சிரிக்கக்கூடாது'' என்று கூறினார்.

அதுபோல, இந்த உலகில் மக்கள் அற்ப விஷயங்களுக்காகச் சண்டையிட்டுக் கொள்ளுகின்றனர். செங்கல்லையும் மண்ணையும் பயன்படுத்தி வீடுகளைக் கட்டுகின்றனர். அவற்றிற்கு உரிமை கொண்டாடி சண்டையிட்டுக் கொள்ளுகின்றனர். பூமியே அளவிலா பிரபஞ்சத்தில் சுழன்றுகொண்டு இருக்கும் ஒரு மண் உருண்டை. இறைவன் விரும்பியபடி உயிர்கள் விளையாட அது தற்காலிகமாக உருவாக்கப்பட்டது. இந்த விளையாட்டு முடிந்ததும் அது அழிக்கப்படும். புலன் வழிப் பொருட்களுக்காகச் சண்டையிட்டுக் கொள்ளுகிறவர்களைப் பார்த்து உலகியல் அறிவு உடைய ஒரு மனிதன் சிரிக்கிறான். ஆனால் உலகப் பொருட்கள் நிலையற்றவை என்று அறிந்து கொள்ளுகிறவரை இந்த மனிதனும் உலகியல் வாழ்வில் உழலும் மனிதர்களைப் போலவே நடந்துகொண்டான் என்பதை அவனுக்கு ஞானி ஒருவர் நினைவுபடுத்துகிறார். அவர் உண்மை, அன்பு, இரக்கம் இவற்றின் மூலம் மக்களை அமைதியாக வாழச் செய்கிறார். உலகியல் பொருளின் உண்மை இயல்பினை அவர் படிப்படியாக உணர்த்துகிறார். அமைதியும் பேரானந்தமும் ஆத்மாவில் பெறலாம் என்றும் அவர் அறிவுறுத்துகிறார்.

## 102. பயணச் சீட்டு வாங்கும் இடத்தில் பெண்ணாக நடித்த ஆண்

ஒருவன் ரயில்வே ஸ்டேஷனுக்குச் சென்றான். டிக்கெட் வாங்கும் இடத்தில் நிறைய பேர் நீண்ட வரிசையில் கூட்டமாக நின்று கொண்டிருந்தனர். அவன் சீக்கிரம் டிக்கெட் வாங்க விரும்பினான்; சுற்றிலும் பார்த்தான். அருகிலிருந்த ஜன்னல் காலியாக இருந்தது. அங்கு யாரும் இல்லை. அவன் அங்கு சென்றான். ''பெண்கள் மட்டும்'' என்று அங்கு போர்டு போடப்பட்டிருந்தது. அவனுக்கு என்ன செய்வதென்று புரியவில்லை. இந்த மனிதனின் துடிப்பு பக்கத்து வரிசையில் நின்ற ஒரு நல்ல மனிதருக்குப் புரிந்தது. அவர் சொன்னார்: ''முகத்தை மூடிக்கொள். பெண்ணைப் போல் பாவனை செய். உனக்கு டிக்கெட் கிடைக்கும்'' அவன் கணப்பொழுதும் தாமதியாமல் அப்படியே செய்தான். டிக்கெட் கிடைத்தது. இதை கவனித்துக் கொண்டிருந்த ஒரு டிக்கெட் பரிசோதகர் பிளாட்பாரத்தின் நுழைவு வாயிலில் நின்று கொண்டார். இந்த மனிதன் நுழைவு வாயிலின் அருகில் சென்றபோது இவன் கையிலிருந்த டிக்கெட்டைப் பார்த்து ''இது ஆண்களுக்குரிய டிக்கெட் ஆயிற்றே!'' என்றார். முகத்தை மூடிக்கொண்டிருந்த மனிதன் முகத் திரையை நீக்கிவிட்டு ''ஆம், ஆம் நான் ஒரு ஆண் தான்'' என்றான். அவனுடைய அறிவுக் கூர்மையை அனைவரும் பாராட்டினர்.

எல்லா உயிர்களும் இறுதியில் முக்தி அடைகின்றன. ஆனால் புத்திசாலியான ஜீவன் இங்கேயே இப்போதே முக்திபெற விரும்புகிறது. அவன் கூட்டத்தில் கலக்க விரும்பவில்லை. பத்து லட்சத்தில் ஒருவருக்குத்தான் இந்த ஆர்வம் இருக்கிறது. அவன் சுற்றிலும் பார்க்கிறான்.

ப்ரவ்ருத்தி மார்க்கத்தில் மக்கள் கூட்டமாக இருக்கின்றனர் என்றும் இந்த மார்க்கத்தில் நல்ல செயல்களும், தீய செயல்களும் மண்டிக்கிடக்கின்றன என்றும், இவை பரிணும வளர்ச்சியை தாமதப்படுத்துகின்றன என்றும் அவன் தெரிந்து கொள்ளுகிருன். நிவ்ருத்தி மார்க்கம் என்ற மற்ருெரு பாதை இருப்பதையும் அவன் உணருகிருன். இந்தப் பாதையில் நெரிசல் இல்லை என்பதையும் உணருகிருன். அங்கு செல்கிருன். ஆனுல் அங்கு செல்ல விரும்புகிறவர்களுக்கு குறிப்பிட்ட சில தகுதிகள் இருக்க வேண்டும் என்று அவன் தெரிந்து கொள்ளுகிருன். ஒரு முனிவர் சாதகன்மீது கருணை கொண்டு அவனுக்கு நல்வழி காட்டுகிருர்; ''பால் உணர்வுக்கு அப்பாற்பட்டுச் செல். நீ ஆண் என்பதை மறந்துவிடு. நீ ஒரு முட்டாள் அல்லது ஒரு பைத்தியக்காரன் என்பதாக நடித்தால் வெல்லுதற்கரிய எதிரியான அபிமானத்தை நீ வெற்றி காணலாம். இவை இந்தப் பாதையின் ரகசியங்கள்''. அந்த மனிதன் முனிவர் கூறியபடி செயல்படுகிருன். அவன் ஆத்ம ஞானம் பெறுகிருன். முட்டாள் மனிதன், தனது சிறுமதி குறித்து வீணுகப் பெருமிதம் கொள்ளுகிருன். பைத்தியக்காரன்போலத் திரியும் ஞானியைக் கேலி செய்கிருன். ஞானி ஒரு கணப்பொழுதில் தான் வேண்டுமென்று அணிந்திருந்த முட்டாள்தனம் என்னும் திரையை அகற்றுகிருர். மனிதர்களுள் தெய்வமாகப் பிரகாசிக்கிருர். அவர் தனது லட்சியத்தை அடைந்துவிட்டார். எல்லையிலாப் பேரானந்தம் நிறைந்திருக்கும் ராஜ்யத்துக்குள் அவர் எளிதாக நுழைகிருர்.

## 103 மாட்டு வண்டிக்காரர்

ஒரு மாட்டு வண்டிக்காரர், பிரம்மா தனக்கு அருளியிருப்பது என்னவென்பதைப் புரிந்து

கொண்டார். மாட்டுவண்டி ஓட்டுபவர் பிறந்த உடனேயே மாட்டு வண்டியின் உதவியுடன் தான் அவர் வாழ்க்கையை நடத்த வேண்டும் என்று பிரம்மா நிர்ணயம் செய்து விட்டார். அதாவது மாட்டு வண்டிக்காரருக்கு இரு காளை மாடுகளும் ஒரு கட்டை வண்டியும் கிடைப்பது உறுதியாயிற்று. இந்த உண்மையைப் புரிந்துகொண்ட வண்டிக்காரர் அழகான திட்டம் ஒன்றைத் தீட்டினார். அவர் உடனே காளை மாடுகளையும் வண்டியையும் விற்றுவிட்டு தனக்கும் தன் குடும்பத்துக்கும் தேவையான அனைத்தையும் வாங்கிக்கொண்டார். விற்பனை செய்து பெற்ற பணத்தில் மீதம் எதுவும் வைக்கவில்லை. அவர் வீடு திரும்பினார். மறுநாள் தொழிலுக்குத் தேவையான எதுவும் அவரிடம் இல்லை. ஆகவே இறைவன் இரு காளை மாடுகளையும் ஒரு வண்டியையும் தோற்றுவித்து காலியாகவுள்ள கொட்டிலில் நிறுத்தினார். சிறிது நாள் கழித்து வண்டிக்காரர் வண்டியையும் மாடுகளையும் விற்றார். அதன் மூலம் கிடைத்த பணத்தை ஏழைகளுக்கு தானமாகக் கொடுத்தார். இறைவன் மீண்டும் மாடுகளையும் வண்டியையும் தோற்றுவித்துக் கொட்டிலில் நிறுத்தினார்.

ஆத்ம ஞானம் பெற்ற ஞானியின் நிலையும் இது தான். அவர் தனது உடல் முன்வினைப் பயனால் தோன்றியது எனவும் இந்தப் பிறவியில் தான் எதைப் பெற்று அனுபவிக்க வேண்டும் என்பதும் ஏற்கனவே தீர்மானிக்கப்பட்டது எனவும் புரிந்து கொள்ளுகிறார். வினை விரைந்து செயலாற்றுவதை அவர் தெளிவாகக் காணுகிறார். ஆகவே நாளைக்கு என்ன தேவை என்பது குறித்து அவர் கவலைப்படுவதில்லை. இந்த உலகப் பொருட்களில் எது அவரிடம் வந்தாலும் அவர் அதனைப் பிறருக்குக் கொடுத்து விடுவார். அவர் தனக்கென எதுவும் வைத்துக்

கொள்ளுவதில்லை. இயல்பாகவே, தெய்வ சங்கற்பத்தை நிறைவேற்றவும், அவரது முன்வினைக்குத் தகுந்தாற் போலவும் அவருக்குத் தேவைப்படும் அனைத்து வசதிகளையும் உடைமைகளையும் இறைவன் மீண்டும் அருளுகிறார். அந்த ஞானி தொடர்ந்து தன்னுடைய செல்வத்தையும் பொருட்களையும் இறைவனின் குழந்தைகளுக்கு தானம் செய்கிறார் அவருக்கு ஏக்கம், கவலை எதுவும் இல்லை. ஏனெனில் இந்த உடல் இருக்கிறவரை முன்வினைப் பயனை அனுபவிக்கத் தேவையான அனைத்தையும் இறைவன் கொடுத்துக் கொண்டிருப்பார். என்பது அவருக்குத் தெரியும். இவ்வாறு அவர் உன்னத அமைதியையும் பூரண திருப்தியையும் அனுபவித்தார்.

## 104. மாமன்னன் புரஞ்சனன்

முற்காலத்தில் புரஞ்சனன் என்றொரு மன்னன் வாழ்ந்து வந்தான். அவனுக்கு அவிக்ஞாதன் என்றொரு நண்பன் இருந்தான். மன்னன் தன்னுடைய நண்பனை விட்டுப் பிரிந்து பல இடங்களுக்குச் சென்றான். தனக்கென ஒரு இடத்தை தேடிக்கொள்ள முற்பட்டான். பல அரசுகளை அவன் புறக்கணித்தான். கடைசியாக ஒன்பது வாயில்கள் உடைய ஒரு நகரத்தை அடைந்தான். அந்த நகரம் ஐந்து சுவர்களால் நன்கு பாதுகாக்கப்பட்டிருந்தது. இந்த நகரில் அவன் ஒரு அழகிய பெண்ணைப் பார்த்தான். அந்தப் பெண்ணுக்கு பத்து பணிப் பெண்களும், ஐந்து தலை நாகம் ஒன்றும் பாதுகாப்பாக இருந்தனர். புரஞ்சனன் அவளை அணுகினான். தன்னை ஏற்றுக்கொள்ளுமாறு வேண்டினான். அவளும் அளவிடற்கரிய மகிழ்ச்சி அடைந்தாள். அவனை திருமணம் செய்து கொண்டாள். அவனை அந்த அரசுக்கு மன்னனாக ஆக்கினாள். புரஞ்சனன் அங்கு நூறு ஆண்டுகள் ஆட்சி புரிந்து வந்தான்.

புரஞ்சனன் தினமும் ஒன்பது வாயில்கள் வழியாக வெளியே சென்று பல பொருட்களுடனும், அனுபவங்களுடனும் திரும்புவான். புலன் இன்பத்தை அனுபவிப்பதில் ஈடுபட்டு அவன் தன்னை இழந்தான். அவன் ராணியுடன் ஐக்கியமாகி விட்டான். அவன் தன்னுடைய தனித்தன்மையை இழந்தான்.

ஒரு நாள் புரஞ்சனன் ஒரு ரதத்தில் பயணம் செய்யப் புறப்பட்டான். அந்த இரதத்திற்கு இரண்டு சக்கரங்கள் இருந்தன. ஐந்து குதிரைகள் அதை இழுத்துச் சென்றன. அவன் சென்ற வழியில் பல மிருகங்களை வேட்டையாடினன். புலன் இன்பத்திற்கான தன்னுடைய பசியைத் தீர்த்துக்கொள்ள அவன் இவ்வாறு செய்தான். அவன் திரும்பி வந்த பொழுது அவனுடைய மனைவி கோபமாக இருந்தாள். சிறிது நேரம் அவன் அவளை விட்டுப் பிரிந்து சென்றதே அதற்குக் காரணம். அவன் விரைவில் அவளை சமாதானப்படுத்தினன். அவள் எப்பொழுதும்போல் மீண்டும் அவனிடம் அன்பு செலுத்தத் துவங்கினள். இவ்வாறு புரஞ்சனன் காலம் கடந்து செல்வது பற்றிய கவனமே இல்லாமல் வாழ்ந்து வந்தான்.

புரஞ்சனனை முதுமை வாட்டியது. முன்னூற்று அறுபத்து ஐந்து கந்தர்வர்களின் (அவர்களில் பாதிபேர் அழகாகவும் மீதிபேர் கறுப்பாகவும் இருப்பார்கள்) தலைவன் சந்தவேகன் புரஞ்சனனை அடுத்தடுத்து பலமுறை தாக்கினன். ஆனல் பிரம்மாண்டமான ஐந்து தலை நாகம் நகரத்தைப் பாதுகாத்தது. இந்தப்போர் நூறு ஆண்டுகள் நடைபெற்றது. அந்தப் பாம்பு சந்தவேகனை வெற்றிகரமாகத் தடுத்து நிறுத்தி வந்தது.

காலதேவனின் மகள் திருமணம் செய்து கொள்ள விரும்பினாள். ஆனால் யாரும் அவளை ஏற்றுக்கொள்வதாக இல்லை. இறுதியில் அவள் பயத்தை அணுகி அவனிடம் இனிய மொழியில் பேசினாள். அவன் அவளுக்கு படைகளையும், தன்னுடைய தம்பி பிரஜ்வரனையும் அவளுக்குக் கொடுத்து உயிரினம் அனைத்தையும் அழிக்குமாறு அவளைத் தூண்டினான். காலதேவனின் மகளுடனும், பிரஜ்வரனுடனும் சென்ற இந்தப் படை புரஞ்சனனின் நகரைத் தாக்கியது. கால தேவன் மகளின் பிடிக்குள் அகப்பட்டுக் கொண்ட மன்னன் சொல்லொணாத்துயரை அனுபவித்தான். பிரஜகாரனின் சொந்த மாளிகை சக்திமிகு படையால் தாக்கப்படுகிறபோது பாம்பு எதுவும் செய்ய முடியவில்லை. படையின் தாக்குதலை அதனால் சமாளிக்க முடியவில்லை. சிறிது நேரப் போராட்டத்திற்கு பிறகு பாம்பு நகரை விட்டு வெளியேறியது. இதற்கிடையில் பிரஜ்வரன் நகருக்குத் தீ வைத்தான். இந்த நகரின் மீது மன்னன் தீவிர பற்று கொண்டிருந்த போதிலும் அவன் அதை விட்டு வெளியேற வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது. இந்த நேரத்திலும்கூட புலன் இன்பத்தின் நாட்டம் தணியாத காரணத்தினால் புரஞ்சனன் தனது நண்பன் அவிக்ஞாதனை நினைவு படுத்திக்கொள்ள முடியவில்லை. அவன் அந்த நகரை விட்டு வெளியேறும் போது அவனால் கொல்லப்பட்ட மிருகங்கள் எல்லாம் ஒன்று திரண்டு வந்து அவனை சித்திரவதை செய்தன.

அவன் மீண்டும் விதர்ப மன்னனின் அழகிய மகளாகப் பிறந்தான். மாமன்னன் மலையத்துவஜன் இந்த இளவரசியைத் திருமணம் செய்து கொண்டான். தக்க வேளையில் அவர்கள் ஒரு புதல்வியையும், ஏழு புதல்வர்களையும் பெற்றனர்.

மாமன்னன் தனது புதல்வர்களிடம் அரசை ஒப்படைத்துவிட்டு இறைவனை நினைத்துத் தியானம் செய்ய காட்டிற்குச் சென்றான். அரசியும் அவனைத் தொடர்ந்து சென்றாள். அவன் கடுமையாகத் தவம் செய்தான். இறைவன் தரிசனம் தந்தார். அவன் சமாதி நிலையில் அமர்ந்தான். அவனைச் சுற்றி நிகழ்வது எதுவும் அவனுக்குத் தெரியாது. அவன் பரப்ரம்மத்துடன் ஒன்றி விட்டான். துரிய நிலையினை அடைந்தான். அவனது உடல் மட்டும் பூமியில் இருப்பதாகவும் ஆத்மா பரமாத்மாவுடன் ஒன்றிவிட்டதாகவும் அவன் மனைவி அறிந்தவுடன் கணவனின் இறுதிச் சடங்குக்கு ஏற்பாடு செய்தாள். தானும் உடன்கட்டை ஏறி கணவனைப் பின் தொடரத் தீர்மானித்தாள். அந்த நேரத்தில் மன்னனின் பழைய நண்பன் அவிக்ஞாதன் அவள் முன் தோன்றினான். ஒவ்வொரு பிறவியிலும் தான் அவளது கணவனின் நண்பனாகப் பிறப்பதாகக் கூறினான். முற்பிறவியில் அவளது கணவன் நண்பனின் பேச்சைக் கேளாமல் ஒன்பது வாயில் உடைய நகரத்துக்குச் சென்று மிகவும் துன்பப்பட்டதை அவளுக்கு நினைவு படுத்தினான். அவனும் அவளும் இருவரல்ல என்றும் ஒருவரே என்றும் அவன் கூறினான். விதர்பியின் ஆத்மா விழிப்புற்றது. பரப்ரம்மத்துடன் ஒன்று கலந்தது.

இந்த நீதிக் கதை ஒரு ஜீவனின் வாழ்க்கையை இங்கு சித்தரிக்கிறது. புரஞ்ஜனன், ஜீவன், அவிக்ஞாதன், பரமாத்மா, மங்கை, மரமாக, மிருகமாகப் பிறப்பெடுத்த ஜீவன், இறுதியில் மனிதப் பிறவி எடுக்கிறது. அதாவது நவத்வார புரியினை அடைகிறது. இங்கு ஜீவனைச் சுற்றி பஞ்ச கோசங்கள் உள்ளன. நகரத்தில் உள்ள இளவரசி புத்தி; வேறு எதுவுமில்லை. ஜீவன், மனித அறிவை

மணம் செய்து கொள்ளுகிறது. ஜீவன் உடலில் இருந்துகொண்டு புலன்களின் மூலம் பத்துவழிகளில் இன்பம் அனுபவிக்கிறது.

நன்மை, தீமை என்னும் இரு சக்கரங்கள் உடைய ரதத்தில் சவாரி செய்து ஜீவன் வேள்வி களில் மிருகங்களை பலியிடுவது முதலான செயல் களில் ஈடுபடுகிறது. புத்தி இத்தகைய செயல் களுடன் ஒத்துப்போகிறது. இவ்வாறு ஜீவனும் புத்தியும் காலத்தைக் கழிக்கின்றன.

சந்தவேகன் 365 நாட்கள் உடைய ஒரு வருடத்தைக் குறிக்கிருன். ஆண்டுகள் உடலைத் தாக்குகின்றன. ஆனுல் ஐந்துதலைப் பாம்பாகிய ப்ரஜகாரன் (பஞ்சமுகப்ராணன் உடையது) தாக்குதலை சமாளித்து நகரைப் பாதுகாக்கிறது. ஆனுல் குறிப்பிட்ட ஒரு கால கட்டத்தில், முதுமை மனிதனை சக்தி இழக்கச் செய்கிறது.

இந்த நேரத்தில் ஒரு சக்திமிக்க படை அவனைத் தாக்குகிறது. அது காலதேவன். பயம், விஷஜ்ூரம் ஆகியோரின் தலைமையில் வந்த படை. புலன்வழிப் பொருட்களில் நாட்டம்கொண்டு இன்பம் அனுபவித்து வந்த மனிதன் இப்போது கொடிய மரணத்தைத் தழுவுகிருன். ப்ராணன் இந்தப் புதிய எதிரியைச் சமாளிக்க முடியவில்லை. அது உடலைவிட்டுப் பிரிகிறது. விஷஜ்ூரம் உடலை எரிய வைக்கிறது. ஜீவன் தான் விரும்பா விட்டாலும் உடலைவிட்டு வெளியேற வேண்டி யிருக்கிறது. மோகத்தின் காரணமாக, ஜீவன் இறைவனுடன் தனக்குள்ள உறவை அறிந்து கொள்ள முடியவில்லை. அவன் இந்த உலகை விட்டு வெளியேறும்போது அவனது வாழ்நாளில் அவனுல் துன்புறுத்தப்பட்ட உயிர்கள் அவனைப்

பின் தொடர்ந்து வந்து அவனைச் சித்திரவதை செய்கின்றன.

புரஞ்சனன் பெண்ணாக மறு பிறவி எடுத்தது, ஜீவன் ஆண், பெண் என்ற நிலைக்கு அப்பாற் பட்டது என்பதைக் குறிக்கிறது. ஜீவன் வினைப் பயனுக்குத் தக்க ஆணாகவோ, பெண்ணாகவோ பிறவி எடுக்கிறது. இப்பிறவியில், ஜீவன் புலன் இன்பத்திற்கான ஆசைகள் அனைத்தையும் துறந்து விடுகிறது; இறைவனை தியானிக்கிறது. இறுதியில் இதுவரை கண்டிராத நண்பனாகிய இறைவனைக் காணுகிறது. ஆத்மா இறையருளால் சுடர்விட்டுப் பிரகாசிக்கிறது. ஜீவாத்மா பரமாத்மாவுடனான தனது உறவை உணர்ந்து கொள்ளுகிறது.

## 105. அஜாக்ரதையான மான்

ஒரு மான் தன் மனைவியுடன் ஒரு பூந் தோட்டத்தில் விளையாடிக்கொண்டிருந்தது. அது புல்லைக் கடித்துக்கொண்டிருந்தது. தேனீயின் இனிய ரீங்காரத்தில் அது மெய் மறந்தது. தன்னை நோக்கி கடும் பசியுடன் ஓநாய்கள் வருவதை மான் கவனிக்கவில்லை. அங்கு வந்த வேடனும் அதைக் குறிபார்த்தான். வேடன் விட்ட அம்பு ஒரு நிமிடத்தில் மானைக் கொன்றுவிட்டது. மான் தனது விதி முடியப்போகிறது என்பதை உணர்ந்து கொள்ளுவதற்கு முன்பாக வேடனின் அம்பு அதன் உடலைத் துளைத்துவிட்டது.

மாயையில் மூழ்கி இருக்கும் மனிதனின் நிலையும் இதுதான். உலகில் அவனது வாழ்க்கை, உண்பது, பிள்ளைகளைப் பெறுவது என்ற அளவில் சுழன்று கொண்டிருக்கிறது. பூந்தோட்டத்தில் நிறைய மலர்கள் இருப்பதுபோல மனிதனின் இல்லத்தில்

அழகிய பெண்கள் இருக்கின்றனர். அவர்களின் அழகு சிறிது காலமே நீடிக்கிறது. மாலை மலர் போல அவர்களின் அழகு காலப்போக்கில் மங்கு கிறது. மனைவி, மக்களின் இனிய பேச்சில் மயங்குகிற மனிதன், அவனது வாழ்க்கையை விழுங்கத் தயாராக இருக்கும் ஆண்டுகள் என்னும் ஓநாய்களைப் பற்றி அறியாமலிருக்கிறான். இப் போது மரணம் என்னும் வேடனும் வருகிறான். ஒரே வில்லில் மனிதனை மறு உலகுக்கு அனுப்பு கிறான். மனிதன் ஆத்ம சிந்தனை செய்வதற்கு முன்னதாகவே மரணத்தைத் தழுவுகிறான்.

மனிதா, விழித்திரு. இறைவனைத் தியானம் செய். ஒரு கணப்பொழுதையும் புலன் இன்பத்தில் வீணாக்காதே.

## 106. லாகோனிய ஸ்பார்டன்கள்

புராதன கிரேக்க நாட்டில் ஸ்பார்டன்கள் என்ற பழங்குடி மக்கள் இருந்தனர். அவர்கள் மிகவும் துணிச்சல் மிக்கவர்கள். பழக்க வழக்கங் களில் எளிமையானவர்கள். அவர்கள் கர்வம் இல்லாதவர்கள். ஸ்பார்டன்களின் வீரம் அந்த நாட்டின் வரலாற்றில் நிலையான இடம் பெற்று உள்ளது. ஒரு ஸ்பார்டன் குறிப்பிட்ட ஒரு செயலைச் செய்கிறேன் என்று சொன்னால், நிச்சயம் செய்து முடிப்பான். சொன்னபடி செய்யத் தவறுவதைக் காட்டிலும் மரணத்தையே அவன் விரும்புவான் என்று மக்களுக்குத் தெரியும்.

அவர்கள் வாழ்ந்த இடம் லாகோனியா. அதன் காரணமாக அவர்கள் 'லாகோனியர்கள்' என்றும் அழைக்கப்படுவர். அவர்களின் மன்னர் விடுத்து உள்ள கட்டளைகளில் ஒன்று வருமாறு: ''நீ

சொல்லுவதை சுருக்கமாக, தெளிவாக, சரியாகச் சொல். தெளிவின்றி இருக்காதே. உனக்குத் தெரியாத ஒன்றைப்பற்றிச் சொல்ல வார்த்தைகளை தேவையற்ற முறையில் செலவிடாதே. உனக்கு ஒரு விஷயத்தைப்பற்றித் தெரியாது என்ருல் அதனை ஒப்புக்கொள். நீ ஒரு காரியத்தைச் செய்ய விரும்புகிருய் எனில், அதைச் செய்து முடிக்கும் வரை எவரிடமும் அதைப் பற்றித் தம்பட்டம் அடிக்காதே''.

லாகோனிய மக்கள் போர்க்களத்தில் மாவீரர் களாகத் திகழ்ந்தனர். மன்னனுக்கு மிகவும் கீழ்ப்படிந்து நடந்தனர். லாகோனிய மக்களிடம் கேட்கப்படுகிற கேள்விகளுக்கு அவர்கள் சுருக்கமாக பதில் சொல்லுவார்கள். இப்போதுகூட சுருக்க மான அறிக்கை, ''லாகோனிய''த் தன்மையில் அமைந்திருப்பதாக வர்ணிக்கப்படுவது உண்டு.

இதனைச் சித்தரிக்க ஒரு கதை இருக்கிறது. கிரேக்க நாட்டின் வடபகுதியில் மாவீரன் அலெக்ஸாண்டரின் தந்தை மன்னன் பிலிப், மாசடோனியா என்ற பகுதியை ஆண்டு வந்தார். பிலிப் கிரேக்க நாடு முழுவதையும் வெற்றிகொள்ள விரும்பினுர். அவர் படைகளைத் திரட்டி அருகிலுள்ள அரசுகளின்மீது படையெடுத்தான். ஸ்பார்டன்களின் மன்னருக்கு அவன் ஒரு செய்தி அனுப்பினுன். லாகோனிய மக்கள் தனது ஆட்சியை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று அதில் குறிப் பிட்டிருந்தான். அவர்கள் அப்படி செய்யத் தவறினுல் தனது படை அவர்களைத் தாக்கி அழிக்கும் என்றும் அவன் எச்சரித்திருந்தான்.

சில நாட்களில் மன்னன் பிலிப்பிற்கு பதில் வந்தது. ஸ்பார்டன் மன்னன் அனுப்பிய பதில்

ஒரு வார்த்தையில் அமைந்திருந்தது. அந்த வார்த்தை 'ஆல்' (If) என்பதாகும். அதன் பொருள் இதுதான்; மன்னன் பிலிப்பின் பயமுறுத்தல்பற்றி ஸ்பார்டன்கள் அஞ்சவில்லை. லாகோனியா வீரர்கள் லாகோனியாவுக்குள் பிலிப்பின் படைகள் நுழைய அனுமதித்தால் மட்டுமே பிலிப் தனது அச்சுறுத்தலை செயற்படுத்தமுடியும்.

லாகோனியா மக்கள் எவ்வாறு செயல்பட வேண்டும் என்பதையும் மன்னன் சுருக்கமாக உணர்த்தியிருக்கிறுன்.

உலகம் முழுவதும் வீண் கர்வம் உடையவர்கள் நிறைந்திருக்கிறுர்கள். வதந்தியைப் பரப்புபவர் களுக்கும் பஞ்சமில்லை. செயல்வீரர்கள் என்றும் தற்பெருமை பேசிக்கொள்ளுவதில்லை.

அவர்கள் அளவாகப்பேசி அதிகமாகச் செயல் படுகின்றனர். அவர்கள் ஒருபோதும் வாக்குறுதி அளிப்பதில்லை, அல்லது சத்தியம் செய்வதில்லை. அவர்கள் தம்மிடம் எதிர்பார்க்கப்படுவதற்குத் தகுந்தாற்போல் பணியாற்றுகின்றனர். அவர்கள் வதந்தியைப் பரப்புவதில்லை. உண்மைகளை திரித்துக்கூறுவதில்லை. கோள் சொல்லுதல் என்பது அவர்கள் அறியாதது, கர்வம் ஒருபோதும் அவர்கள் பகுத்தறிவை மறைத்ததில்லை. அவர்கள் அளவாகப் பேசுவதன்மூலமும் கட்டுக் கதைகளைக் கேட்காததன்மூலமும், குழப்பத்தைத் தவிர்க்கின்றனர். ஆகவே அவர்கள் எடுக்கின்ற முடிவுகள் நேர்மையானவையாகவும், உறுதியான வையாகவும் இருக்கின்றன. மனக்கசப்பில்லாத போட்டிக்கு லாகோனியாவின் பழங்கால மக்கள் அருமையான உதாரண புருஷர்களாகத் திகழ்ந்தனர்.

## 107. முகமதுவும் ஆயாஸும்

முகமது கஜினி சக்திமிக்க பேரரசன். அவனைக் கண்டு உலகம் முழுவதும் நடுங்கியது ஆனால் அவன் ஒரு அடிமைப் பெண்ணாகிய ஆயாஸின் அழகில் மயங்கி அவளுக்கு அடிமையாகிவிட்டான். ஆயாஸும் அருகில் அவன் இருக்கும்போது அவன் சக்தியற்றவனாக இருப்பான் ஆயாஸ்மீது அவன் அத்தகைய தீவிர காமம் கொண்டிருந்தான். அவன் அரசவையில் இருக்கும்போதுகூட, அவனது முதலமைச்சர், அவன் மாமன்னன் முகமது கஜினி என்றும், வீராதிவீரன் என்றும் நினைவுபடுத்த வேண்டியிருந்தது. அப்போதுதான் அவன் ஒரு பேரரசன்போல செயல்படுவான்.

அதுபோல, எல்லையிலா விழிப்புணர்வு தவிர வேறு அல்லாத ஜீவன் மாயையின் காரணமாக திசை மாறி தானை ஒரு எல்லைக்கு உட்பட்ட, சக்தி யற்ற, பலவீனமான, வரையறைக்கு உட்பட்ட, பிறப்பு இறப்புக்கு உட்பட்ட, வேதனை மற்றும் மகிழ்ச்சிக்கு உட்பட்ட ஜீவன் என்பதாகக் கற்பனை செய்துகொள்ளுகிறது. ஜீவனின் முதல் அமைச்சர் அல்லது தூய புத்தி ஆழ்ந்திருக்கும் நினைவு அலைகளை எழுப்புகிறது. அகண்ட, ஏகரச, சச்சிதானந்த, நித்ய, புத்த, முக்த ஸ்வரூப எண்ணங்களை அது எழுப்புகிறது. சாதகன் தியானம் செய்யத் தொடங்குகிறான். தியானத்தின்போது ஜீவன், எல்லையில்லாத, மாயை மற்றும் அஞ்ஞானத்தால் பாதிக்கப்படாத பரம்பொருளும் தானும் ஒன்று என உணர்கிறது. இவ்வாறு அது படிப்படியாக உயர்ந்த நிலையில் நிலை நிறுத்தப்படுகிறது.

## 108. நாடக விழா

புனித ஜோசப் அகாடமியின் முதல்வர் ஒரு நாடக விழாவுக்கு ஏற்பாடு செய்தார். ''மறு

இணக்கம்'' (Reunion) என்ற நாடகம் அந்த விழாவில் நடைபெற்றது. பல்வேறு நடிகர்கள் மேடையில் மூன்று மணி நேரத்திற்கு நடிப்பார்கள் என்றும் அதன் பிறகு சிறந்த நடிகர்களுக்கு நகரப் பிரமுகர் முன்னிலையில் தான் பரிசுகளையும், கோப்பைகளையும் வழங்கப்போவதாகவும் முதல்வர் அறிவித்தார். நாடகத்தின் பெயரே என்னைக் கவர்ந்தது. ஆகவே நான் அதைக் காணச் சென்றேன். நடிகர்களுக்கு தகுந்த உடைகள் கொடுக்கப்பட்டிருந்தன. பல்வகையான பாத்திரங்களில் அவர்கள் நடிக்குமாறு சொல்லப்பட்டனர். அனைத்தும் தயாரான பின்னர் நாடகம் துவங்கப் போவதாக முதல்வர் அறிவித்தார். நாடகம் தொடங்கியது. நடிகர்களில் ஒரு சிலர் மேடையில் வந்து நடித்துவிட்டுச் சென்றனர். மற்றும் சிலரும் தங்கள் பகுதியை நடித்துவிட்டு மேடையிலிருந்து அகன்றனர். இப்படியாக தொடர்ந்து நிகழ்ந்தது.

நடிக்கத் தெரியாத அந்த நபரை பாருங்கள்! அவர் தனது பாத்திரத்தை உணர்ந்து பொறுப்பாக நடிக்கவில்லை. மற்றவர்கள் தமது பாத்திரத்தை நடிப்பதற்கும் இடையூருக இருக்கிறார். அவர் தனது உடையை சரி செய்து கொள்வதில் சுறுசுறுப்பாக இருக்கிறார். தனது ஆடையை அழகு படுத்திக்கொள்ளுகிறார். ஆனால் பாத்திரத்தை உணர்ந்து நடிக்கவில்லை. முதல்வர் இருப்பதாக அவர் நினைக்கவில்லை. நாடகம் ஒருபோதும் முடிவுறாது என்றும், தான் தன்னுடைய விருப்பம் போல் மேடையில் களியாட்டம் போடலாம் என்றும் அவர் நினைக்கிறார். அவர் தன்னை புத்திசாலி என்று நினைத்துக்கொள்கிறார். ஆனால் அவர் ஒரு முட்டாள். முதல்வரும், நகரப்பிரமுகரும் அவரைப் புரிந்து கொண்டனர். நாடகத்தையே

அவர் கெடுக்கிறார். முதல்வர் மன்னிக்கும் சுபாவ முள்ளவர். ஆகவே அவர் அந்த நடிகரை உடனடியாக மேடையை விட்டு அகற்றவில்லை. அந்த நடிகர் தன்னுடைய பங்கை நடித்து முடிக்கும்வரை முதல்வர் காத்திருந்தார். அதன் பிறகு அந்த நடிகரின் தவறுகளுக்காக அவர் தண்டிக்கப் பட்டார் அவர் அழுது புலம்பினார்.

இதோ ஒரு நல்ல நடிகர் வருகிறார். அவர் மிக அருமையாக நடிக்கிறார். அவருக்கு கடுமையான முதுகுவலி. ஆயினும் அவர் வலியைப் பொருட் படுத்தாமல் தன்னால் இயன்றவரை தன்னுடைய பாத்திரத்தை சிறப்பாக நடிக்கிறார். அந்தப் பாத்திரத்துடன் ஒன்றிப் போய்விட்டார். மூன்று மணி நேரத்துக்குப் பிறகு நாடகம் நிறைவுறும் என்றும் அதன் பிறகு முதல்வர் நடிகர்களின் நடிப்பு குறித்து தீர்ப்பு வழங்குவார் என்றும், அவருக்கு உறுதியான நம்பிக்கை உண்டு. அவருடைய கவலை யெல்லாம் தன்னுடைய திறமை முழுவதையும் பயன்படுத்தி சிறப்பாக நடிக்க வேண்டும் என்பது தான். அவர் சிறப்பாக நடிக்கிறார். அவர் நடித்த விதத்தை அனைவரும் இப்போது புகழ்கின்றனர். பார்வையாளர்கள் அனைவரின் இதயத்தையும் அவர் கவர்ந்துவிட்டார்.

நாடகம் விரைவில் நிறைவு பெற்றது. சிறந்த நடிகர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் மேடைக்கு அழைக்கப்பட்டு கௌரவிக்கப்பட்ட னர். முதல்வரும் நகரப்பிரமுகரும் அவர் களிடத்தில் தமது மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொண்டனர். சிறந்த நடிகர்கள் ஒவ்வொருவராக அழைக்கப்பட்டு பரிசுகளும், கோப்பைகளும் மற்றும் பல்வேறு பாராட்டுக்களும் வழங்கப்பட்ட னர். நடிகர்கள் பெருமகிழ்ச்சி அடைந்தனர். இது

ஒரு மகத்தான நாடக விழா. நான் வீட்டிற்குத் திரும்பும்போது நாடக விழாவில் நடைபெற்றதை மீண்டும் நினைத்துப் பார்த்தேன். பிறகு எனக்குள் பின் வருமாறு முணுமுணுத்துக் கொண்டேன்.

இதுபோன்றே உலகத்தின் நாடகத்தை ''இறை — அனுபவம்'' என்ற பெயரில் இறைவன் நடத்து கிறார். ஜீவாத்மாக்கள் குறிப்பிட்ட சில ஆண்டு களுக்கு பல்வேறு உடல்களைத் தாங்கி நடிப்பார்கள் என்று தீர்க்கதரிசிகள், துறவிகள் மூலம் இறைவன் அறிவிக்கிறார். அனைத்து உடல்களின் பேச்சும், மூச்சும், கணிக்கப்படும். அதன் பிறகு இறைவன் தீர்ப்பு வழங்கி சிறந்த நடிகர்களுக்கு தெய்வீக சபையில் ஞானிகளின் முன்னிலையில் நிலையான வாழ்வின் பரிசுகளையும், கோப்பைகளையும் வழங்கு வார். இறைவன் ஜீவாத்மாக்களுக்கு உடல்களைத் தந்து பல்வேறு பொறுப்புக்களையும் வகுத்து அளித் திருக்கிறார். உலகத்தை இறைவன் தோற்றுவித்த பொழுது இந்த உலக நாடகமும் துவங்கியது. ஒரு சில உடல்கள் வருகின்றன. தமது பங்கை நடித்துவிட்டு மறைந்துவிடுகின்றன. மற்றும் சில நடிகர்களும் இதுபோலவே வந்து மறைகின்றனர் இதுபோல தொடர்ந்து நடைபெறுகிறது.

நடிக்கத் தெரியாத அந்த நடிகரைப் பாருங்கள் அவர் தனது பாத்திரத்தை ஒழுங்காக நடிப்பதில்லை. பக்தி செய்யும் மற்றவர்களுக்கும் இடையூறாக இருக்கிறார். அவர் எப்பொழுதும் தனது உடலைப் பற்றியே கவலை கொண்டிருக்கிறார். அதற்கு உணவளிப்பதிலும், அதைப் பராமரிப்பதிலும் உலக இன்பங்களை அனுபவிப்பதிலும் அவர் சுறுசுறுப்பாக இருக்கிறார். இறைவனிடம் பக்தி செலுத்துவது இல்லை. இறைவன் இருக்கிறார் என்ற எண்ணமே அவருக்கு இல்லை. அவர் தனது அலங்கார

உடைகளைக் களைவதாக இல்லை. உடல் இன்பத்தை தனது விருப்பம்போல எப்பொழுதும் அனுபவிக்க விரும்புகிறார். அவர் தன்னை புத்திசாலி என்று நினைத்துக்கொண்டிருக்கிறார். ஆயினும் அவர் ஒரு முட்டாள். இறைவனும் அவரது திருக்கூட்டத்தாரும் இந்த நடிகரை எப்போதும் கவனித்துக் கொண்டிருக்கின்றனர். உலக நாடகத்தில் இவர் ஒரு கரும்புள்ளி. இறைவன் மன்னிக்கும் குணம் உடையவர் ஆகவே அவர் இந்த நடிகரை உடனே தண்டிப்பதில்லை. இந்த நடிகர் தனது நடிப்பை முடிக்கும்வரை இறைவன் காத்திருக்கிறார். அதன் பிறகு இறைவன் அவரைத் தண்டிக்கிறார். அந்த நடிகர் அழுகிறார்.

இதோ ஒரு நல்ல மனிதர் வருகிறார். இவர் தெய்வீக வாழ்க்கை வாழ்கிறார். அவருக்கு உடல் நலம் குன்றியிருக்கலாம். ஆனால் அவர் அதை மறந்துவிடுகிறார். அவர் தனது சக்தி முழுவதையும் பயன்படுத்தி இறைவனிடத்தில் பக்தி செலுத்து கிறார். என்றேனும் ஒருநாள் தான் இறப்பது உறுதி என்றும் நம்புகிறார். அப்போது இறைவன் அனைவருடைய வாழ்க்கையையும் சீர்தூக்கிப் பார்பார் என்றும் நம்புகிறார். அவருடைய கவலையெல்லாம் தன்னால் முடிந்த மட்டும் இறைவனுக்கு பக்தி செலுத்த வேண்டும் என்பதுதான். அவர் அனைவருடைய இதயங்களையும் கவர்ந்து விட்டார், அனைவரும் இப்போது அவரை புகழ்கின்றனர். அவர் உடலை வீசியெறிந்து விடுகிறபோது அவர் சகல மரியாதைகளுடனும் இறைவனுடைய திருச்சபைக்கு அழைத்துச் செல்லப்படுகிறார். இறைவனும், இறைவனுடைய திருச்சபையினரும் பக்தர்களைக் காணும்போது மகிழ்ச்சி அடைகின்றனர். இறைவன் அவர்களை ஒவ்வொருவராக அழைத்து நிலைபேறு என்னும்

பரிசுகளையும், கோப்பைகளையும் வழங்குகிறார். பிறகு அவர்கள் பெருமகிழ்ச்சியும், பேரானந்தமும் அடைகின்றனர்.

இந்த உலக நாடகத்தில் நாமெல்லாம் நல்ல நடிகர்களாக ஆவோமாக. நோய் மற்றும் மரணம் பற்றி கவலைப்படாதீர்கள். அவை நிச்சயம் வரும். சூழ்நிலைக்கு தகுந்தாற்போல் உங்களை சரிசெய்து கொள்ளுங்கள். தீவிரமாக பக்தி செலுத்துங்கள். உணவு, உடை, உலகியல் நடவடிக்கைகள் அனைத்தும் தேவையே. ஆனால் இவை அனைத்தையும்விட தெய்வ பக்தி முக்கியம். இதனைச் செய்வதற்காகத் தான் இறைவன் இந்த உடலைத் தந்திருக்கிறார். இப்போதாவது இதனைச் செய்து இறைவனுடைய பாராட்டுக்களுக்கும், புகழுரைகளுக்கும் தகுதியானவர்களாக ஆவோமாக. இறைவனின் திருச்சபையில் இந்தப் பாராட்டுக்களைப்பெற்று எல்லையில்லாப் பேரானந்தத்தை அனுபவிப்போமாக.



## சுவாமி சிவானந்தர் தமிழ் நூல்கள்

| | நூல் | விலை ரூ. |
|---|---|---|
| * | அறுபத்து மூன்று நாயன்மார்கள் வரலாறு | 7-00 |
| * | ஸ்ரீமத் ராமாயண சாரம் .... | 5-00 |
| * | கிருஷ்ணபரமாத்மா லீலைகள் .... | 5-00 |
| * | முருகன் திருவிளையாடல்கள் .... | 5-00 |
| * | மதங்களின் ஒற்றுமை .... | 5-00 |
| * | சிவானந்தரின் ரேடியோ உபன்யாசங்கள் | 4-00 |
| * | டாக்டர் தர்மபூஷணம் .... | 4-00 |
| | இந்து தர்மம் .... | 12-00 |
| | வாழ்விலும் ஆத்மானுபூதியிலும் வெற்றிக்கு நிச்சயமான வழிகள் .... | 12-00 |
| | ஸமாதி யோகம் .... | 12-00 |
| | நீதிநெறிக் கதைகள் .... | 7-00 |
| | இமயமலையின் வீரமுழக்கம் .... | 7-00 |
| | சுவாமி சிவானந்தரின் சுயசரிதை .... | 6-00 |
| | ஞானயோகம் .... | 6-00 |
| | சிவானந்தரின் சத்சங்க உபதேசங்கள் .... | 5-00 |
| | யோகவாசிஷ்டக் கதைகள் .... | 5-00 |
| | மாணவர்கள் வாழ்வில் வெற்றி .... | 4-00 |
| | கர்ம யோகம் .... | 4-00 |
| | சாதன சதுஷ்டயம் .... | 4-00 |
| | அன்பு, அஹிம்சை, தூய்மை .... | 4-00 |
| | வாழ்க்கையின் லக்ஷியம் .... | 3-00 |
| | சத்சங்கமும் ஸ்வாத்யாயமும் .... | 3-00 |
| | சங்கீர்த்தன யோகம் .... | 3-00 |
| | பெண்மணிகளுக்குப் பொன் மொழிகள் .... | 3-00 |
| | குரு தத்துவம் .... | 3-00 |
| | ஞான தீபம் .... | 3-00 |
| | சிவானந்த வாணி .... | 2-00 |
| | சிவானந்தர் மொழியமுதம் .... | 2-00 |
| | உருவ வழிபாடு ... | 2-00 |
| | தெய்வீக வாழ்க்கை (சுவாமி சிதானந்தா) .... | 5-00 |
| | இராஜயோகச் சொற்பொழிவுகள் ,, .... | 5-00 |
| | ஞானஒளிபெற நல்வழிகாட்டி ,, .... | 4-00 |
| | சீரிய வாழ்க்கைக்குச் சிறந்த வழிகாட்டி ,, .... | 3-00 |
| | சிதானந்தரின் அருட் செய்தி ,, .... | 3-00 |
| | சிதானந்தரின் சத்சங்க உபதேசங்கள் ,, .... | 2-00 |
| | சர்வரோக நிவாரணி (சுவாமி பூமானந்தா) | 3-00 |

* 85-ஆம் ஆண்டு புதிய வெளியீடுகள்

